டாக்டர் நா. மகாலிங்கம்

வீரமாமுனிவர்



குணங்குடி மஸ்தான்



மகாகவி பாரதியார்



# ஞானபரம்பரை

தொகுதி 7

வர்த்தமானன்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்

வழங்கும்

# ஞான பரம்பரை

அருளாளப் பெருமக்களின்

## வாழ்வு - வாக்கு - பணி

பற்றிய நூல் தொகுப்பு

## தொகுதி ஏழு

வர்த்தமானன் பதிப்பகம்

சென்னை - 17.

முதற் பதிப்பு : 2006
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

இரண்டாம் பதிப்பு : 2009
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

மூன்றாம் பதிப்பு : 2014
*(வர்த்தமானன் பதிப்பகம்)*

பத்து தொகுதிகளும் சேர்த்து
**விலை ரூ. 2500/-**

*வெளியீடு :*
**வர்த்தமானன் பதிப்பகம்**
21, இராமகிருஷ்ணா தெரு, சென்னை -17.

*அச்சிடல் :*
அருணா கிராபிக்ஸ், சென்னை -17. போன் : 24345058
ஈஸ்வரி ஆப்செட், சென்னை -5. போன் : 28480481, 42157817

# அருட்செல்வர் முன்னுரை

ஞானம் என்றால் என்ன?

மெய்யுணர்வினை – செம்பொருளைக் கட்டிக்காப்பது ஞானம். ஞாத்தல் என்றால் கட்டுதல். ஞாண் கட்டும் கயிறு என்று பொருள்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைக் கட்டி உள்ளத்தை ஓரிடத்தே நிறுத்துவது ஞானம்.

திருவள்ளுவர்,

*''சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு ''*

என்கிறார்.

புலன்களை அவை மேயும் பக்கமெல்லாம் அலையவிடாமல் தடுத்து, ஒரு நல்ல குறிக்கோளோடு பிணைப்பது அறிவு என்பது இத்திருக்குறளின் பொருள்.

ஆன்மிகவாதிகளின் குறிக்கோள் ''பிரமத்தில் - பரம்பொருளில் லயிப்பது - ஒன்றுவது''; அறிவியல்வாதிகளின் குறிக்கோள் ''ஒரு பௌதீகப் பொருளின் அல்லது நிகழ்வின் காரண காரியங்களை ஆராய்ந்து அவற்றை உறுதிசெய்து உலக நன்மைக்குப் பயன்படுத்துவது.''

ஆன்மிகம்கூட அறிவியலின் ஒரு பகுதியே என்பார்கள். களங்கள் வேறானாலும் நோக்கம், சமுதாய நன்மையாகவே முடியவேண்டும்.

பாரதியார் மிக அழகாகக் கூறினார்:

*''ஊருக்கு உழைத்திடல் யோகம் - நலம்*
*ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்*
*போருக்கு நின்றிடும்போதும் - உளம்*
*பொங்கல் இலாத அமைதி மெய்ஞ்ஞானம். ''*

உள்ளுணர்வாகிய மெய்யுணர்வால் உலக ஈடேற்றத்தைப் பற்றிச் சிந்திப்பது ஞானம்.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

*புத்தம் புதிய கலைகள் - பஞ்ச*
*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*
*மெத்த வளருது மேற்கே*
*அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை*

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர்கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

என்று திருமந்திரம் கூறுகிறது.

தெளிவு என்பது அறிவு - தெள்ளிய அறிவு - குற்றங்களைந்து இதுவென்று அறிந்து குணம் கொள்ளும் அறிவு - அதாவது ஞானம். ஆசிரியன் ஞானத்தைத் தருகிறான். எழுத்தறிவித்தவன் இறைவன் என்று கூறுவார்கள்.

*கல்வி கொடுத்தவன் வித்தியா குரு*
*தீக்கை அளிப்பவன் தீட்சா குரு*
*ஞானம் அளிப்பவன் ஞான குரு*

தீட்சா குரு தனிப்பட்டவனுக்கு ஞானம் அளிப்பவன். ஞான குருமார் சந்ததிகளுக்கே ஞானம் அளிப்பவர்கள். அவர்கள் உலக குரு என்றே சொல்லப்படுபவர்கள். புத்த பெருமான், திருஞானசம்பந்தர், ஏசு பெருமான், நபிகள் நாயகம், வள்ளற் பெருமான் முதலியயாவரும் உலக குருக்கள்.

மெய்கண்டார் முதலியவர்களைச் சந்தான குரவர் என்கிறோம். சந்தானம் என்பது தொடர்ச்சி. நமது மரபு தொடர்வது பிள்ளைகளால்தானே! ஆகையால், பிள்ளைகளுக்குச் சந்தானம் என்று பெயர்.

சந்தான ஆசாரியார்கள் சைவ சமய குரவர்களின் கருத்துக்களைத் தந்தை > மகன் என்னும் உறவுவழியே பரப்புவதை மேற்கொண்டார்கள். ஆழ்வார்கள் கூறிய கருத்துக்களை ஆச்சாரியர்கள் மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த ஞானத்தை இறையருளால் பெற்ற சான்றோர்கள் தங்கள் மாணவர்களுக்குச் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளைப் பரம்பரையில் காப்பாற்றிவந்தார்கள். இந்தப் பரம்பரையில் வந்தவர்களில் சிலர் மடங்களை உருவாக்கினார்கள். வைணவர்களும், சைவர்களும் இவர்களில் அடங்குவார்கள்; நூல்களை இயற்றினார்கள். போதனைகள் செய்தார்கள். சமுதாயத் தொண்டுகள் செய்தார்கள். சிலர் இயக்கங்களையே உருவாக்கினார்கள். குரு நானக் சீக்கிய இயக்கம் தோன்றக் காரணமானார். குரு கோவிந்த சிங் முதலாக இந்த இயக்கம் ஒரு சமயமாகவே உருவாகிவிட்டது. வள்ளற்பெருமான் அவ்வாறு ஓர் இயக்கத்தை உருவாக்கியவர்தான்.

பகவான் ரமணர் முதலியவர்களின் கொள்கை உலகெங்கும் பரவினாலும் மடங்களாக - இயக்கங்களாக மாறாமலேயே ஆன்மிக நாட்டமுடையவர்களுக்கு வழிகாட்டி வருகின்றது.

எப்படியிருந்த போதிலும் பாரதப் பெரும் பண்பாடு என்னும் ஜீவ நதியில் தோய்ந்து நீராடித் திளைத்து மகிழும் துறைகளாக இந்த ஞான பரம்பரை விளங்குகிறது.

வள்ளற் பெருமான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று தம்மை அந்த ஞான பரம்பரையில் வந்தவராகக் காட்டிக்கொள்வதைக் காண்கின்றோம்.

பரம்பரையில் பெறுவதைத்தான் நாம் சிறப்பாக ஞானம் என்று கொள்கிறோம்.

பாரதியார் சொல்கிறார் : 'ஒரு தேசத்தின் நாகரிகத்துக்கு அந்தத் தேசத்தின் இலக்கியமே மேலான அடையாளம்.'

இந்திய நாட்டின் மிகப் பெரிய அறிவுக் கருவூலமாகப் பெரியோர்கள் செய்த இலக்கியங்கள் கொட்டிக் கிடக்கின்றன. வடமொழியிலும் தமிழிலும்தான் ஆயிரக்கணக்கான நூல்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வற்றாத அறிவூற்றாக விளங்கிவருகின்றன.

வேதம், உபநிடதம், அவைகளிலிருந்து பிறந்த அறிவாராய்ச்சி நூல்கள், மனித வாழ்க்கையின் படப்பிடிப்புக்களாகிய இலக்கியங்கள், தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகிய அருள் நூல்கள், தத்துவ சாத்திர நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் என இந்நூல்கள் பல வகைப்படுகின்றன. பெரியவர்களின் வாக்குகள் அல்லாமல் அவர்கள் வாழ்க்கையும் இந்த இலக்கியங்களில் ஒரு பகுதியே. அவை பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய நூல்களாக அமைகின்றன.

இந்தியத் தத்துவ ஞானம் வேதங்களில் வேரூன்றி, உபநிடதமென்னும் மரமாய் வளர்ந்து, பல கிளைகளைப் பரப்பி, அரிய கனிகளை வழங்கிவந்துள்ளது. இந்த மரம் இன்னும் வேர்களையும் விழுதுகளையும் நெடுகப் பரப்பி இந்த நிலத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிவரும் என்பது உறுதி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் முழங்கினார்: ''ஒரு ஹிந்து நடந்து செல்கையில் அவன் தனியாக நடந்து செல்வதில்லை. அவனுக்குப் பின்னால் ஐந்தாயிரம் ஆண்டுக் கலாசாரம் அணிவகுத்துச் செல்கிறது'' என்றார்.

மாக்ஸ்முல்லர் கூறியதை இங்கு நாம் நினைவுகூர்வது நல்லது.

'மறுபிறப்பு என்று ஒன்று உண்டென்றால், நான் இந்தியாவில்தான் பிறக்க ஆசைப்படுகிறேன். அதுவும் ஒரு புழுவாகப் பிறந்தால் கூடப் போதும்.' தம் நண்பர்களிடம் இவ்வாறு எழுதிவைக்குமாறு அவர் கூறிச் சென்றார்.

இந்து மதம், மாணிக்கவாசகர் சொல்வதைப் போல், ''முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியது;'' என்றுமிருப்பது. அதனுடைய உலகளாவிய பொருள் தன்மையால் யாவரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. சத்தியம் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அதை வரவேற்கத் தன் கதவுகளை அகலத்திறந்து வைத்துள்ளது. ஆகவே, நம் ஞானிகள் இந்தியாவுக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே சொந்தமானவர்கள்.

''இந்து தேசத்திலுள்ள ஜீவனை யுகயுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடூரமான கலியில் உலகம் தலைகீழாகக் கவிழ்ந்துபோகும் சமயத்தில்கூட இந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவசக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை.''

— குள்ளச்சாமியார் என்னும் சித்தர் வாக்காக இவ்வாறு சொல்லிக் கொண்டேவரும் பாரதியார், ''மனவலிமையும் பொருள் வலிமையுமற்ற இந்திய அரசர்களாலோ, வேதமந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பத் சொல்லிக்கொண்டிருக்கும் பிராமணர்களாலோ, கொடைக்குணம் மறந்த வணிகர்களாலோ, மூடத்தன்மை மிக்க மற்றவர்களாலோ இந்தியாவுக்கு அமரத்தன்மை கிடைக்கவில்லை'' என்கிறார்.

இந்து தர்மத்தின் பெருமையைச் சொல்ல வந்த பாரதியார்,

''எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன் என்றுரைத்தான் கண்ணபெருமான். எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் ஆம் இந்தியா உலகிற்களிக்கும். வாழ்க'' என்று கூறினார்.

அமர கவியின் கண்களில் நமது ஞானபரம்பரை ஒன்றே சர்வ மத சமரசத்தைப் பேணிப் பாதுகாக்க வல்லது; அது ஒன்றே உலகிற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி உலகையே வாழ்விக்க வல்லது என்ற உண்மை தெரிகிறது.

அவரது வாக்குப் பொய்க்கவில்லை. பிற நாடுகளுக்கு நம் பெரியோர்கள் சென்றார்கள். சுவாமி விவேகானந்தர், சுவாமி இராமதீர்த்தர், பரஹம்ஸ யோகானந்த கிரி, இன்று மகேஷ் யோகி, முக்தானந்தர், பிரபுபாத பக்திவேதாந்த மகராஜ், சுவாமி சச்சிதானந்தர், பகவான் ரஜனீஷ், ரவிசங்கர், சின்மயாநந்தர், வேதாத்திரி மஹரிஷி ... என்று எத்தனை எத்தனை பேர்!

இவர்கள் சென்று ஆன்மிக ஒளியைப் பரப்பினார்கள். இங்கிருந்தவாறே தம் கதிரொளி பாய்ச்சியவர்களில் ரமண மகரிஷி, அரவிந்தர், சிவானந்தர், சத்திய சாயி இவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். எண்ணற்ற வெளிநாட்டவர்கள் தங்கள் ஒளியிழந்து, வாழ்க்கைக் களையிழந்து, மன இறுக்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமானால் இந்தியாவே கதி என்று இங்கு வருகிறார்கள்.

சுவாமி சச்சிதானந்தர் இரண்டு லட்சத்திற்கு மேலான அமெரிக்கர்களின் வாழ்க்கைமுறையைச் செம்மைப்படுத்தி யிருக்கிறார்கள். வெளிநாட்டு உபதேசியார்கள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் மதமாற்ற வேலையை இவர்கள் செய்வதில்லை. ஒழுக்கம், இறையுண்மை, சமுதாயத் தொண்டுணர்வு என்பனவற்றில் மட்டும் அவர்களுடைய மனம் செல்லும் வண்ணம் மடை மாற்றினார்கள்.

ஞான பரம்பரையைக் காத்துவந்த நல்லாசிரியர்கள் வாழ்ந்த காலத்தைப் பலவாறு ஆராய்ந்து நிர்ணயித்துள்ளார்கள். புத்தர் முதல் சேக்கிழார்வரை இந்த நிலையே நீடிக்கிறது. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு காலநெறிப்படி முறையாக எழுதப்படாத காரணமென்ன? இதற்கு முக்கியக் காரணம் ஒன்றைச் சொல்லலாம். மனிதர்கள் வாழ்வைக் காட்டிலும் மனிதர்களின் வாக்கு அல்லது அவர்கள் கடைப்பிடித்த நெறிகளே மேலானவையாக நம் முன்னோர்க்குத் தோன்றியிருக்க வேண்டும். புத்தருடைய வாழ்வைவிட அவர் போதனைகளே நாம் நினைவில் வைக்க வேண்டியவை. இராமானுஜர் செய்த அற்புதங்களைவிட அவர் தொண்டே நாம் போற்ற வேண்டியது. எனினும், பெரும்பாலும் உலகத்தின் ஏனைய பகுதிகளில் பெரியோர்களின் வாழ்க்கைகளைக் கால முறைப்படி நன்கு கணித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். நாம் அதுபோல நம் பெரியோர்களின் வரலாற்றைச் செம்மையாகப் பதிவு செய்து வைப்பது இன்றைய நிலையில் கட்டாயமானதுதான்.

இவர்களுடைய கால வரலாற்றின் பின்னணியில் நமது இதிகாச புராண வரலாறுகளின் காலங்கள் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த மறு ஆய்வு அடிப்படையில் சங்க காலச் சான்றோர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலங்களை வரையறுத்து நிறுவும் முயற்சியையும் நாம் இப்போது செய்துகொண்டுவருகிறோம் என்பதைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன்.

நம் பெரியோர்கள் வானத்தில் சப்தரிஷி நட்சத்திரங்களின் இயக்கத்தைக் கவனித்து, வைவஸ்தவ மனுகாலத்திலிருந்து கணக்கிட்டுவந்திருக்கிறார்கள்.

சப்தரிஷி மண்டலத்தின் இயக்கத்தை வைத்தே சப்தரிஷி சகாப்தம் என்பது வைவஸ்தவ மனுவின் காலத்தில் தொடங்கப்பட்டது. அது கி.மு. 15261 ஆகும்.

இதனடிப்படையில் வழக்கத்தில் உள்ள யுகக்கணக்கு முறையில் திருத்தம் காண முடிந்தது. இப்போது நடைபெறுவதாக நாம் சொல்லும் கலியுகம் என்றோ முடிந்துவிட்டது. கிருதயுகம் முடிந்து, உண்மையில் இப்போது திரேதாயுகம்தான் நடைபெறுகிறது.

சென்னையில் நாம் அமைத்துள்ள அனைத்துலகத் தொன்மை வரலாற்று ஆய்வுக் கழகத்தின்மூலம் இந்த ஆய்வுகள் செய்யப் பட்டுவருகின்றன. அதன்மூலம் பழைய ஆய்வு முடிவுகள் திருத்தம் பெற்றன.

ஆதிசங்கரருடைய காலம் கி.மு. 509 என்றும், ஒரு சதுர்யுகம் 12160 ஆண்டுகள் கொண்டது என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்களில் ஐந்து பேர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு முந்தியவர் என்று தெரிகிறது. சப்தரிஷி மண்டலம் (Great Bear) பற்றி இதுவரை வான நூலுள் விரிவான ஆய்வு செய்யப்படவில்லை. நாம் இப்போது அந்த ஆய்வுக்கு ஏற்பாடு செய்துள்ளோம். கூடிய விரைவில் சரியான கணக்குகள் நிர்ணயம் செய்யப்படும்.

பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி வாயிலாக நூல் வெளியீட்டுப் பணி மிகச் சிறப்பாக நடந்துவருகிறது.

மாணவர்களுக்கு நமது இந்தியப் பண்பாடு நாகரிகம் குறித்த பாடத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளுக்குமுன் நடைமுறைப்படுத்தி, அதற்கான சிறுசிறு நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு அக்கல்லூரி வெளியிட்டது. அப்புத்தகங்கள் வேறு சில கல்லூரிகளுக்கு முன் மாதிரியாக அமைந்தன.

பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தினர் நம்முடைய தேசியத் தலைவர்கள், விடுதலைப் போராட்ட வீரர்கள், பெரியோர்கள் வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக வெளியிட்டார்கள்.

ஈரோடு திரு. ஸ்டாலின் குணசேகரன் அவர்கள் சுதந்திரப் போராட்ட வரலாற்று வீரர்களின் சரித்திரத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்கள். அதுபோல் நமது இந்திய ஞான பரம்பரையைச் சேர்ந்த அருளாளர்கள் வரலாற்றைச் சிறு நூல்களாகக் கொண்டு வரவேண்டுமென்ற எனது விருப்பத்தைத் தமிழ்ச் சான்றோரும்

பேரறிஞருமாகிய டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களிடம் கூறி, நிறைவேற்றித் தருமாறு வேண்டினேன்.

என்னுடைய வேண்டுகோளை ஏற்று, மூதறிஞர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் நமது ஞான பரம்பரையைச் சேர்ந்த 30 அருளாளர்கள் - காரைக்காலம்மையார் முதல் சித்பவானந்தர் வரை - வாழ்க்கை பற்றியும் அவர்களின் வாக்குகள் பற்றியும் பல நல்லறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து, அரிய முறையில் மேற்பார்த்துத் தொகுத்து நூல்கள் வெளிவரச் சிறந்த முறையில் உதவியிருக்கிறார்கள்.

டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நூல்களை அரிய முறையில் எழுதியுதவிய அறிஞர் பெருமக்களைப் பாராட்டுகிறேன்.

இந்த வரலாறுகளை ஐந்து தொகுதிகளாக* அழகிய முறையில் முதல் பதிப்பாக வெளியிட்ட பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பதிப்புத்துறையில் உதவிசெய்த ஏனையோர்களுக்கும் எனது நன்றி.

முதல் பதிப்பு வந்து சில மாதங்களிலேயே பிரதிகள் தீர்ந்து விட்டன. இப்போது இரண்டாம் பதிப்பு எனது தலைமையில் இயங்கும் இராமானந்த அடிகளார் அறக்கட்டளை ஆதரவாலும் அந்த அறக்கட்டளையின் மூலம் நடைபெறும் குமரகுரு பொறியியல் கல்லூரியின் உதவியாலும் வெளிவருகிறது.

நூல்களை அற்புதமாக அச்சிட்டு முடித்த ருக்மணி அச்சக மேலாளர் திரு. பாலசண்முகம் அவர்களுக்கும், வேண்டிய படங்களைப் பயன்படுத்திக்கொள்ள உதவிய பெரியோர் களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ் உலகமும், இளைஞர் சமுதாயமும் இதனை வரவேற்றுப் பயனடைய வேண்டும் என்பது என் பேரவா.

நா. மகாலிங்கம்

*முதற் பதிப்பிற்கானது

# பதிப்புரை

முதற் பதிப்பிற்கானது

மாணவர்களின் முழுமையான ஆளுமை வளர்ச்சிக்கு வெறும் ஏட்டுக்கல்விமட்டும் போதாது. அதனுடன் விழுப்பொருள் உணர்வும் (sense for higher values) மாணவர்களிடையே பதிந்திட வேண்டும் என்பது எங்கள் நிர்வாகத்தின் லட்சியமாகும். இந்தக் குறிக்கோளை முன் நிறுத்தி அறவியல் மற்றும் சமயம் முதலான செவ்வியல் கருத்துக்களை மாணவர்களிடையே பரப்பி வருகிறோம்.

அந்தப் பணியின் வளர்நிலையில் தமிழ் ஞானிகள் முப்பதுபேர்பற்றி நூல்கள் வெளியிட வேண்டும் என்று அருட்செல்வரவர்கள் விரும்பினார்கள். எங்களை எல்லா வகையிலும் வழிநடத்துகின்ற அருட்செல்வரவர்களின் விருப் பத்தை முழுமனத்தோடு ஏற்று, இந்த நூல்வரிசையை வெளியிடுவதில் எம் அறக்கட்டளை பெருமை கொள்கிறது.

இந்தப் பணியில் உறுதுணையாக இருந்து பணியாற்றிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமிக்கும், அவருக்கு உதவியாகப் பிழைதிருத்தம் முதலான பணிகளை உவப்போடு செய்த பேராசிரியர் இருசுப் பிள்ளை, புலவர்மணியன், பேராசிரியர் தரணி பாஸ்கர், முனைவர் மனோன்மணி ஆகியோர்க்கும் எம் நன்றி உரியது.

வெளியிட்டுள்ள நூல்களை இளைஞர் உலகம் ஏற்றுப் போற்ற வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

இராமானந்த அடிகளார் அறக்கட்டளை
கோயமுத்தூர்

## நுழையுமுன் ஒரு சொல்

நரை திரை இன்றி இளமை நலத்தோடு விளங்கிய முதியவர் பிசிராந்தையார்; அவர் தம் இளமைத் தோற்றத்துக்குப் பல காரணம் சொல்லியுள்ளார். அவற்றுள் ஒன்று: 'சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!' அதாவது, 'நான் வாழும் ஊரில் சான்றோர்கள் பலர் வாழ்கின்றனர்; அதனால் நரை திரை மூப்புத் தோன்றாமல் நான் வாழ்கிறேன்' என்கிறார். வாழும் முறையாலும் வழங்கும் மொழிகளாலும் மனநலம் காத்தவர்கள் அந்தச் சான்றோர்கள். அவர்களுடைய வாழ்க்கையைப் பார்த்தும் வாசகங்களைக் கேட்டும் பிசிர் என்ற ஊரில் இருந்தவர்கள் மனவளம் பெற்றிருந்தார்கள். மனவளம் பெற்றமையால் வாழ்க்கையில் நிறைவு இருந்தது. பொறாமை, பொய் போன்ற தீமைகள் சாராமல் அன்பு, அருள், அறம் போன்ற நல்லவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்கு முதுமை நோய் வாராது. இது பெரியோர் அனுபவ மொழி.

அத்தகைய சான்றோர்களின் வாக்கு, வாழ்வு, வழிகளைத் தெரிந்து போற்றினால், சமூக வாழ்வு சிறக்கும்; குறிப்பாக, இளைஞர்கள் நலம் பெற்று, நாட்டை நன்கு வளர்ப்பார்கள்.

இந்தக் குறிக்கோளை நெஞ்சில் நிறுத்தித் தமிழகத்துச் சான்றோர் சிலரைப் பற்றி நூல்கள் வெளியிடும் முயற்சியில் உருவானது இது.

நல்லிளைஞர் மனவளம் பெற்று - அறிவு, அறம், அன்பு, பண்பாடு ஆகியவற்றைப் பேணி, நாட்டுக்கு நலம் செய்வர் என்ற நம்பிக்கையோடு அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் இந்த நூல் வரிசை பற்றித் திட்ட மிட்டார். அவர் தந்த திட்டத்தின் பயன் மக்களைச் சென்று அடைய நூல்களை வெளியிடும் பொறுப்பைப் பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி* நிர்வாகம் ஏற்றுக் கொண்டது.

பயன் பெறுக! பயன் பெறுக!

ம.ரா.போ. குருசாமி
ஒருங்கிணைப்பாளர்

---

*முதற் பதிப்பிற்கான செய்தி

தமிழரிடையே பணியாற்ற வந்த இத்தாலியர்; கத்தோலிக்கத் துறவி. பணியாற்றும் சூழலுக்கு ஏற்பக் கான்ஸ்டென்டைன் பெஸ்கி என்ற தம் இயற்பெயரை **வீரமாமுனிவர்** என மாற்றிக் கொண்டவர். தமிழகத் துறவிகளைப் போலவே காவியுடை அணிந்து, தமிழரொடு தமிழராய் வாழ்ந்த சமயத் தொண்டர். பரமார்த்தகுரு கதையில் பேச்சுத் தமிழ்நடையைக் கையாண்டவர்; திருக்குறளிலிருந்து தேர்ந்தெடுத்த குறட்பாக் களுக்குப் பேச்சுத் தமிழிலே உரை எழுதியவர். தமிழில் முதன்முதலாக அகராதி உருவாக்கியவர். தேம்பாவணி என்ற அருந்தமிழ்க் காப்பியத்தின் படைப்பாளி.

வீரமாமுனிவரைப் பற்றி நூல் எழுதியவர் டாக்டர் இரபிசிங்; தஞ்சை, சென்னை நகரங்களில் பல்லாண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகவும் துறைத்தலைவராகவும் பணியாற்றிய இவர்கீழ்ப் பலர் ஆய்வு செய்து பட்டம் பெற்றுள்ளனர். இப்போது இணையப் பல்கலைக்கழகத்தில் சிறப்பு நிலை ஆராய்ச்சி நெறியாளராகத் தொண்டாற்றுகிறார்.

இஸ்லாமியராகவும், தமிழ்ச் சித்த நெறியாளராகவும் தமிழ் அரங்கை அணி செய்து சிறப்பித்தவர் **குணங்குடி மஸ்தான்.** எளிய சொற்களில் இனிய சந்தம் அமையப் பெரும்பாலும் பழகு தமிழில் பாடியவர். இவரைப்பற்றி நூல் எழுதியவர் பல நூல்களை எழுதிய முனைவர் தக்கலை பஷீர் அவர்கள். இஸ்லாமியக் கலை ஆராய்ச்சி நிறுவனத்தில் நூலகப் பொறுப் பாளராக இருப்பவர்; ஆராய்ச்சியில் ஈடுபாடு கொண்டவர்.

தமிழரங்கிலே பாரதியார்கள் பல உண்டு. எனினும் முன்னொட்டு, பின்னொட்டு எதுவுமின்றிப் **பாரதியார்** என்று மட்டும் சொன்னால் தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியாரை மட்டுமே குறிக்கும். ஐயரவர்கள், பிள்ளையவர்கள் என்பன போலப் பாரதியார் என்பது காரண இடுகுறிப் பெயராக நிலை பெற்று விட்டது. சமுதாய உணர்வுக்கும் தேசிய உணர்வுக்கும் மிகுதியாக இடம் கொடுத்த படைப்பாளர் பாரதியார். பாரதியுகம்

என்று தமிழிலக்கியப் பரப்பில் ஒரு பருவத்தைக் குறிப்பிடு மளவுக்கு ஓங்கியது அவருடைய ஆளுமை.

பாரதியாரைப் பற்றி நமக்கு நூல் எழுதியுதவியவர் **கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம்** ஆவார். பாரதியாரையே தம் இலக்கிய வாழ்வுக்குக் குருநாதராக ஏற்றுக் கொண்ட 'சிற்பி', பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர்; அதற்கு முன் இந்த நூல் வரிசையை வெளி யிடும் ந.க.ம. கல்லூரியில் பணியாற்றியவர்; மொழிபெயர்ப்புக் காக ஒரு முறையும் கவிதைப் படைப்புக்காக மேலும் ஒரு முறையும் - ஆக இருமுறை சாகித்திய அகாதெமியின் பரிசு பெற்றவர். விருதுகளும் பரிசுகளும் ஏராளமாகப் பெற்ற இவர், பல கவிதை நூல்களையும் சில ஆராய்ச்சி நூல்களையும் உருவாக்கி யுள்ளார். பாரதியாரையும் வள்ளத்தோளையும் ஒப்பிட்டுச் செய்த ஆராய்ச்சிக்காக முனைவர் பட்டம் பெற்றவர் இவர்.



# தொகுதி ஏழு

**வீரமாமுனிவர்**

**முனைவர் ம.செ. இரபிசிங்**

**குணங்குடி மஸ்தான்**

**முனைவர் தக்கலை பஷீர்**

**மகாகவி பாரதியார்**

**முனைவர் சிற்பி பாலசுப்ரமணியம்**

# வீரமாமுனிவர்

## பொருளடக்கம்

# வீரமாமுனிவர்

## 1. ஐரோப்பியர் காலமும் வீரமாமுனிவரும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் 'ஐரோப்பியர் காலம்' குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பு வாய்ந்த காலமாகக் கருதப்படுகிறது; தமிழ் இலக்கிய மீட்சிக்கும் மறுமலர்ச்சிக்கும் வழிகோலிய ஒரு காலம். ஐரோப்பியர் வருகையால் ஏற்பட்ட அச்சு இயந்திர அறிமுகம், மொழிபெயர்ப்புகளால் ஏற்பட்ட கருத்துப் பரிமாற்றங்கள் மேலை இலக்கியங்களின் தாக்கம் ஆகியவை தமிழ் இலக்கியத்தில் பெரும் மாற்றங்களையும் வளர்ச்சியையும் உருவாக்கின. குறிப்பாகத் தமிழ் இலக்கியத்தில் பல புதிய இலக்கிய வடிவங்கள் வருவதற்கும், தமிழின் பெருமை - குறிப்பாக அற இலக்கியங்களின் சிறப்பு - உலகளாவிய நிலையில் பரவுவதற்கும் வாய்ப்பளித்த காலம் - ஐரோப்பியர் காலம்.

இக்காலக் கட்டத்தில் கிறித்துவச் சமயம் பரப்புவதற்காக வந்த ஐரோப்பியரில் சிலர், தமிழ்த்தொண்டராகத் தமிழ்ப்பணி செய்தமையும் மேற்குறிப்பிட்ட மாற்றங்களும் வளர்ச்சிக்குரிய காரணங்களாகும்.

மேலும், சமயத் தொண்டர்களாக வந்த ஐரோப்பியர்களில் சிலர், சிறந்த அறிஞர்களாகவும், கல்வியாளர்களாகவும், பன்மொழிப் புலவர்களாகவும், இலக்கிய ஈடுபாடுடையவர்களாகவும் திகழ்ந்தமை தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தியதோடு, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்தது.

மேற்குறிப்பிட்ட தமிழ் இலக்கிய வளத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்தவர்களுள் இராபர்ட் ஆண்டர்சன் (ROBERT

# வீரமாமுனிவர்

## பொருளடக்கம்

# வீரமாமுனிவர்

## 1. ஐரோப்பியர் காலமும் வீரமாமுனிவரும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் 'ஐரோப்பியர் காலம்' குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பு வாய்ந்த காலமாகக் கருதப்படுகிறது; தமிழ் இலக்கிய மீட்சிக்கும் மறுமலர்ச்சிக்கும் வழிகோலிய ஒரு காலம். ஐரோப்பியர் வருகையால் ஏற்பட்ட அச்சு இயந்திர அறிமுகம், மொழிபெயர்ப்புகளால் ஏற்பட்ட கருத்துப் பரிமாற்றங்கள் மேலை இலக்கியங்களின் தாக்கம் ஆகியவை தமிழ் இலக்கியத்தில் பெரும் மாற்றங்களையும் வளர்ச்சியையும் உருவாக்கின. குறிப்பாகத் தமிழ் இலக்கியத்தில் பல புதிய இலக்கிய வடிவங்கள் வருவதற்கும், தமிழின் பெருமை - குறிப்பாக அற இலக்கியங்களின் சிறப்பு - உலகளாவிய நிலையில் பரவுவதற்கும் வாய்ப்பளித்த காலம் - ஐரோப்பியர் காலம்.

இக்காலக் கட்டத்தில் கிறித்துவச் சமயம் பரப்புவதற்காக வந்த ஐரோப்பியரில் சிலர், தமிழ்த்தொண்டராகத் தமிழ்ப்பணி செய்தமையும் மேற்குறிப்பிட்ட மாற்றங்களும் வளர்ச்சிக்குரிய காரணங்களாகும்.

மேலும், சமயத் தொண்டர்களாக வந்த ஐரோப்பியர்களில் சிலர், சிறந்த அறிஞர்களாகவும், கல்வியாளர்களாகவும், பன்மொழிப் புலவர்களாகவும், இலக்கிய ஈடுபாடுடையவர்களாகவும் திகழ்ந்தமை தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தியதோடு, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்தது.

மேற்குறிப்பிட்ட தமிழ் இலக்கிய வளத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்தவர்களுள் இராபர்ட் ஆண்டர்சன் (ROBERT

ANDERSON), இராபர்ட்-டி-நொபிலி (ROBERT-DE-NOBILI), சோசப் பெஸ்கி (JOSEPH BESKHI) எனும் வீரமாமுனிவர், டாக்டர் ஆர், கால்டுவெல் (Dr. CALDWELL), டாக்டர் ஜி.யு. போப் (Dr.G.U. POPE), எஃப்.டபிள்யூ. எல்லீஸ் (F.W. ELLIS), பி.பெர்சிவல் (P.PERCIVEL) முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

### வீரமாமுனிவர்

தமிழுக்கு ஆக்கம் விளைவித்துத் தொண்டாற்றிய ஐரோப்பிய அறிஞர்களுள் பெஸ்கி எனும் வீரமாமுனிவர், தமிழராகவே வாழ்ந்த ஒரு பெருமகனார். தமிழில் சிறந்த காப்பியம் ஒன்றினையும் - சிற்றிலக்கியங்கள் பலவற்றையும் - இலக்கண நூல்களையும்- உரைநடை நூல்களையும் - அகராதிகளையும் இயற்றித் தமிழுக்குத் தொண்டாற்றிய பெருமைக்கு உரிய ஒரு பேரறிஞர் வீரமாமுனிவர்.

பதினெட்டாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் தமக்கென ஒரு தனி இடத்தைப் பெற்ற பெருமை வீரமாமுனிவருக்கு உண்டு.

வீரமாமுனிவர் செய்த எழுத்துச் சீர்திருத்தப்பணி, தலைசிறந்த ஒரு பணியாகத் திகழ்கிறது. தமிழ்மொழி வரலாற்றில் அது ஒரு மைல் கல் அல்லது திருப்பு மையம் எனினும் பொருந்தும்.

தம் சமயத்தைப் பரப்புவதற்குரிய ஒரு வாயிலாகத் தமிழ்மொழியை அவர் கற்கவில்லை. தமிழைத் தம் மொழியாகவே கருதிக் கற்றார். தமிழ் மொழியின் பெருமையை உணர்ந்து முழு ஈடுபாட்டுடன் அதைக் கற்றார். அறிவதற்கு அரிய ஒரு கருத்தை அறிந்தவுடன் அதனைப் பலருக்கும் அறிவிக்கவேண்டும் என்னும் உந்துதல் போல், தமிழின் பெருமையை உணர்ந்ததும் உடனே அதைப் பிறருக்குச் சொல்ல வேண்டும், பல இடங்களில் பரப்ப வேண்டும் என்ற பேராவலால் தமிழை உலகமெங்கும் கொண்டுசென்ற ஓர் அறிவாளி வீரமாமுனிவர்.

இந்தியாவுக்கு வருகை தந்ததின் நோக்கமாகிய சமயப்பணியை, ஓரளவுக்குச் செய்தாலும், பெருமளவிலே அவர் ஆற்றிய பணி தமிழ்ப்பணியே - தமிழ்த்தொண்டே யாகும்.

தமது தாய்மொழியாம் இத்தாலிய மொழிக்குச் செய்யாத தொண்டினைத் தமிழ்மொழிக்குச் செய்தார். பன்மொழிப் புலவராகிய வீரமாமுனிவருக்குத் தமிழ்மொழி முதன் மொழியாகியது. தமிழை வளப்படுத்தவேண்டும், அதன் இலக்கண

இலக்கியச் சிறப்பினைப் பிறருக்கு உணர்த்தவேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்பட்டார்.

சமயத் தொண்டாற்ற வந்த பிறமொழியாளர் ஒருவர், தமிழ்ப் புலவராகவும், தமிழறிராகவும், இலக்கண ஆசானாகவும், அகராதித் தொகுப்பாளராகவும், உரைநடை யாசிரியராகவும், மொழி பெயர்ப்பாளராகவும், எழுத்துச் சீர்திருத்தச் செம்மலாகவும் திகழ்வதென்பது மிகவும் அரிய ஒன்று. இத்தகைய அரிய ஒரு செயலுக்கு வீரமாமுனிவரின் வாழ்க்கையும் பணிகளுமே சான்று பகரும்.



# 2. வீரமாமுனிவரின் வாழ்க்கை

ஐரோப்பாவின் ஒரு பகுதியாகிய இத்தாலி நாட்டின் வெனிஸ் மாநிலத்தில் மாந்துவா மாவட்டத்தில் காஸ்தியோனே (Castiglione-delle-stiviere) எனும் ஊரில் *1680*-ஆம் ஆண்டு, நவம்பர் *8*-ஆம் நாள் பிறந்தார் நம் தமிழ் முனிவர்.

## பெற்றோர்

தந்தையாரின் பெயர் கவுண்ட் காண்டோல்போ பெஸ்கி (COUNT GANDOLFO BESHI). தாயார் பெயர் எலிசபெத் பெஸ்கி (ELIZABETH BESHI).

## பெயர்

பெற்றோர் மகனுக்குக் கொன்ஸ்டான்ஸ் ஜோசப் (CONTANZOGINSEPPE) என்று பெயரிட்டனர். பெஸ்கி என்பது குடும்பப் பெயர்.

## பெயர் மாற்றம்

'கொன்ஸ்டான்ஸ்' என்பதற்குத் 'தைரியம்' என்பது பொருள். வீரமாமுனிவர் தமிழ்நாட்டிற்கு வந்தபொழுது, தம் பெயரைத் 'தைரியநாத சுவாமி' என அமைத்துக்கொண்டார். வீரமாமுனிவுரது இயேசுநாதர் பணியினையும், தமிழ்ப் புலமையையும், ஈடுபாட்டையும் உணர்ந்த மதுரைத் தமிழ்ச்சங்கத்தார். தைரியநாத சுவாமியை 'வீரமாமுனிவர்' என அழைத்தனர். இறுதிவரையிலும் இப்பெயரே நிலைத்தது.

வீரமாமுனிவரது துறவின் பெருமையினை நன்கு அறிந்த அவருடைய நண்பர் சந்தா சாகிப், 'இஸ்மதி சந்நியாசி' எனப் பட்டம் வழங்கினார்.

## கல்வி

வீரமாமுனிவர் 1698-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21-ஆம் நாள் தமது 18-வது வயதில் கத்தோலிக்கத் திருச்சபையின் துறவோர் குழுக்களுள் இயேசு சபையில் (SOCIETY OF JESUS) சேர்ந்தார். இலக்கியக் கல்வி கற்ற பின்னர். ஓராண்டு தத்துவக் கல்வி பெற்றார். குருத்துவப் பணிக்குத் தேவையான கல்விப் பயிற்சியில் 12 ஆண்டுகள் ஈடுபட்டிருந்தார்.

இரவென்னா (RAVENNA) எனும் இடத்தில் 1700-ஆம் ஆண்டு முதல் 1701-ஆம் ஆண்டு வரை, தொடக்கநிலை ஆசிரியராக ஓராண்டு இலக்கணம் கற்பித்தார். இது, அவருக்குக் கொடுக்கப்பட்ட முதல்பணி. இவ்வாறு இடையிடையே இயேசு சபைக் கல்லூரிகளில் கல்வி பயிற்றுவதில் சிறப்புற்று விளங்கினார்.

பின்னர், 1701முதல் 1703 வரை இரண்டு ஆண்டுகள் போலோஞா (BOLOGNA) என்னும் இடத்தில் தத்துவம் கற்றார். அதன் பின்னர் 1703 முதல் 1706 வரை, மூன்று ஆண்டுகள் இலக்கணமும் இலக்கியமும் கற்றார். 1709 ஆம் ஆண்டு குருவாக நியமிக்கப்பட்டார்.

## பன்மொழிப் புலமை

தாய்மொழியாம் இத்தாலியைக் கற்றபின்னர், இலத்தீன், பிரஞ்சு, கிரேக்கம், எபிரேயம் (HEBREW), போர்த்துகீஸ் ஆகிய மொழிகளையும் நன்கு கற்றார். அதன்பின்னர் இந்துஸ்தானி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளையும் கற்றார். தமிழ்நாட்டிற்கு வந்த பின்னர்த் தமிழைக் கற்று மிகுந்த புலமை பெற்றார்.

பல மொழிகளைக் கற்றல் பலராலும் இயலும். ஆனால், அவற்றில் புலமையும் ஆளுகையும் எளிமையாகப் பெற இயலாது. அதற்குத் தனி அறிவாற்றல் வேண்டும். அத்தகைய ஓர் அறிவாற்றல் (GENIUS) மிகுந்த ஞானியாகத் திகழ்ந்தவர் வீரமாமுனிவர்.

## இந்திய வருகை

இயேசு சபைக்குருவாக நியமிக்கப்பட்ட வீரமாமுனிவர், சமயத்தொண்டு புரிய இந்தியாவுக்கு வருவதற்குத் தம் விருப்பத்தைத் தெரிவித்தார். இந்தியாவிற்கு வந்து சமயப்பணி புரியவேண்டும் எனும் தம் விருப்பத்தை 1706-ஆம் ஆண்டிலேயே போலோஞாவிலிருந்து மடல் ஒன்றின் வாயிலாகத் தெரிவித்தார் என

அந்தோனியோ சொர்ரெந்த தீனோ என்பவர் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[1]

தமது 30-ஆவது வயதில்1710-ஆம் ஆண்டு லிஸ்பானிலிருந்து இந்தியாவுக்குப் புறப்பட்டார். லிஸ்பானிலிருந்து புறப்பட்டு, போர்த்துகீசியக் கப்பலொன்றில் கோவாவிற்கு வந்தார். அங்குச் சில நாட்கள் தங்கிய பின்னர்க் கொச்சிக்கு வந்து சேர்ந்தார். கொச்சியின் அருகாமையிலுள்ள அம்பலக்காடு எனும் இடத்தில் அமைந்திருந்த இயேசு சபையினரின் குருமடத்தில் சில நாட்கள் தங்கினார்.

## தமிழகம் வருகை

அம்பலக்காட்டி லிருந்து புறப்பட்டுத் தமிழகத்தின் தென்பகுதியிலுள்ள தூத்துக்குடிக்கு வந்துசேர்ந்தார். தூத்துக்குடியின் அருகிலுள்ள கடற்கரைப் பகுதிகளில் சில மாதங்கள் தங்கியிருந்தார். பின்னர், மதுரை மறை பரப்பு மண்டலத்தைச் சார்ந்த காமன் நாயக்கன்பட்டிக்கு 1711-ஆம் ஆண்டு மேமாதம் 8-ஆம் நாள் வந்துசேர்ந்தார்.

## சூழல்

வீரமாமுனிவர் தமிழகத்திற்கு வருகை தந்தபொழுது குழப்பமான அரசியல் சூழல் இருந்தது. குறுநில மன்னர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண் டிருந்தனர்.

மேலும், தஞ்சாவூரை 1682 முதல் 1711 வரையிலும் ஆட்சி செய்த சாஜி எனும் மராட்டிய மன்னன் கிறித்தவர்களையும், கிறித்தவப் பாதிரிமார்களையும் மிகவும் துன்புறுத்தினான். மைக்கேல் பெர்ட்டோல்டி (Fr. MICHAEL BERTOLDI) எனும் பாதிரியார் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையில் அடைக்கப்பட்டிருந்த ஜோசப் கார்வல்கோ (Fr.JOSEPH CARVALHO) எனும் இன்னொரு பாதிரியார் சிறையிலேயே இறந்தார்.

சாஜிக்கு அடுத்து ஆட்சிக்கு வந்த சரபோஜியும் கிறித்தவர்களுக்கு மிகவும் தொல்லை கொடுத்தான். எனவே, கிறித்தவப் பாதிரிகள் தங்கள் உயிரையும் பணையம் வைத்துத்தான் இரவு நேரங்களில் மட்டுமே நடமாடக்கூடிய சூழல் இருந்ததது. தஞ்சாவூர் எல்லைக்கு வெளியே ஏலாக்குறிச்சியிலும், குமாம்பதியிலும் தங்க வேண்டிய நிலை ஏற்பட்டிருந்தது.

1. அமுதன் அடிகள், - இத்தாலி நாட்டு வித்தகத் தமிழர் - ப. 11.

மேற்குறிப்பிட்ட சூழலினால் வீரமாமுனிவர் அவரது பணியின் முதல் ஆறு ஆண்டுகளும் அடிக்கடி இடம் மாற்றிக்கொண் டிருந்தார். முதலில் திருநெல்வேலியின் அருகாமையி லுள்ள குருக்கள்பட்டியிலும் அதன்பின்னர்த் தஞ்சாவூர்ப் பகுதியிலும் பணியாற்ற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

## ஆடை மாற்றம்

தமிழுக்குத் தொண்டு செய்த கிறித்தவப் பாதிரிகளுள் குறிப்பிடத்தக்க ஒருவர் இராபர்ட்-டி-நொபிலி (REV.ROBERT-DE-NOBILI) இவர் *1606* முதல் *1656* வரை ஐம்பது ஆண்டுகள் தமிழகத்தில் சமயப்பணியும் தமிழ்ப்பணியும் ஆற்றிய ஒரு பெருமகனார். இந்திய சந்நியாசியைப் போல் ஆடை அணிந்து, இந்திய மக்களின் - குறிப்பாகத் தமிழர்களின் பழக்கவழக்கங்களைப் பின்பற்றி, தமிழ்மக்களோடு மிகவும் நெருங்கிப் பழிகித் தமிழராகவே வாழ்ந்தார்.

வீரமாமுனிவரும் இராபர்ட்-டி-நொபிலியை முன்னோடியாகக் கொண்டு 1711-இலேயே ஓர் இந்து சந்நியாசியைப் போல் காவி உடையணிந்து தலையில் வித்தியாசமான ஒரு தலைப்பாகையும் அணிந்து, சைவ உணவையே உண்டு ஒரு தமிழனாகவே தம்மை மாற்றிக்கொண்டார்.

## தமிழ் கற்றல்

வீரமாமுனிவர் தமிழ்மொழியை முறையாக யாரிடம் கற்றார், எவ்வாறு கற்றார், எப்பொழுது கற்கத் தொடங்கினார். எங்கே கற்றார் என்பவை பற்றிய உண்மையான செய்திகள் கிடைக்கவில்லை.

சுப்பிரதீபக் கவிராயரிடம் கற்றார் என்றும், அந்தோணிக்குட்டி அண்ணாவியாரிடம் கற்றார் என்றும் செவிவழிச் செய்திகளே உள்ளன. இவற்றிற்கு எந்தவிதச் சான்றாதாரங்களும் இல்லை.

புதிதாகத் தமிழகத்திற்கு வருகைதரும் கத்தோலிக்கக் குருமார்கள் தூத்துக்குடி, மணப்பாடு, புன்னைக்காயல் ஆகிய இடங்களில் தங்கித் தமிழ் கற்பது மரபு. தூத்துக்குடிப் பகுதியிலுள்ள முத்துக்குளித் துறையில் தமிழ் பயின்றதாக அறிகின்றோம் என அமுதன் அடிகளார் குறிப்பிடுகின்றார்.[2]

தமிழை நன்கு கற்றார் என்பதும், இளைஞர்களாகிய குருமார்களுக்குத் தமிழ் மொழியைக் கற்பித்தார் என்பதும்

2. அமுதன் அடிகள் நூல், ப. 21.

உண்மையெனப் பேராசிரியர் கா. மீனாட்சி சுந்தரனார் குறிப்பிடுகின்றார்.[3]

சமயக் கருத்துகளைத் தமிழனுக்குத் தமிழனாயிருந்து போதிக்கவேண்டும் என்னும் மதுரை மறைபரப்பும் சங்கத்தாரின் தீர்மானத்தை மனத்திற் கொண்டு, தமிழ்மொழியில் காப்பியம், இலக்கணம், அகராதி முதலியவை இயற்றும் அளவிற்குத் தம் புலமையை வளர்த்துக்கொண்டார்.

## பணிக் காலம்

காமநாயக்கன்பட்டியில் 1711-ஆம் ஆண்டே தமது சமயப்பணியைத் தொடங்கினார். அதே ஆண்டு, திருநெல்வேலிப் பகுதியிலுள்ள புதுப்பட்டி, குருக்கள்பட்டி ஆகிய சிற்றூர்களிலும் பணியாற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அதன்பின்னர் 1711 முதல் 1713 வரை தஞ்சாவூர் அரசாட்சிக்கு உட்பட்ட அய்யம்பட்டி என்னும் பகுதியில் இருந்துகொண்டே கயத்தாறு, காமநாயக்கன்பட்டி ஆகிய இடங்களுடன் தொடர்பு கொண்டு சமயப்பணி செய்தார்.

அதன்பின்னர், அதே ஆண்டிலேயே (1713) திருநெல் வேலிக்கு மாற்றம் பெற்றுச் சென்றார். அங்கு வீரமாமுனிவர் கைது செய்யப்பட்டுச் சிறையிலடைக்கப் பட்டார். சிறையிலிருந்து, தம் தலைமையிடமான உரோமாபுரிக்கு ஒரு மடல் எழுதினார். அம்மடலில் தமக்கு மரணதண்டனை வழங்கப்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டிருந்தார்.[4] பின்னர்ச் செல்வாக்கு மிகுந்த தம் நண்பர்களால் விடுதலை அடைந்தார்.

மறவநாடு எனும் பகுதியில் பொறுப்பை 1716-ஆம் ஆண்டு ஏற்றுக்கொண்டார். மேலும், ஏலாக் குறிச்சியிலும் மதுரையிலும் தம் பணியைத் தொடர்ந்து செய்தார். பிறகு, 1717 முதல் 1720 வரையிலும் காவிரியின் வடகரையிலுள்ள வடுகர்பட்டி என்னும் ஊரில் பணியாற்றினார்.

## கைதும் விடுதலையும்

வீரமாமுனிவர் குருக்கள்பட்டியில் பணியாற்றிக் கொண்டிருந்தபொழுது அவருக்கு ஒரு துன்ப நிகழ்ச்சி ஏற்பட்டது. முனிவர்மீது காழ்ப்பு உணர்வுகொண்ட ஒருவன், அப்பகுதியில்

3. K. Meenakshisundaram, The Contribution of Scholars to Tamil, P. 29
4. K. Meenakshisundaram, P. 30

கூடாரம் அமைத்திருந்த நாயக்கர் படைத்தலைவனிடம் வீரமா முனிவர் பொற்காசுகளைப் புதைத்துவைத்திருப்பதாக ஒரு பொய்த் தகவல் கொடுத்தான். அதை உண்மையென நம்பிய படைத்தலைவன், வீரமாமுனிவரை உடனே கைது செய்யுமாறு ஆணையிட்டான். படைவீரர்கள் வீரமாமுனிவரைக் கைது செய்வதற்காக அவர் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றனர். அப்பொழுது முனிவர் ஞானேந்திரன் எனும் வேதியரோடு கிறிஸ்து பிறப்பு விழாவிற்கான அலங்காரம் செய்து கொண்டிருந்தார். அங்கு வந்த படைவீரர்கள், தாம் வீரமாமுனிவரைக் கைது செய்வதற்கு வந்திருப்பதாகக் கூறினர். உடனே முனிவர், மிகவும் அமைதியாக, 'துறவியாகிய என்னைக் கைது செய்வதற்காக இத்தனை பேர் வரவேண்டியதில்லையே. நீங்கள் சொல்லி அனுப்பினால் நானே வந்திருப்பேன்' என்று குறிப்பிட்டார்.[5] வீரர்கள் முனிவரைக் கைதுசெய்து படைத்தலைவனிடம் அழைத்துச் சென்றனர். பிறகு படைவீரர்கள் கோயிலையும், குருக்கள் இல்லத்தையும் சோதனையிட்டனர். சோதனையின் விளைவாக அவர்களுக்குக் கிடைத்த பொருட்கள், கிறித்தவர்கள் கழுத்தில் அணியும் உலோகச் சுருபங்கள் மட்டுமே. புத்தாண்டு நாளன்று கிறித்தவர்களுக்கு வழங்குவதற்காக முனிவர் அவற்றை வைத்திருந்தார். அவை பொற்காசுகள் அல்ல என்பது நிரூபிக்கப்பட்ட பின்னர் வீரமாமுனிவர் விடுதலை செய்யப்பட்டார்.

## சந்தா சாகிப்பின் நட்பு

வீரமாமுனிவர் சமயப் பணியாற்றிக்கொண் டிருந்த காலத்தில், தமிழகத்தில் குழப்பமான அரசியல் சூழலிருந்தது, மராட்டியர், மொகலாயர், ஆந்திரர் ஆகியோர் தமிழகத்தில் அரசுரிமை பாராட்டினர். மதுரை மன்னர்க்கும் சேதுபதியார்க்கும் பகை ஏற்பட்டது. எனவே, தமிழ்நாட்டின் பல இடங்களில் போர் நடைபெற்றது.

கிறித்தவர்களுக்கும் கிறித்தவக் குருக்களுக்கும் பல்வேறு வகையான இன்னல்கள் ஏற்பட்டன. அவர்களது உயிருக்குப் பாதுகாப்பு இல்லாதிருந்தது. இத்தகைய சூழலில் வீரமாமுனிவர்க்கும் தஞ்சாவூரை ஆட்சி செய்த சந்தாசாகிப்பிற்கும் தொடர்பு ஏற்பட்டது. முனிவர் இந்துஸ்தானி, பாரசீகம் ஆகிய மொழிகளில் புலமை பெற்றிருந்ததை அறிந்து மிகவும் மகிழ்ந்த சந்தா சாகிப் முனிவரை நண்பராக ஏற்றுக்கொண்டான். சந்தா சாகிப்

5. அமுதன் அடிகள், ப. 33

வீரமாமுனிவரை, சிலகாலம் தனக்குத் திவானாகவும் நியமித்துக்கொண்டான் என்ற செய்தியும் வழங்கிவருகிறது (இதற்கு எந்தவிதச் சான்றுகளும் இல்லை).

சந்தாசாகிப் தன் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியில் வாழ்ந்த கிறித்தவர்களுக்கும், சமயக்குருக்களுக்கும் எந்தவிதமான இன்னலும் வராதவகையில் பாதுகாப்பு அளித்தான். அவனது ஆட்சி இருந்தவரையிலும் வீரமாமுனிவர் தொல்லை ஏதுமில்லாது தம் பணியைத் தொடர்ந்து செய்துவந்தார்.

## உடல்நலம் பாதிப்பு

இராமநாதபுரத்தை ஆட்சி செய்தவர்களுக்கும் தஞ்சாவூரை ஆட்சி செய்தவர்களுக்கும் 1714-இல் ஒரு சண்டை ஏற்பட்டது. தம் உயிரைப் பணயம் வைத்துத்தான் இப்பகுதியின் எல்லைக்குள் நுழையமுடியும் என்ற சூழல் இருந்தது. எனவே 1716-இல் ஏலாக்குறிச்சிக்கே வீரமாமுனிவர் சென்றுவிட்டார்.

நிலையான ஓர் இடத்தில் தங்கிப் பணியாற்ற முடியாமல் அடிக்கடி இடம் மாற்றிக்கொண்டு பல ஊர்களுக்குச் சென்றமையாலும், தட்பவெப்ப மாற்றத்தாலும், உணவாலும் அவரது உடல்நலம் மிகவும் பாதிக்கப்பட்டது. ஏலாக்குறிச்சியில் இருக்கும்பொழுது 1717-இல் அவரது உடலில் ஒரு பெரிய கட்டி ஏற்பட்டது. அதனால் அவர் மிகவும் துன்பப்பட்டார். பலநாட்கள் படுக்கையிலேயே இருந்தார். பிறகு, நண்பர்களின் வற்புறுத்தலாலும் அறிவுரையாலும் பாண்டிச்சேரிக்குச் சென்று மருத்துவச் சிகிச்சை பெற்றார். நோய் குணமாகிய பின்னர்ச் சிறிதுகாலம் அங்கேயே ஓய்வெடுத்துக்கொண்டார்.

## இறுதிக் காலம்

ஏலாக்குறிச்சியில்தான் நெடுநாட்கள் பணியாற்றினார். ஏலாக்குறிச்சியில் 1727-முதல் 1742 வரையிலும் தமிழ்ப்பணியைப் பெருமளவில் செய்தார். இங்கிருந்துகொண்டுதான் தமிழ் நூல்கள் பலவற்றை இயற்றினார் என்பர்.

மராட்டியர் படையெடுப்பு 1742-இல் நிகழ்ந்தது. மராட்டிய படைத் தலைவராகிய இராம்கோஜி போன்ஸ்லேயிடம், வீரமாமுனிவர் நண்பர் சந்தாசாகிப் தோல்வியுற்றார். சந்தா சாகிப் இருந்தவரையிலும் வீரமாமுனிவருக்குத் தம் பணியைத் தடையின்றி நடத்த முடிந்தது. சந்தா சாகிப்பின் வீழ்ச்சிக்குப் பின் தகுந்த

பாதுகாப்புடன் அவரால் செயல்பட முடியவில்லை. அதே ஆண்டு முனிவர் திருச்சிராப்பள்ளிக்கு வந்தார். அங்கிருந்து மணப்பாட்டிற்குச் சென்று, பின்னர் வேம்பாறு என்னும் இடத்திற்குப் போனார்.

பிறகு 1746-இல் கேரளாவிலிருக்கும் அம்பலக்காட்டிலுள்ள குரு மடத்தின்சிறப்பு அழைப்பாளராக (VISITOR) நியமிக்கப்பட்டார். அங்கிருக்கும்போது 1747-ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் நான்காம் நாள் தமது 66-ஆம் வயதில் உயிர் நீத்தார்.



# 3. வீரமாமுனிவரின் சமயப் பணி

வணிகத்தின் பொருட்டு இந்தியாவுக்கு வருகை தந்து, ஆட்சியில் பங்கேற்ற பின், சமயம் பரப்பும் நோக்குடன் பல ஐரோப்பிய கிறித்தவப் பாதிரிமார்கள் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார்கள். அவர்களுள் பலர், சமயப் பணியையே தலையாய பணியாகக் கொண்டிருந்தனர். ஒருசிலரே சமயப்பணிக்கும் அப்பாற்பட்ட நிலையில் தமிழ்ப்பணியிலும் ஈடுபட்டனர். இவர்கள் அனைவருமே இந்தியாவிற்கு வந்து சமயப் பணியாற்றுவதற்குத் தம் விருப்பத்தைத் தெரிவித்து வந்தவர்கள். அவ்வாறு தம் விருப்பத்தைத் தெரிவித்து வந்தவர் வீரமாமுனிவர், தம் தாய்நாடாகிய இத்தாலியிலிருந்து இந்தியாவுக்குச் சமயப்பணி செய்ய வந்தார்.

சமயப் பணியாற்ற வந்த வீரமாமுனிவர், மக்களோடு பழகி, அவர்களுடன் கலந்து அவர்களுள் ஒருவராகத் தம்மைக் காட்டிக்கொள்ள விழைந்தார். அதற்கேற்ப தமது ஆடை அணியும் முறையிலிருந்து, பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறை ஆகியவற்றையும் மாற்றிக் கொண்டார். சமயத் தொண்டராக மட்டும் அவர் வாழ விரும்பவில்லை, சமூதாயத் தொண்டராகவும் மொழித் தொண்டராகவும் செயல்பட விரும்பினார். சமயத் தொண்டாற்ற விரும்பி வந்தமையாலும் இயேசுவின் புகழ் பரப்பும் கிறித்தவச் சமயத் தொண்டராக அனுப்பப்பட்டமையாலும், சமயப் பணியை அவர் புறக்கணிக்கவில்லை. கிறித்தவச் சமயத்திற்காகத் தாம் செய்ய வேண்டிய நற்பணிகளையும் தங்கு தடையின்றிச் செய்துவந்தார்.

எப்படியாவது தம் மதத்திற்கு மாற்றவேண்டும் என்ற குறுகிய மனப்பான்மையுடன், கட்டாய மத மாற்றச் செயலில் அவர் எப்பொழுதும் செயல்பட்டதில்லை. மக்களிடம் பழகி, அவர்களிடம் தம் சமயக்கருத்தை எடுத்துரைத்து, அவர்களின் மனமாற்றத்திற்குப்

பின்னரே மதமாற்றத்திற்கு அனுமதித்தார். சமயம் பரப்புவதில் அவர் கையாண்ட முறையும், அவரது பரந்த மனப்பான்மையும் அவருக்குப் பிற சமயத்தைச் சார்ந்த பல நல்ல நண்பர்களை உருவாக்கின. இத்தகைய செயல்களே, அவரது தமிழ்த்தொண்டிற்கு எத்தகைய தடைகளையும் ஏற்படுத்தவில்லை.

## சமயக் கருத்துகள்

இயேசுவின் திருப்பணியையும், கிறித்தவச் சமயத்தையும் அறியாத ஒரு பகுதிக்கு-ஒரு நாட்டிற்கு வருகைதந்த வீரமாமுனிவர்,இயேசுவின் பெருமையினையும் அற்புதங்களையும் வெளிப்படுத்தும் கிறித்தவச் சமயக் கருத்துக்களை மக்களிடம் பரப்ப முற்பட்டார். அதற்காகப் பல நூல்களை எழுதி வெளியிட்டார்.

கிறித்தவ சமயத்தின் பெருமைகளை எடுத்துரைத்ததோடு, அச்சமயத்தைப் பின்பற்றினால் ஏற்படும் ஆன்மிக நன்மைகளையும் மக்களிடம் எடுத்து விளக்கினார். அவர் எழுதிய சமயம் சார்ந்த நூல்கள் அவற்றை வெளிப்படுத்தின.

கிறித்தவ சமயத்தைச் சார்ந்த வேதியர்களின் வாழ்வையும் பணியையும்பற்றி 'வேதியர் ஒழுக்கம்' எனும் ஒரு நூலை வீரமாமுனிவர் எழுதினார். இந்நூல் முனிவர் வாழ்ந்த காலத்தில் அச்சிடப்படாமல் கையெழுத்துப் பிரதியாகவே பயன்படுத்தப்பட்டு வந்தது. பின்னர் 1843-ஆம் ஆண்டு புதுவை மிஷன் அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. இந்நூலின் பெருமையினை உணர்ந்த ஜே.பி. திரிங்கால் என்பவர் இதனை இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்தார். பிறகு 'அத்யாபக சிலாமு' எனும் தலைப்பில் 1891-ஆம் ஆண்டு இந்நூல் தெலுங்கில் வெளிவந்தது.

இவ்வாறு சமயம் சார்ந்த கருத்துகளையும் சமய வாழ்க்கை முறைகளையும் பற்றி நூல்கள் இயற்றினார்.

## மறுப்புக் கருத்துகளை வெளியிடல்

தமிழகத்திற்கு வருகைதந்து, கிறித்தவ சமயத்தைப் பரப்பியவர்களுள் கத்தோலிக்கக் கிறித்தவர்கள் (Catholic Christians) சீர்திருத்தக் கிறித்தவர்கள் (Protestant Christians) என்ற இருபிரிவினர்களும் முக்கியமானவர்கள். இவர்களுக்குள்ளே

அடிக்கடி கருத்து மோதல்கள் நிகழ்ந்தன. வீரமாமுனிவர் கத்தோலிக்க கிறித்தவத் திருச்சபையைச் சார்ந்தவர்.

எனவே, சீர்திருத்த கிறித்தவப் பிரிவினர்கள் தெரிவித்த கருத்துகள் சில வீரமாமுனிவர் சார்ந்த கிறித்தவச் சபைக்கு ஒவ்வாதவைகளாக இருந்தன. அவற்றை எதிர்த்துத் தம் கருத்துகளை வெளியிட்டார். அவ்வாறு மறுப்பு கருத்துகளை வெளியிட்டாலும் பிறர் மனம் புண்படாதவாறு தம் கருத்துகளை வெளியிட்டார். தம் கருத்துகளை 'வேத விளக்கம்' என்று நூலின் வாயிலாக வெளியிட்டார்.

வேத விளக்கம் என்ற நூலுக்கு மறுப்பு நூலாகத் தரங்கம்பாடி லூத்தரன் சபையார் 'திருச்சபை பேதகம்'என்ற நூலை எழுதினர். அதற்கு மறுப்பாகப் 'பேதகம் மறுத்தல்' என்று நூலை எழுதினார்.

லூத்தரன் சபையைச் சார்ந்த சீகன் பால்கு என்பவர். 'தமிழ் இலக்கணம்', 'தமிழ் அகராதி'எனும் இரு நூல்களை எழுதி வெளியிட்டார். சீகன்பால்க்குவும் ஷுட்ஸ் என்பவரும் சேர்ந்து விவிலியத்தைத் தமிழில் மொழிபெயர்த்தனர். மேலும், தமிழ், தெலுங்கு, போர்த்துக்கீசியம் ஆகிய மொழிகளில் தங்கள் சமய நூல்களை இயற்றித் தம் சமயக் கருத்துகளை மக்களிடம் பரப்பினர். வீரமாமுனிவர், லூத்தரன் சபையார் வெளியிட்ட நூல்களிலுள்ள மொழிப்பிழையையும் கருத்துப் பிழையையும் சுட்டிக்காட்டி, 'லுத்தோர் இனத்தார் இயல்பு' எனும் நூலை வெளியிட்டார். இதன் பின்னர் லுத்தரன் சபையினர். வீரமாமுனிவருக்கு எதிராக மறுப்புக் கருத்துகளை வெளியிடும் செயலை நிறுத்திக்கொண்டனர். அதோடுமட்டு மல்லாமல். வீரமாமுனிவர் எழுதிய 'கொடுந்தமிழ் இலக்கணம்' என்ற நூலையும் தரங்கம்பாடி லுத்தரன் சபையாரே 1738-ஆம் ஆண்டு அச்சிட்டு வெளியிட்டனர்.

வீரமாமுனிவருக்கும் பிற கிறித்தவச் சமயப் பிரிவினர்க்கும் கருத்து மோதல்கள் ஏற்பட்டனவேயொழிய வன்முறைக்கு வழிவகுக்கவே இல்லை.

## ஆலயங்கள் நிறுவுதல்

கிறித்தவச் சமயப்பணியில் ஒரு பகுதியாக வழிபாட்டிற்குரிய ஆலயங்களை நிறுவுதல் என்பதைத் தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்.

கிறித்தவ சமயத்தைத் தழுவியவர்கள் கட்டுக்கோப்பாக இருக்கவேண்டும் என்று கருதினார். அதற்கு ஆலய வழிபாடு பேருதவியாக இருக்குமென நம்பினார். ஓரிடத்தில் கூடி, கூட்டு வழிபாடு செய்தல் சமுதாய ஒற்றுமையையும், ஒருங்கிணைப்பையும் சமத்துவத்தையும் உருவாக்கும் என்று கருதினார். அவற்றிற்கு ஆலயவழிபாடு வழிவகுக்கும் என்ற குறிக்கோளுடன் தாம் பணியாற்றிய இடங்களிலெல்லாம் கிறித்துவ ஆலயங்கள் நிறுவினார்.

ஆலயங்களைக் கட்டுவதில் தாமாகவே முன்னின்று, அப்பகுதி மக்களின் ஒத்துழைப்புடன் ஆலயங்களை உருவாக்கினார். விருத்தாச்சலத்திற்கு அருகாமையிலுள்ள கோனான்குப்பம் என்னும் ஊரில் ஓர் ஆலயத்தை நிறுவினார். அதன் பின்னர் ஏலாக் குறிச்சியிலும் ஒரு தேவாலயத்தைக் கட்டினார்.

## ஆலயங்களும் பெயரிடலும்

ஆலயங்களை நிறுவியதோடு அமையாமல் அவ்வாலயங்களில் அன்னை மரியாளின் திருவுருவத்தை அமைத்தலையும் மேற்கொண்டார். கோனான் குப்பம் என்ற ஊரில் நிறுவிய ஆலயத்தினுள் அன்னை மரியாளின் திருவுருவத்தை அமைத்தார். அவ்வன்னைக்குப் 'பெரியநாயகி' என இந்து சமயமுறையைப் பின்பற்றிப் பெயர் சூட்டினார்.

ஏலாக்குறிச்சியில் நிறுவிய ஆலயத்தில் எழுந்தருளிய அன்னை மரியாள் எல்லோருக்கும் அடைக்கலம் தருபவள் என்ற அடிப்படையில் 'அடைக்கல மாதா' என்று பெயர் சூட்டினார். மேலும், அவ்வாலயம் இருந்த பகுதி அன்னையின் அருட்காவலில் இருப்பதால் அப்பகுதிக்குத் 'திருக்காவலூர்' எனப் பெயரிட்டார். அவ்வூரின் பெயரிலேயே 'திருக்காவலூர்க் கலம்பகம்' எனும் நூலையும் இயற்றினார்.

வீரமாமுனிவர் அன்னை மரியாள்மீது மிகுந்த பக்தியும் ஈடுபாடும் கொண்டவர். எனவே, தாம் நிறுவிய ஆலயங்களுக்கு அன்னை மரியாளின் பெயரையே சூட்டினார்.

மேற்குறிப்பிட்ட ஆலயங்களைத் தவிர, புல்லுக்கட்டுவலசை, செம்பட்டியூர், கல்பாளையம் ஆகிய இடங்களிலும் கிறித்தவத் தேவாலயங்களைக் கட்டினார் என்றும் குறிப்பிடுகின்றனர்.[1]

1. கு. இன்னாசி, வீரமாமுனிவர், ப. 11

### சிற்றரசரின் நன்கொடை

வீரமாமுனிவர் தங்கி, சமயப் பணியாற்றிய ஏலாக்குறிச்சி, திருக்காவலூர் ஆகிய பகுதிகள் மதுரை மன்னருக்குத் திறை செலுத்தி வந்த அரியலூர் மழவராயர் எனும் சிற்றரசரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. குமார ரெங்கப்ப ஒப்பிலாத மழவராயர் (1715-1750) என்பவர் சிற்றரசராக இருந்தார்.

திருக்காவலூர்ப் பகுதியில் வாழ்ந்த மக்கள் வீரமாமுனிவரைப் பற்றிப் பல தவறான செய்திகளைப் பரப்பினர். அதோடு மட்டுமல்லாமல் சிற்றரசனிடம் வீரமாமுனிவரைப் பற்றிப் புகார் கொடுத்தனர். அரசர் முனிவரை அழைத்து வினவினர். உண்மை நிலையை அறிந்த மன்னர் வீரமாமுனிவருடன் நட்புகொண்டார் அவருக்குப் பல பரிசுகளை வழங்கினார். மேலும் திருக்காவலூரில் ஒரு கிறித்தவ ஆலயமும், குருக்கள் தங்குவதற்குரிய குடியிருப்பும் கட்டுவதற்கு நன்கொடையாக நிலமும் வழங்கினார். இதைப்பற்றிய செய்தி திருக்காவலூர்க்கோயில் சுவரில் பதிக்கப்பெற்றுள்ள பட்டயத்தில் பதிக்கப் பெற்றுள்ளது.[2]

### சந்தாசாகிப்பின் உதவி

திருச்சிராப்பள்ளிக்கு வடக்குப் பகுதியிலுள்ள கல்பாளையம் எனும் ஊரிலுள்ள கிறித்தவக் கோயில்களை 1735-ஆம் ஆண்டு முகமதிய வீரர்கள் அழிக்க முயற்சி செய்தனர். இதை அறிந்த வீரமாமுனிவர், அப்பொழுது ஆட்சியிலிருந்த தம் நண்பராகிய சந்தா சாகிப்பை அணுகி, அக்கோயில்களை அழிக்காது பாதுகாத்தார். மேலும் சந்தாசர்கிப், முனிவர்மீது கொண்டஅன்பாலும் மரியாதையாலும் தான் பாசறை அமைத்துத் தங்கியிருந்த பகுதியிலுள்ள கோயில்களுக்கும், கிறித்தவச் சமயப் பணிக்கும் எந்தவித ஆபத்தும் வராதவகையில் பாதுகாப்பு கொடுக்க ஏற்பாடு செய்திருந்தார். எனவே, அவரது பணி தொடர்ந்து நடைபெறுவதற்கு எந்தத் தடையும் ஏற்படவில்லை.

### பண்பும் பணியும்

முனிவர் தமிழகத்தின் சமயப்பணி தொடங்கும் பொழுது, கிறித்தவச் சமயப் பணியாற்ற இயலாத நிலையும் அரசியலிலும், சமுதாயத்திலும் குழப்பமான ஒரு சூழலுமிருந்தன. எனவே பல்வேறு சிக்கல்களுக்கு இடையே சமயப்பணி ஆற்ற வேண்டிய

2. அமுதம் அடிகள், ப. 79.

கட்டாயத்தில் முனிவர் இருந்தார். இருப்பினும் தொடர்ந்து சமயப்பணியாற்றுவதற்குக் காரணமாக அமைந்தவை அவரது அறிவாற்றுலும் பண்புநலன்களும் வேறுபாடின்றி எல்லோரிடமும் நட்புடன் பழகும் இயல்பும் ஆகும்.

தமது கல்வி ஞானத்தாலும், பன்மொழிப் புலமையாலும், தமிழ்த் தொண்டாலும், இயல்பாகப் பழகும் நற்பண்புகளாலும் வேறுபாடற்ற செயற்பாடுகளாலும் பிற சமயத்தைச் சார்ந்த அறிவாளிகளிடத்திலும், அதிகாரிகளிடத்தும், தலைவர்களிடத்திலும் மிகுந்த மரியாதைக்குரியவராகவும், நட்புக்குரியவராகவும் திகழ்ந்தார். அவர் இந்தியா வந்ததன் நோக்கம் சமயப்பணி. எனவே, அப்பணி இறுதி வரை தொடர்ந்து நடைபெற்றது.





# 4. வீரமாமுனிவரின் சமுதாயப் பணி

வீரமாமுனிவர் இந்தியாவுக்கு வந்ததின் நோக்கம் சமயப்பணியாக இருந்தாலும், சூழலினாலும் ஈடுபாட்டினாலும் சமூக சீர்திருத்த எண்ணத்தாலும், அவர் வாழ்ந்த பகுதியிலுள்ள மக்களுக்காகச் சமூகத் தொண்டாற்றவும் முற்பட்டார்.

## மக்கள் தொடர்பு

வீரமாமுனிவர் தாம் வாழ்ந்த பகுதியிலுள்ள மக்களோடு வேறுபாடற்ற நிலையில் கலந்து பழகி நட்புறவோடு வாழ்ந்தார். எனவே பல்வேறுவகையான சமூக ஏற்றத்தாழ்வுகள், அறியாமை, கல்வியின்மை, குழப்பமான அரசியல் சூழல்கள் முதலியனவற்றால் மக்கள் பெருமளவில் பாதிக்கப்பட்டிருந்ததை அனுபவத்தின் வாயிலாக உணர்ந்தார். தம்மால் இயன்ற அளவுக்கு அவர்க்கு உதவவேண்டும் என்ற எண்ணம் கொண்டார்.

மக்களின் அறியாமைக்குக் காரணம் கல்வியின்மையே என்பதை உணர்ந்த வீரமாமுனிவர் தாம் வாழ்ந்த பகுதியிலுள்ள மக்களுக்குக் கல்விகற்கத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தார். அதனால் பலர் கல்வி அறிவு பெற்றனர்.

## சமுதாய உணர்வு

பொருளாதார ஏற்றத் தாழ்வினால், பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களும், சமூக அமைப்பினால் சமூக அங்கீகாரமின்றி ஒடுக்கப்பட்டவர்களும் அடைந்த இன்னல்களை நேரடியாகக் கண்ட வீரமாமுனிவர், அவர்களது பிரச்சனைகளைத் தம் பிரச்சனையாகக் கருதி அவற்றிற்குத் தீர்வு காண மக்களோடு சேர்ந்து போராடினார். அவ்வாறு போராடும்போது தாம் ஒரு சமயத் தொண்டர் என்பதை மறந்து, சமூகத் தொண்டராகவே கிறித்தவர்,

கிறித்தவர் அல்லாதவர் என்ற வேறுபாடின்றிச் சமுதாயத்தில் பாதிக்கப்பட்ட அனைவருக்காகவும் பாடுபட்டார்.

## சமூகத் தொண்டு

திருச்சிராப்பள்ளிக்கு அருகாமையிலுள்ள ஆவூரில் நடந்த ஒரு நிகழ்ச்சி அவரது சமூகத்தொண்டிற்கு ஓர் எடுத்துக்காட்டு.

ஆவூருக்குப் பக்கத்தில் முகமதியப் படைவீரர்கள் தங்கியிருந்தனர். அவர்கள் பாளையத்திலுள்ள மாடுகளைத் திருடர்கள் திருடினார்கள். மாடுகளை யார் திருடினார்கள் என்று அறிந்து கொள்ள இயலாத படைவீரர்கள், ஆவூரில் உள்ள எந்தத்தவறும் செய்யாத அப்பாவி ஏழைமக்கள் சிலரைப் பிடித்துக்கொண்டு சென்றனர். பிறகு அவர்களை மிகவும் துன்புறுத்தினர். இதை அறிந்த வீரமாமுனிவர், உடனே படைவீரர்கள் தங்கியிருந்த பகுதிக்குச் சென்று படைவீரர்களைச் சந்தித்தார். அவர்களிடம் அந்த ஏழைமக்களுக்காக வாதிட்டார். ஆதாரங்கள் எதுவும் இல்லாமல் பிடித்துச் சென்றதும், அவர்களைத் துன்புறுத்துவதும் முறைகேடான செயல்கள் என்று கண்டித்து, அவர்களை உடனே விட்டுவிடவேண்டுமென்றும் வலியுறுத்தினார். இதனால் கோபம் அடைந்த படைவீரர்கள், வீரமாமுனிவரைக் கைது செய்து படைத்தலைவனிடம் அழைத்துச் சென்றார்கள். படைத்தலைவனிடம், தாம் இம்மக்களோடு நெருங்கிப் பழகுவதாகவும், இவர்களது இயல்புகள் நன்கு தெரியும் என்றும், இவர்கள் இந்தத் தவறைச் செய்திருக்கமுடியாது என்றும், வெளியூர் திருடர்களே மாடுகளைத் திருடியிருக்க முடியும் என்றும் உறுதியாகக் கூறினார். படைத்தலைவன், விசாரணைக்கு ஆணையிட்டான். விசாரணை மூலம் உண்மையைத் தெரிந்து கொண்ட படைத்தலைவன் வீரமாமுனிவரை விடுதலை செய்யுமாறு கூறியதோடு, தம் படைவீரர்கள் செய்த தவறுக்காக வீரமாமுனிவரிடம் மிகவும் வருந்தி மன்னிப்பு கேட்டான். மேலும் அவருக்குப் பல பரிசுகள் வழிங்கினான்.[1]

மேற்குறிப்பிட்டதைப் போல, தாம் வாழ்ந்த பகுதியிலுள்ள மக்களின் பிரச்சனைக்காக நீதிகேட்டுப் போராடிய பெருமை வீரமாமுனிவருக்கு உண்டு. இத்தகைய சமூகத் தொண்டுள்ளம் கொண்ட ஒரு சமூகத்தொண்டராக வீரமாமுனிவர் திகழ்ந்தார்.

1. கு. இன்னாசி, ப. 4



# 5. வீரமாமுனிவரின் தமிழ்ப் பணி

தமிழில் பெரும்புலமையும், பற்றும் ஈடுபாடும் கொண்ட தமிழராகிய ஒரு தமிழ் அறிஞர் செய்யும் தமிழ்த்தொண்டை விடவும் சிறந்ததொரு தமிழ்த் தொண்டினை ஒரு சமயத்தொண்டர் செய்தார் என்ற பெருமை இத்தாலி நாட்டைச் சார்ந்த வீரமாமுனிவருக்கு உண்டு.

## நோக்கம்

வீரமாமுனிவர் இந்தியாவுக்கு வந்ததற்கான நோக்கம் வேறு. ஆனால் இங்கு வந்த பின்னர், குறிப்பாகத் தமிழகத்திற்கு வந்த பின்னர், அவர் கொண்ட நோக்கத்திலிருந்து மாறாவிட்டாலும், புதியதொரு குறிக்கோளையும் ஏற்றுக்கொண்டார். தமிழுக்கு அருந்தொண்டு ஆற்றவேண்டும், தமிழின் பெருமைகளை உலகறியச் செய்ய வேண்டும், இயன்றஅளவுக்கு நூல்கள் படைத்துத் தமிழை வளப்படுத்தவேண்டும் என்பன போன்ற உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டிருந்தார். அக்குறிக் கோள்களை நிறைவேற்றுவதை ஒரு வாழ்நாள் பணியாக மேற்கொண்டு வெற்றி பெற்றார்.

## மொழிப் புலமை

இளமையிலேயே பல மொழிகளைக் கற்கும் ஆர்வம் வீரமாமுனிவருக்கு உண்டு. தமது 18வது வயதில் துறவேற்று இயேசு சபையில் சேர்ந்த வீரமாமுனிவர், தமது பயிற்சிக் காலத்திலேயே பிரெஞ்சு,கிரேக்கம், எபிரேயம், போர்த்துக்கீஸ், சமஸ்கிருதம், இந்துஸ்தானி ஆகிய மொழிகளை நன்கு கற்றார். அக்காலத்தில் தமிழின் பெருமை ஐரோப்பாவை எட்டவில்லை. எனவே, வீரமாமுனிவருக்குத் தமிழைக் கற்கும் வாய்ப்பு

ஐரோப்பாவில் ஏற்படவில்லை. இந்தியாவுக்கு வந்த பின்னரே, தமிழைக் கற்கும் சூழல் உருவாகியது.

இன்னொரு மொழியைக் கற்கும் ஆர்வமும், சமயம் பரப்ப வந்த பகுதியிலுள்ள மக்கள் பேசும் மொழியைக் கற்கும் தேவையும் தமிழ்மொழியைக் கற்பதற்குரிய காரணங்களாக அமைந்திருக்கலாம். ஆனாலும், கற்ற அளவிலேயே நின்றுவிடாமல், தமிழ்மொழியில் புலமை பெற்று, அதை ஆய்வு செய்து, மொழி பெயர்த்து, எழுத்துச் சீர்திருத்தம் செய்து, இலக்கணம் எழுதி, பல்துறை நூற்கள் பல படைத்துத் தொண்டாற்றியதற்குரிய அடிப்படைக் காரணம் தமிழ்மொழியின் பெருமையை அவர் உணர்ந்தமையேயாகும். அது தமிழுக்குக் கிடைத்த பெரும் பேறேயாகும்.

வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டிற்குரிய அடையாளங்களாகத் திகழ்பவை, அவர் படைத்த நூல்களே யாகும்.

## படைப்புகள்

தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட ஒருவர், படைக்கும் படைப்புகளைப்போல அளவிலும் தரத்திலும் சிறந்த பல படைப்புகளை வீரமாமுனிவர் படைத்தார்

தமிழின் பழைய மரபுகளைப் பின்பற்றி ஓர் அருமையான காப்பியம் இயற்றினார். சிற்றிலக்கியங்கள் படைத்தார். இலக்கணங்கள் இயற்றினார். உரைநடை நூல்கள் எழுதினார். முதல் தமிழ் அகராதியை யாத்தார். இருமொழி அகராதி, பன்மொழி அகராதி என அகராதிகள் படைத்தார். மொழிபெயர்ப்புகள் பல செய்தார்.

செய்யுள் நூல்கள் எட்டும், இலக்கண நூல்கள் நான்கும், அகராதிகள் மூன்றும், மொழிபெயர்ப்புகள் ஒன்பதும், தொகுப்புகள் இரண்டும் ஆக 26 நூல்கள் எழுதியுள்ளார் எனப் பேராசிரியர் சூ.இன்னாசி பட்டியலிடுகிறார். ஆனால் பா. வளன்அரசு அவர்கள் 38 நூல்கள் எனத் தமது ஆய்வில் சுட்டுகிறார். நூல்களின் எண்ணிக்கையைப் பற்றி இன்னும் பல கருத்துகள் நிலவுகின்றன. அவர் பதிப்பித்து வெளியிடப்படாத பல நூல்கள் ஐரோப்பாவின் நூலகங்களிலுள்ளன என்றும் கூறப்படுகின்றது.

## கவிதை நூல்கள்

தாய்மொழியில்லாத பிற ஒருமொழியில், அதிலும் மொழிஅமைப்பிலும், தன்மையிலும் மரபிலும் ஒலித்தலிலும் முற்றிலும் அந்நியமான ஒரு மொழியைக் கற்று, அதில் புலமை

பெற்றுக் கவிதை இயற்றுவது என்பது எளிய ஒரு செயல் அன்று. அம்மொழியின் இலக்கிய-இலக்கண மரபும், மொழி ஆளுமையும், நினைத்த கருத்தைக் கற்பனை வளத்தோடு எடுத்து இயம்பும் ஆற்றலும் பெற்றிருந்தால்மட்டுமே கவிதை இயற்ற இயலும்.

கிறித்தவச் சமயத்தைப் பரப்புவதற்காக வந்த சமயத் தொண்டர்களுள் ஒருசிலரே இத்தகைய ஆற்றலைப் பெற்றிருந்தனர். இராபர்ட்-டி-நொபிலி, சீகன்பால்கு, எல்லீஸ், சி.டி.இ. இரேனியஸ், டாக்டர் கால்டுவெல், வீரமாமுனிவர் ஆகியோரே தமிழில் கவிதை இயற்றும் ஆற்றல் பெற்றனர்.

இராபர்ட்-டி-நொபிலி, இறைவனின் பாடுகளைப் பற்றியும், உண்மையான சமயத்தின் விண்ணப்பம் பற்றியும், நிலையான வாழ்வு பற்றியும் மூன்று கவிதை நூல்களை இயற்றினார்.

சீகன்பால்கு செர்மன் மொழியிலுள்ள 48 பாடல்களை மொழிபெயர்த்து ஒரு கவிதை நூலை 1713இல் படைத்தார்.

எல்லீஸ் கொச்சகக் கலிப்பாவில் ஐந்து கவிதை நூல்களை இயற்றினார்.

கால்டுவெல் வீரமாமுனிவருடன் சேர்ந்து வெளியிட்ட கிறித்தவக் கீர்த்தனையில் ஒரு பாடல் பாடியுள்ளார்.

ஆனால், வீரமாமுனிவர், காப்பியம் ஒன்றும், அந்தாதி, அம்மானை, கலம்பகம், கலிப்பா, மாலை, பதிகம், வண்ணம் எனப் பலவகைக் கவிதைகளைப் பாடிய பெருமை பெற்றார்.

தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிராத வீரமாமுனிவர் காப்பியம் ஒன்றினையும் பல சிற்றிலக்கிய வகைகளையும் இயற்றியது தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒரு பெரும்சாதனை எனலாம்.

### காப்பியம்

எந்த ஒரு மொழியாக இருந்தாலும் அந்த மொழியில் காப்பியம் இயற்றியோர் மிகச் சிலரே. ஏனென்றால், இலக்கிய வடிவங்களில் சிறந்தாகக் கருதப்படும் காப்பியம் இயற்றுவது என்பது ஒரு வாழ்நாள் முயற்சி. அம்முயற்சியில் முழுமையாக ஈடுபட்டு வெற்றி பெறுவது என்பது எளிதான ஒன்றல்ல. எனவேதான், கிரேக்க இலக்கியத்தில் ஹோமரையும் ஆங்கிலத்தில் மில்டனையும் பெருமைக்கு உரியவர்களாகப் போற்றுகின்றனர். தமிழிலும்

இளங்கோ, சீத்தலைச் சாத்தனார், கம்பன், திருத்தக்கத் தேவர் பெற்ற சிறப்பு தன்னிகரற்றது. இத்தகைய பெருமையைத் தாம் படைத்த தேம்பாவணிக் காப்பியத்தின் வாயிலாகப் பெற்றவர் வீரமாமுனிவர். மேலும், தாய்மொழியல்லாத பிறிதொரு மொழியில் காப்பியம் இயற்றிய வரலாற்றை உருவாக்கிய பெருமைக்குரியவரும் வீரமாமுனிவரே.

## தேம்பாவணி

### தேம்பாவணிபற்றிய பொதுச் செய்தி

"இயேசு நாதரின் வளர்ப்புத் தந்தையாகிய சூசை மா முனிவன் வரலாற்றைக் காப்பியமாகக் கூறும் இந்நூலுக்கு வீரமாமுனிவர் இட்டபெயர் தேம்பாவணி. 'தேம்பா அணி' எனப் பிரித்து, 'வாடாத மாலை' எனவும் 'தேன் பா அணி' எனப் பிரிந்து 'தேன் போன்ற பாக்களாலான மாலை' எனவும் இது காரணப் பொருள் பெறும். சிந்தாமணிக் காப்பியம் தலைவனாகிய சீவகனும் சிந்தாமணி என வாழ்த்தப்பெற்று அதனையே காப்பியப் பெயராகவும் கொண்டதுபோல்,

"ஆடா நிலை அறத்து என் மார்பில் தேம்பாவணி ஆவான்
வாடா அருள் மகன்"

என ஆண்டவனே குரல் கொடுத்துச் சூசையைப் போற்றியமையால், அதுவே காப்பியப் பெயராக அமைந்ததென்று கொள்ளலாம்' என பேராசிரியர் வி. மரிய அந்தோணி தேம்பாவணியைப்பற்றிக் குறிப்பிடுகின்றார்.

வீரமாமுனிவர், தாம் இக்காப்பியத்திற்குத் தேம்பாவணி என்று பெயர் சூட்டுவதற்குரிய காரணத்தை,

'வாடா நறுமலர் வகுத்த அணி எனும்
வீடா மதுக்கவி வீக்கிய அணி எனும்
தேவுலகு ஏற்றும் தேம்பாவணிஎனும்
பூவுலகு அறியப் புகழ்வதைப் பெயர் என'

என்று காப்பியத்திற்குப் பெயர் சூட்டியதற்குரிய காரணத்தைக் காப்பியத் தொடக்கத்திலேயே குறிப்பிடுகின்றார். மேலும் தாம் காப்பியம் இயற்றிய காரணத்தையும், கூறுகின்றார். பொய் நீங்க, பாவம் நீங்க, பாவச் செயல் நீங்க, உண்மையான அறத்தை அனைவரும் விரும்பிச் செம்மையான வழியில் செல்வதற்காக

இக்கதையைத் தேர்ந்தெடுத்துக் காப்பியம் அமைத்ததாகக் காரணம் கூறுகின்றார்

> பொய்அற, புரை அற, புரைதரும் வினை அற,
> மெய்அறுத்து, அனைவரும் விரும்புஉறீஇ வீடுஉற,
> வதை உரும் செவ்வழி ஆசு அற விளக்க இக்
> கதை உகுத்து உரைத்த காரணம் இது.

காப்பியம் அமைத்ததின் காரணத்தை மட்டுமல்லாமல், நூல் வந்த வழி காப்பியப் பகுப்பு, காப்பியப் பயன் ஆகியவற்றையும் முதலிலேயே குறிப்பிடுகின்றார்.

தமிழில் இயற்றப்பெற்ற காப்பியங்களுள் தேம்பாவணிக் கெனச் சில சிறப்புகள் உண்டு. தமிழர் அல்லாத ஒருவரால் இயற்றப் பெற்ற ஒரு காப்பியம்; இலக்கியம் படைக்கும் புலமை ஒன்றினையே கொண்டு வாழ்க்கை நடத்தும் ஒரு கவிஞரால் இயற்றப்பெறாமல், பல்வேறு பணிகளில் ஈடுபட்ட ஒருவரால் இயற்றப்பெற்ற ஒரு காப்பியம்; பன்மொழிப் பயிற்சியும், பல இலக்கியங்களின் அறிவும் பெற்ற ஒருவரால் இயற்றப்பெற்ற ஒரு காப்பியம்; காப்பியத் தலைவனே தூது செல்லுமாறு கதை அமைப்புக் கொண்ட ஒரு காப்பியம் எனப் பல சிறப்புகள் கொண்டது தேம்பாவணி.

பிற்காலத்தில் இடைச்செருகல் நிகழாத வகையில் முன்னெச்சரிக்கையாகக் காப்பியத்திலேயே பாடல்கள், படலங்கள் ஆகியவற்றின் எண்ணிக்கையை ஆசிரியர் தேம்பாவணியில் குறித்துள்ளார். கீர்த்தனை, சிந்து, வசனகாவியம், விருத்தியுரை, உரைநடை, சுருக்கம் ஆகிய பல்வேறு வடிவங்களைப் பயன்படுத்தி இக்காப்பியம் இயற்றப்பெற்றுள்ளது.

தமிழிலுள்ள ஐம்பெருகாப்பியங்களுள் ஒன்றான சீவக சிந்தாமணியைப் பின்பற்றி எழுதப்பட்டுள்ளது. திருவள்ளுவர், சேக்கிழார், மாணிக்கவாசகர், கம்பர் முதலிய பல புலவர்களின் சொல்லும் பொருளும் தேம்பாவணியில் இடம் பெற்றுள்ளன. கம்பர் தம் காப்பியத்தில் 86 வகையான சந்தங்களைப் பயன்படுத்தியுள்ளார். ஆனால், வீரமாமுனிவர் 90 வகையான சந்தங்களைப் பயன்படுத்தியுள்ளார்.

மேலும், மேலைநாட்டுப் பெரும் புலவர்களாகிய ஹோமர், வெர்ஜில், தாந்தே, தாசோ போன்றோர் கருத்துகளையும் தம் காப்பியத்தில் வீரமாமுனிவர் எடுத்தாண்டுள்ளார்.

### கதையின் மூலம்

விவிலியத்தில் ஐந்து இடங்களில் இடம் பெறும் சில வரிகளில் சொல்லப்பட் டுள்ள இயேசுவின் தந்தையாகிய யோசேப்பின் (JOSEPH) வரலாற்றைத் தேம்பாவணிக் காப்பியம் மையமாகக் கொண்டுள்ளது. ஆனால், இது ஒரு காவியமாக அமைவதற்கு அடிப்படையாக இருந்தது கி.பி.*1666*-இல் இஸ்பானியா மொழியில் ஆகிருத மரியாள் என்னும் பெண்துறவி எழுதிய கடவுளின் நகரம் (City of God) எனும் நூலாகும். வீரமாமுனிவர் வாழ்ந்த காலத்தில் 'கடவுள் நகரம்' எனும் நூல் மக்கள் மத்தியில் செல்வாக்கு மிகுந்த ஒரு சிறந்த நூலாகக் கருதப்பட்டது. ஐரோப்பாவிலுள்ள பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டது. எனவே, அந்நூலை அடிப்படையாகக் கொண்டு இக்காப்பியத்தை இயற்றினார் என்பர்.[1]

### கருத்துகள்

விவிலியத்திலிருந்து **105** வரலாற்றுப் பகுதிகளும், கிறித்தவத் திருச்சபைகளின் கொள்கைகளும், அறிவுரைகளும் வழிபாட்டு முறைகளும் கதைவடிவிலும் தத்துவ வடிவிலும் காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன.

### காலம்

'இயேசுவின் வளர்ப்புத் தந்தையாகிய புனித யோசேப்பின் வரலாற்றை எடுத்து இயம்பும் ஒரு புனிதமான காப்பியம் தேம்பாவணி. இது **1729**-ற்கு முன்னரே இயற்றப்பெற்றிருக்க வேண்டும். பல ஆண்டுகள் கடின உழைப்பிற்குப் பின்னரே இக்காப்பியம் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும்'[2] என்று பேராசிரியர் கா. மீனாட்சி சுந்தரனார் குறிப்பிடுகின்றார். தேம்பாவணி **1726**-லேயே இயற்றப்பட்டதாகச் சிலர் குறிப்பிடுகின்றனர். கவிஞர் ஏலாக்குறிச்சியில் சமயப் பணியாற்றிய காலத்தில், அங்கேயே வெளியிட்டது என்றும் கூறுகின்றனர். ஆனால், அவற்றிற்குரிய நம்பத்தகுந்த சான்றாதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை.

### காப்பிய அமைப்பு

தேம்பாவணிக் காப்பியம் மொத்தம் **3615** பாடல்களையும் **36** படலங்களையும் உடையது. பாயிரத்தில் **13** பாடல்கள் இடம்

1. கு. இன்னாசி, ப. 4
2. K. Meenashisundaram, P 133.

பெற்றுள்ளன. இது மூன்று காண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மூன்று காண்டங்களாக முனிவரால் பிரிக்கப்படவில்லை. அச்சிட்டு வெளியிட்டவரால் பிரிக்கப்பட்டிருக்கலாமென அருள்திரு இரா. ஞானப்பிரகாசம், அமுதன் அடிகளார் போன்றோர் கருதுகின்றனர்.

### உரை

தேம்பாவணியின் உரையை முனிவரே எழுதினார் என்றும், அவருடைய மாணவர்களுள் ஒருவர் எழுதினார் என்றும் கருத்துகள் நிலவுகின்றன. மேலும், வீரமாமுனிவர் தம் கைப்பட எழுதிய தேம்பாவணி மூலமும் உரையும் கிடைத்துள்ளன என்றும், அக்கையெழுத்தை அறிவியல் முறையில் ஆய்ந்து அது இவரது கையெழுத்துத்தான் என்று நிறுவப்பட்டுள்ளதாகவும் பேராசிரியர் ச. இராசமாணிக்கனார் குறிப்பிடுகின்றார்.

### கதை நிகழ்ச்சி

இயேசுபிரானின் வளர்ப்புத் தந்தையாகிய யோசேப்பின் வரலாற்றைக் கூறுகிறது, தேம்பாவணி. காப்பியத்தில் 'சூசை' என்று சுட்டப்படுகிறார்.

முதற்காண்டத்தில் காப்பியத் தலைவனாகிய சூசையின் நாட்டைப் பற்றியும், அவரது முன்னோரைப் பற்றியும் முதலில் கூறப்படுகிறது. அதன்பின்னர், சூசைக்கும் மரியாளுக்கும் நடைபெறும் திருமணம் இடம்பெறுகிறது. அதோடு இயேசுகிறிஸ்துவின் பிறப்பும் சொல்லப்படுகிறது.

இரண்டாவது காண்டத்தில் ஏரோது (HEROD) மன்னன் குழந்தையாகிய இயேசுவுக்குத் தீங்கு நினைத்தமையும், அதிலிருந்து தப்பித்த அவர் எகிப்து (EGYPT) நாடு சென்றமையும் இடம்பெற்றுள்ளன.

மூன்றாம் காண்டம், இயேசுவைக் கொலை செய்ய ஏரோது திட்டமிட்டதையும், அதிலிருந்து அவர் தப்பித்தமையும், இயேசுபிரான் இறைத் தூதராகச் செயல்பட்டமையும், பாடுகளையுற்று இறந்து உயிர்பெற்றமையும் கூறுகிறது. மேலும் சூசைக்கு விண்ணுலகிலும் திருமுடி சூட்டப்பெறும் நிகழ்ச்சியும் இடம் பெறுகிறது.

### கவித் திறன்

வீரமாமுனிவர், காப்பியத்தின் பல இடங்களில் தமது இலக்கியப்புலமையை வெளிப்படுத்துகிறார். குறிப்பாக

வருணனைகளிலும் உவமைகளைக் கையாளும் உத்தியிலும், இலக்கியப் புலமையைச் சிறப்பாக வெளியிடுகிறார். நூற்று ஐம்பத்திற்கும் மேற்பட்ட இடங்களில் உவமை அணியைப் பயன்படுத்தியுள்ளார். பயன்படுத்தப்பட்ட பிற அணிகளும் சிறப்பாக அமைந்துள்ளன. கீழ்க் குறிப்படுவது அதற்கொரு சிறந்த எடுத்துக்காட்டு.

ஒரு மனித மனத்தின் இயல்பினை விளக்க விழைந்த வீரமாமுனிவர் ஓர் அருமையான உவமைமூலம் அதை வெளியிடுகிறார்.

## மையக் கதை மாந்தர்

இயேசுவும் அவருடைய பெற்றோராகிய புனித சூசையும், அன்னை மரியாளும் ஆகிய இம்மூவரும் தேம்பாவணியின் மையக் கதை மாந்தர். கடவுளின் மனித அவதாரத்திலும் உலக மீட்பிலும் புனித கன்னிமரியாளுக்கும் சூசைக்கும் உள்ள பங்கினை இக்காப்பியத்தில் வீரமாமுனிவர் சிறப்பாக வெளியிடுகின்றார். இம்மூவரின் பெருமையை உணர்ந்த எகிப்து நாட்டு மக்கள், இவர்களின் பிரிவை அறிந்து எவ்வாறு புலம்புகிறார்கள் என்பதை வீரமாமுனிவர் மிகச் சிறப்பாகக் கூறுகின்றார்.

' அம்மையே! மகவே! வாய்ந்த அருந்தவத்து இறைவ சூசை!
நும்மையே உயிரென் றாக நுதலி நும் நிழலில் வாழ்ந்த
நம்மையே அகன்று போதீர்; நட்பு இடை அகலாது, அன்பின்
செம்மையே பேண்மின் என்னா, சென்று மீண்டும் எவரும் போனார்'

"அன்னை மரியாளே, திருமகனே, பொருந்திய அரிய தவத்திற்குத் தலைவனாகிய சூசையே! உங்களையே உயிர் என்று முற்றிலும் கருதி, உங்கள் அருள் நிழலில் வாழ்ந்த எம்மை விட்டு அகன்று போகின்றீர்கள்; எம்மோடு கொண்ட நட்பு இடையே அகலாமல், அன்போடு செம்மையாகப் போனுங்கள்" என்று வேண்டினர்

## நீரும் மனமும்

ஒருவனது மாசுகளுக்கும் பாவத்திற்கும் நிலைக்களம் மனம். மனம் செம்மையாக இருந்தால் எந்தவிதப் பாவங்களும் ஏற்படா. பாவத்தைத் தோற்றுவிப்பது மனமே. பாவத்தைப் போக்குவதற்கு

அம்மனமே வருந்த வேண்டும்; திருந்தவேண்டும்.எந்த மனம் ஒருவனது பாவத்திற்கு வழிவகுத்ததோ அந்த மனமே அதற்காக வருந்தவேண்டும். இல்லையெனில் அப்பாவக் கறைகள் நீங்காது. இதற்கு நீரை உவமையாகக் காட்டுகிறார் முனிவர்.

மண், கால்களில் ஒட்டிக்கொள்ளாது. அந்த மண்ணில் நீர் கலந்து சேறாகிவிட்டால் அச்சேறு கால்களில் ஒட்டிக் கொள்கிறது. ஒட்டிய சேற்றை நீக்க வேண்டுமாயின் அதற்கு அந்நீரையே பயன்படுத்த வேண்டும்.

நீரால் உருவாகிய சேற்றை நீரால் நீக்குவதைப் போல, மனத்தால் விளைந்த பாவத்தை மனத்தால் வருந்தினால் போக்கலாம் என்று கீழ்க் குறிப்பிடும் பாடலில் விளக்குகிறார் முனிவர்.

புனம்செயும் பங்கமே புனம் ஒழித்தென
மனம்செயும் பங்கமும் மனநொந்து ஆற்றலின்
தினம்செயும் புகர்வினை தெரிகிலார் அறத்து
இனம்செயும் பயன்பட ஈட்டல் ஏலுமோ?

(பாடல் எண். 2689)

தான் செயும் பாவங்களுக்காக மனம் வருந்தாமல் அறங்களால் மட்டும் அவற்றை ஒழிக்க முடியுமா என்று வினவுகிறார்.

இவ்வாறு, நாள்தோறும் நேரில் கண்டுணர்கின்ற நடைமுறை உண்மைகளைப் பாமரர்களும் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் உவமைகளாகப் பல இடங்களில் கையாளுகிறார்.

## சிலுவை தரும் இன்பம்

சிலுவையில் அறையப்பட்டு, சித்திரவதைக்கு ஆளாகும் இயேசு பெருமான் அச்சிலுவையைக் கண்ணுற்ற பொழுது பெரு மகிழ்ச்சியுற்றார் என்பதனை வீரமாமுனிவர் கீழ்க்குறிப்பிடுமாறு விளக்குகிறார்:

"ஏர் அணியே, என் அன்பே, அன்பிற்கு இரதம் இதே
சீர் அணியே, உயர் வீட்டைத்திறக்கும் கோல் இதே; இன்பத்
தார் அணியே, எங்கணும் நான் ஆண்டு ஒச்சும் செங்கோலே
பேர் அணியே, எனது உயிரின் பேர் உயிரே, வாழியவே"

'அழகிய அணிகலனாகவும், என் அன்பாகவும், என் அன்பிற்குத் தேராகவும் அமைந்தது இச்சிலுவையே. இச்சிலுவை சிறந்த அணியாகவும், உயர்ந்த வான் வீட்டைத் திறக்க உதவும் திறவு கோலாகவும் அமைந்துள்ளது. ஆதலால் இன்பம் தரும்

மாலையாகிய அணியே, எங்கும் நான் ஆண்டு நடத்தும் செங்கோலே, யாவற்றினும் பெரிய அணியே, எனது உயிருக்கும் பெரிய உயிரே நீ வாழ்க' என்று சிலுவையைப் பார்த்து இயேசு பெருமான் கூறுவதாக வீரமாமுனிவர் பாடுகிறார்.

பொதுவாகச் சிலுவை என்றாலே, துன்பம், சித்திரவதை, பொறுமை என்பதின் படிமமாகக் குறிப்பிடுவது அல்லது நினைப்பது மரபு. பல சோதனைகள் அல்லது துன்பங்களைச் சுமப்பவர்கள், தாம் சிலுவையைச் சுமப்பதாகக் கூறுவர். குடும்ப நலத்திற்காகச் சிலுவையைச் சுமப்பவர்கள் உண்டு. நட்புக்காகச் சிலுவையைச் சுமப்பவர்கள் உண்டு. ஆனால், மனித குலத்தின் பாவங்களைச் சுமக்கின்ற இயேசு பெருமான், சிலுவை தமக்கொரு அணியாகவும், வானுலகத்தின் திறவுகோலாகவும் இன்பம் தரும் மாலையாகவும் செங்கோலாகவும் இருப்பதாக நினைத்து மகிழ்கிறார். மறைமுகமாக, மனித குலத்தின் பாவத்தைக் களைவதற்குப் பிறர் தரும் துன்பங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு, தம்மைத் தியாகம் செய்யும் அரிய வாய்ப்பு இச்சிலுவை வாயிலாகக் கிடைப்பது அறிந்து இயேசு பெருமான் மகிழ்வதாக வீரமாமுனிவர் நயமாக எடுத்துரைக்கிறார். துன்பத்தின் எல்லை இன்பம் என்பதை இப்பாடல் மூலம் வீரமாமுனிவர் வெளிப்படுத்துகிறார்.

### போர் வருணனை

போர் தொடங்குவதற்கு முன்னர், எத்தகைய முழக்கங்கள் எழுந்தன என மிக அழகாக எடுத்துரைக்கிறார் வீரமாமுனிவர்.

"காரின் மேல் முழங்கயானை கடலின் மேல் முழங்கத் திண்தேர்,
தேரின்மேல் முழங்க மன்னர் திசைகள் மேல் முழங்கப் பம்பை
போரின் மேல் முழங்கப் பாய்மா புரவிமேல் முழங்க வீரர்,
பாரின்மேல் முழங்க யாவும், பகைவர் மேல் முழங்கி மொய்த்தார்."

இடிமுழக்கத்தை உடைய கருமையான மேகத்தைவிடவும் மேலாக யானைகள் முழங்கின. கடலினும் மேலாகத் திண்ணிய தேர்கள் முழங்கவும், அதன்மேல் அமர்ந்திருந்த அரசர்கள் முழங்கவும், திசைகள் எங்கும் போர்ப்பறைகள் முழங்கின. பாய்ந்து செல்லும் குதிரைகள் போரின்மீது ஆர்வங்கொண்டு முழங்கவும், குதிரைமீது அமர்ந்திருந்த வீரரும் முழங்கினர். பூமியின் மேலுள்ள எல்லாமே முழங்கின. பூதர்களும் பகைவர் அஞ்சும்படி முழங்கிக்கொண்டு பாய்ந்து மோதினர் என்று குறிப்பிடுகின்றார் வீரமாமுனிவர்.

ஆரவாரத்துடன் போர் செய்யும் காட்சியை மிக அழகாக வருணிக்கிறார்.

மேலும், யூதர்களின் தாக்குதல்களுக்குள்ளான பகைவர்கள் படை எவ்வாறு அழிந்தன, உருக்குலைந்தன என்பதனை,

"அற்று இழிவார், பிரிவார், அதிர்வார், இரிவார்
மற்று இகல்வார், மருள்வார், வரையா மடிவார்
முற்றிய மாதவம் ஆர்முனிமார், முனிவை
உற்று இரிகோல், உயிர் உண்டிலது ஒன்று இலை ஆல்."

என்று சுட்டுகிறார்.

சிலர், யானையிலிருந்து உயிரற்று விழுவார், வேறு சிலர் யானையினின்று பிரிந்து அதிர்ந்து அலைவர், சிலர் மீண்டும் மாறுபட்டு நின்று மயங்குவார்; எல்லை இல்லாமல் பலரும் மடிவார்; முதிர்ந்த பெருந்தவத்தால் நிறைந்த முனிவரின் சினம் போல் யூதர் கையிலிருந்து நீங்கிச் சென்ற அம்புகளுள், பகைவர் உயிரை உண்ணாதது ஒன்றுமே இல்லை எனப் பகைவர் படை, அழிந்து சிதறுண்டதை நயமாகக் கூறுகின்றார்.

### ஒலிகளின் சங்கமம்

பல்வேறு வகையான ஒலிகளின் சங்கமம் எவ்வாறு இருந்தது என்பதனைச் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறார், வீரமாமுனிவர்.

பேர்ஒலி, முரசுஒலி, பிளிர்ந்த சங்கு ஒலி,
தேர் ஒலி, மத மழை சிதறி யானைகள்
ஊர் ஒலி, இவுளிகள் ஒலி மயங்கி, மேல்
கார் ஒலி கடல் ஒலி கலங்க விம்மும் ஆல்

முரசின் ஒலியும், சங்கின் ஒலியும், தேரின் ஒலியும், மத நீரை மழையாகச் சிதறி யானைகள் நடக்கும் ஒலியும், குதிரைகளின் ஒலியும் ஒன்றோடொன்று மயங்கிப் பேரொலியாகி, கருமேகத்தின் இடி ஒலியும் கடலின் ஒலியும் கலங்குமாறு மிகுத்து இரையும் எனப் பல ஒலிகளின் சங்கமத்தைக் குறிப்பிடுகின்றார்.

### உவமை நயம்

தமிழைக் கற்று, தமிழ் இலக்கணத்தை ஆய்ந்து, தமிழ்க் கவிதைகளில் தோய்ந்த வீரமாமுனிவர் தமிழ்க் கவிதை மரபைப் பின்பற்றி மிகச் சிறந்த உவமைகளைத் தம் காப்பியத்தில் பல்வேறு

இடங்களில் கையாண்டுள்ளார். அந்நிய நாட்டைச் சார்ந்த குறிப்பாக ஐரோப்பாவைச் சார்ந்த ஒருவர் ஒரு தமிழ்க் கவிஞரைப் போல மிகவும் அற்புதமான உவமைகளைக் கையாண்டுள்ளார்.

இவ்வுலகில் செல்வம் நிலையில்லாதது என்பதனை உவமைகள் பலவற்றின் வாயிலாக வெளிப்படுத்துகின்றார்.

'நீர் எழும் குமிழிபோலும், நெடிய தேர் நேமி போலும்
கார் எழு மின்னல் போலும், கடல் எழும் திரைகள் போலும்
பார் எழும் செல்வத்து இல்லை பதியுமோ நிலை என்றார்.

நீரிலே எழும் குமிழியைப் போலவும், உயர்ந்த தேரின் சக்கரம் போலவும், கார்மேகத்தில் தோன்றும் மின்னல் போலவும் கடலில் எழும் திரைகள் போலவும் இவ்வுலகத்தில் உண்டாகும் செல்வத்திற்கும் நிலையில்லாத தன்மை உண்டு என்று ஒரு கருத்தை விளக்க, வாழ்க்கையில் பட்டறிகின்ற உண்மைகளை உவமையாகக் காட்டுகின்றார்.

மேலும், தான் பெற்ற இன்பம் எவ்வாறு இருந்தது என்பதனைக் கூறும்போது, கிளைகளில் தொங்கிய உயர்தரக் கனிகள், இனிமையான பாலில் தோய விழுந்தது போலவும் உயர்ந்த வானத்தினின்று நீங்கிய பனித்துளிகள், வெண்ணிற முள்ள சங்கினுள் விழுந்து முத்தாக மாறியதுபோலவும் இன்பம் அடைந்தேன் என்பதனைத்

தூங்கு உயர் கனிகள் தீம்பால் தோய வீழ்ந்து என்றோ, வானின்
நீங்கு உயர்துளி முத்து ஆக நிறந்த சங்கிடை வீழ்ந்து என்றோ,

என்று கூறுகின்றார்.

தன் மனைவியாகிய மரியாள் தெய்வக் குமாரனைக் கருவுற்றிருக்கிறாள் என்ற உண்மையை உணர்ந்த சூசை, அத்தெய்வக் குழந்தையின் பெருமையினைப் பலவாறு புகழ்கிறார். அதற்கு அவர் ஒப்பிட்டுக் காட்டும் உவமைகள் பல படித்து இன்புறத்தக்கன.

'கொம்பு அயில் கொடிஎன, கொடியில் பூ என,
கம்பு அயில் முத்து என, மலருள் கள் என,
அம் பயில் உன் வயிற்று அமலன் ஆய பின்,
நம்பு அயில் எமக்கு உள நயன் சொல்வு ஆம் கொலோ?'

இப்பாடலில், கொடி, மலர், முத்து, தேன் போன்றவற்றிற்கு இறைவனாகிய குழந்தையை உவமித்துக் காட்டுகின்றார்.

கொம்பிற் படர்ந்த் அழகிய கொடி போலவும், கொடியில் மலர்ந்த மலர் போலவும், மலரினுள் நிறைந்த தேன்போலவும் ஆண்டவன் அழகு பொருந்திய உன்வயிற்றில் கருப்பமாய் அமைந்தபின் ஏற்படும் நன்மைகளைச் சொல்லவும் வேண்டுமோ என்று வியந்து கூறுகின்றார்.

## தமிழ் இலக்கியத்தின் செல்வாக்கு

தூது என்பது சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. மன்னர்களிடையே, காதலர்களிடையே தூது அனுப்பும் மரபைத் தமிழ் இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. தமிழ் இலக்கியத்தின் இந்த மரபை வீரமாமுனிவர் தம் காப்பியமாகிய தேம்பாவணியில் கையாளுகிறார்.

யோசுவா என்பவர்க்கும் ஐந்து மன்னர்களுக்கும் இடையே போர் நிகழவிருக்கிறது. அப்பொழுது தூது ஒன்று அனுப்பப்படுகிறது.

சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகியோடு மதுரைக்குச் செல்லும்பொழுது, மதுரைக்குச் செல்லும் மூன்று வழிகளைப் பற்றிக் கூறி, அவற்றுள் நடு வழியைத் தேர்ந்தெடுக்குமாறு அறிவுறுத்தப்படுகிறான். வீரமாமுனிவரும் தம் காப்பியத்தில் சூசையும் மரியாளும் பாலைவனப் பயணத்தை மேற் கொள்ளும்போது, நடுவழியாகச் செல்லும்படி, மைக்கேல் எனும் தேவதூதரால் அறிவுறுத்தப்படுவதாகக் கூறுகின்றார்.

### கொடி அசைதல்

கோட்டையின் மதிற்சுவர்களில் பொருத்தப்பட்டுள்ள கொடி (FLAG) அசைவதைப்பற்றிக் கவிஞர்கள் தத்தம் கற்பனை ஆற்றலால், காட்சி அல்லது நிகழ்ச்சிக்கு ஏற்ப இருபொருள் (Double Meaning) வெளிப்படும் வகையில் விளக்கம் தருவர். இந்த மரபு தமிழ்க்கவிஞர்களிடம் உண்டு.

சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் காட்சியில், மதுரைக்குக் கண்ணகியோடு செல்லும் கோவலனைப் பார்த்து 'வராதே போ போ' என்று கொடி மறித்துக் காட்டுவதாக இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். கம்பரும் தம் காப்பியத்தில் காற்றில் கொடி அசைவதை 'வா, வா' என்று அழைப்பது போலவும், 'வராதே' என்று சொல்வது போலவும் உருவகப்படுத்திக் கூறுகின்றார்.

அதைப்போல, வீரமாமுனிவர் தேம்பாவணியில் இரண்டு வகைகளையும் குறிப்பிடுகின்றார்.

எருசலேம் நகரைப்பற்றிக் கூறும்பொழுது, அந்நகரத்தின் மாளிகைகளின் உச்சிகளில் கட்டப்பட்ட கொடிகளையும் குறிப்பிடுகின்றார். அக்கொடிகள் இரவலரை 'வருக'என அழைப்பது போலிருப்பதாகக் கூறுகின்றார்.

கோதுஅகன்று அளிக்குவார் அருத்திக் கொள்கைபோல்
'தீதுஅகன்ற அருந்திரு நுகரச்சென்மின்' என்று
ஏதுஅகன்(ற) அணிக்குலத்து இலங்கும் மாடங்கள்
மீது அகன்று அசைகொடி விளிப்ப மாறுமே

(பாடல் எண் *115*)

மாளிகைகளில் கட்டப்பட்டுள்ள கொடிகள் ஏதோன் என்னும் மன்னன் திருக்குழந்தைக்குச் செய்யப்போகும் கொடுமைக்கு அஞ்சி 'நீங்கள் உள்ளே வராமல் வெளியே நில்லுங்கள்' என்று கைகாட்டுவனபோல் அசைந்து கொண்டிருந்தன என்று இவ்வோரிடத்தில் குறிப்பிடுகின்றார்.

அல்லுமிழ் இருளின் இருண்ட நெஞ்சவன் செய்
அரந்தையின் வெவ்வழல் ஆற்ற
வில்லுமிழ் பசும்பொன் மாடங்கள் நெற்றி
விரித்தபூங் கொடிகள்தம் ஈட்டம்
எல்லுமிழ் மூவர் வருவகண்டு, அரசன்
இயற்றிய வஞ்சனைக்கு அஞ்சி
'நில்லுமின் நின்மின்' என இடைவிடாது
நீண்டகை காட்டுவ போன்றே.

(பாடல் எண். *1184*)

## வருணனை

மேலை இலக்கிய மரபில் நாட்டு வருணனையும் நகர வருணனையும் பெரும்பாலும் இடம் பெறுவதில்லை. ஆனால் வீரமாமுனிவர் தேம்பாவணியில் சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ள நாட்டு வருணனையை அப்படியே பின்பற்றிப் பாடியுள்ளார்.

சோலை எவ்வாறு திருமணப் பந்தல்போல் காட்சியளிக்கிறது என்பதை வருணிக்கிறார் முனிவர்.

மலர்கள் இரண்டு இரண்டாகத் தொங்க - குயில், வண்டு முதலியவை ஒலிக்கும் சோலை திருமணப்பந்தல் போல் காட்சியளிக்கிறது என்கிறார்.

கயில்துணை கலனெனக் கம்பில் தூங்குஅலர்
குயில்துணை குயிலவும் குழல்வண்டு ஊதவும்
மயில்துணை உலவிவந்து இரட்ட, மற்றெலாம்
பயில்துணை களிமணப் பந்தர் - சோலையே

(பாடல் எண். 55)

நகரத்திலுள்ள மாடங்களைப் பற்றியும் மிக அழகாக வருணிக்கிறார்.

பயிற்றிய முகிலிடைப் பரந்த பால்மதி
வெயில்தியங் கியஎன வெந்(த)அ கிற்புகை
அயிற்றிய வெயில்உமிழ் அரியமாமணி
குயிற்றிய மாடங்கள், குளிர நாறுமே.

(பாடல் எண்113)

என மாடங்களின் தோற்றத்தை வருணிக்கிறார்.

### கம்ப ராமாயணம்

தேம்பாவணியில் இடம் பெற்றுள்ள நாட்டுப் படலமும், நகரப்படலமும் பெருமளவில் கம்ப ராமாயணத்தின் செல்வாக்கைப் பெற்றுள்ளன.

கம்ப ராமாயணத்தில், கம்பன், கோசல நாட்டைப் பற்றிக் குறிப்பிடும்போது, கன்றைப் பிரிந்த எருமைகள், கன்றுகளை நினைத்துப் பாலைப் பொழிகின்றன. அப்பாலை அன்னங்கள் குடித்து மகிழ்கின்றன என்று கூறியுள்ளார். அதே காட்சியைத் தேம்பாவணியில் வீரமாமுனிவர்,

உண்ட கன்றகன் றுள்ளி மேதிகள்
மண்ட அன்புறீஇ வழிந்த பால் திரள்
கொண்ட அன்னமே குடித்த லாவது

(பாடல் எண்.37)

எனப் பாடியுள்ளார்

கம்ப ராமாயணத்தில் இராமன் சீதையைத் திருமணம் செய்வதற்கு முன்னர்ச் சிவதனுசை நாணேற்றிய நிகழ்ச்சியைக் குறிப்பிடும்பொழுது கம்பர், 'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்' என மிகவும் நயமாக எடுத்துரைக்கிறார். இவ்வரி

வீரமாமுனிவரையும் பெரிதும் கவர்ந்திருக்கிறது. எனவே, இவ்வரியைத் தம் காப்பியத்தில் கையாண்டுள்ளார்.

தேம்பாவணியில், கிறித்துவத் திருமறையில் பழைய ஏற்பாட்டில் தாவீது என்பவன், அவனைவிட வலிமை மிகுந்த பெருவீரனாகிய கோலியாத்தைக் கவண் கல்லால் அடித்துக் கொன்ற நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது. இந்த நிகழ்ச்சியை வீரமாமுனிவர் சிறிது மாற்றம் செய்து காட்டுகிறார்.

தாவீது கல்லைக் கவணில் வைத்ததையோ, சுழற்றியதையோ, வீசியதையோ ஒருவரும் பார்க்கவில்லை. ஆனால், பாய்ந்தமையால் கோலியாத்து வீழ்ந்ததை மட்டும் கண்டனர் என்று கூறுகின்றார்.

கல்லை ஏற்றலும் கவணியைச் சுழற்றலும் அக்கல்
ஒல்லை ஓட்டலும் ஒருவரும் காண்கிலர் இடிக்கும்
செல்லை ஒத்தன சிலைநுதற் பாய்தலும் அன்னான்
எல்லை பரந்திருள் இரிந்தென வீழ்தலும் கண்டனர்.

(பாடல் எண்.*195*)

என்ற பாடலில் மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சியைக் காட்டுகின்றார்.

### கலிங்கத்துப் பரணி

தேம்பாவணியில் இடம்பெறும் போர் வருணனை, கலிங்கத்துப் பரணியில் இடம் பெற்றுள்ள போர் வருணனையையே பெருமளவில் நினைவுபடுத்துகின்றது. படை முழக்கத்தைக் குறிப்பிடும்பொழுது,

கரியினம் கரியொடும் கலினம் பூண்டுபாய்
பரியினம் பரியொடும், பரியைப் பூட்டிய
எரிஇன மணிசெறி ஏமத் தேர்களும்
நெரியின நெருங்குப நெரிந்த வாயெலாம்

(பாடல் எண்.*118*)

என வருணிக்கின்றார் முனிவர்.

### குறுந்தொகை

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையேயுள்ள அன்பின் பிணைப்பை அன்றில் பறவைகளோடு ஒப்பிடுவது தமிழ் இலக்கிய மரபு. குறுந்தொகையில் இடம் பெற்றுள்ள இந்த ஒப்புமையைச் சூசைக்கும் மரியாளுக்கும் இடையிலான அன்பின் பிணைப்புக்குக் குறிப்பிட்டுக் காட்டுகிறார் வீரமாமுனிவர்.

சூசையும் மரியாளும் நடந்துபோகும்பொழுது, ஒருவருக் கொருவர் எவ்வாறு அன்புடன் சென்றனர் என்பதை,

குவட்டாய வெள்ள(ம்) நிகர்கூர்த்து, உவகை பெருகிஎழ
துவட்டாத தூய்தவனும் துணைவியாம் ஆயிழையும்
உவட்டாத பணிமுறையால் செல்வதென உணர்வுற்றார்
சவட்டாத அன்புரிமைச் சால்பின், இரண்டு அன்றில் ஒத்தார்.
(பாடல் எண்.866)

என அன்றில் பறவைகளோடு ஒப்பிட்டுக் காட்டுகின்றார் முனிவர்.

## திருக்குறள்

திருக்குறளை நன்கு கற்று அதில் மிகுந்த ஈடுபாடு கொண்டு மொழிபெயர்த்த வீரமாமுனிவர், தேம்பாவணியிலும் திருக்குறளைப் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

சூசையும் மரியாளும் தங்குவதற்கு இடம் கேட்டபொழுது, அவர்கள் துரத்தப்பட்டார்கள். அப்பொழுது சூசை மரியாளிடம்,

அன்பு வாய்ந்த உயிர்நிலை; அஃதிலார்க்கு
என்பு தோல் உடல் போர்த்ததென்று, அன்புநடை
இன்பு தோய்ந்த நிலையென, தான் இவண்
துன்பு காய்ந்த உயிர்த்துணை யாயினான்.
(பாடல் எண்.292)

என்று கூறுவதாக முனிவர் குறிப்பிடுகிறார்.

இவ்வாறு திருக்குறள் கருத்துகள் தேம்பாவணியில் பெருமளவில் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மேலும் நாலடியாரில் இடம் பெற்றுள்ள கருத்துகளும் மாணிக்கவாசகரின் திருவெம்பாவையில் இடம் பெற்றுள்ள கருத்துகளும் தேம்பாவணியில் இடம் பெற்றுள்ளன்.

மேற்குறிப்பிட்டவைகளை அடிப்படையாகக் கொண்டு, தவத்திரு. சேவியர் தனிநாயகம் அடிகளார், 'மேலை நாட்டுக் கலையாலும், தமிழ்நாட்டுக் கலையாலும் கலக்கும் ஏரியாம் தேம்பாவணி' என்று குறிப்பிடுகின்றார்.

## இந்து சமயச் செல்வாக்கு

நடை, உடை, உணவு, படைப்புகள் ஆகிய அனைத்திலும் தமிழராய் வாழ்ந்த வீரமாமுனிவர், தோற்றத்தில் ஓர் இந்துத் துறவியைப் போல் காட்சியளித்தார்.

காவி அங்கியும், நடுக்கட்டும், வெள்ளைப் பாகையும், இளங்காவி உத்தரிய முக்காடும், கையிற் காவி உருமாலையும், காதில் கடுக்கனும், விரலில் தம்பாக்கு மோதிரமும், கையில் தண்டு கோலும், காலிற் சோடும் அணிந்திருக்கும் முனிவரை அறிந்தவரே அவர் ஒரு கிறித்தவர் என்று அறிவர். ஏனையோர் அவரை ஓர் இந்துத்துறவி என்றே கருதினர். அந்த அளவுக்குத் தோற்றத்தில் முற்றிலும் தம்மை மாற்றிக்கொண்டார்.

தேம்பாவணிக் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் பாடலில், முனிவர், 'சீரிய உலகு மூன்றும் செய்து அளித்து அழிப்ப வல்லாய்' என்று பாடியுள்ளார். இது சைவ-வைணவத் தமிழ் இலக்கிய மரபுவழியில் பாடப்படும் பாடல்களின் தொடக்கமாக அமைந்துள்ளது.

இவ்வாறு இந்து சமயக் கருத்துகள் பலவற்றைக் கூறியிருப்பதோடு அடைக்கலநாயகி, அம்மன், கருணாகரன், பரமன், பிரான், மாதவன் போன்ற இந்து சமயச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார்.

## சிற்றிலக்கியங்கள்

தமிழில் காப்பியம் ஒன்றினைப் படைத்த வீரமாமுனிவர், சிற்றிலக்கியங்கள் சிலவற்றையும் படைத்துள்ளார்.

சந்தப் பாடல்களால் புகழ் பெற்றவர் அருணகிரிநாதர். தமிழகக் கோயில்களில் இறைவழிபாட்டிற்கு அருணகிரிநாதரின் பாடல்கள் பெருமளவில் பயன்பட்டன. இசை இன்பத்தை வழங்கிய இப்பாடல்கள் வீரமாமுனிவரைப் பெரிதும் கவர்ந்தன. முருகன்மீது பாடப்படும் இப்பாடல்கள் மக்களிடத்தில் பெற்ற செல்வாக்கை நன்கு உணர்ந்த வீரமாமுனிவர். இந்துக்கள் தம் கடவுளைப் பக்திப் பரவசத்துடன் பாடி வழிபடுவது போல, கிறித்தவர்களும் இயேசுவின் புகழைப் பாடி வழிபட வேண்டுமெனச் சந்தங்களைப் பயன்படுத்திப் பல சந்தப் பாக்களைப் பாடினார்.

மக்கள் மனத்தில் நிலைத்து நிற்கும் வகையில் மனனம் பண்ணுவதற்கு எளிமையான இலக்கிய வடிவம் அந்நாதி. மக்களிடம் செல்வாக்குப் பெற்றிருந்த அருணகிரிநாதரின் கந்தர் அந்தாதியும் வீரமாமுனிவரைப் பெரிதும் கவர்ந்தது. அதில் மிகுந்த ஈடுபாடு கொண்டார். எனவே, அந்தாதிப் பாடல்களும் பாடினார்.

அந்தாதியைப் போல், சிற்றிலக்கிய வகைகளுள் சிறப்புற்றிருந்த கலம்பகம், அம்மானை, மாலை, பதிகம், வண்ணம் போன்றவற்றிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அச்சிற்றிலக்கிய வகைகளிலும் கவிதை நூல்கள் இயற்றினார்.

திருக்காவலூர்க் கலம்பகம், கித்தேரியம்மாள் அம்மானை, அன்னை அழுங்கல் அந்தாதி, அடைக்கல மாலை, அடைக்கல நாயகி மேல் வெண்கலிப்பா, பதிகம், வண்ணம் ஆகிய சிற்றிலக்கியங்களைப் படைத்தார்.

## திருக்காவலூர்க் கலம்பகம்

வீரமாமுனிவர் படைத்த பிரபந்தங்களுள் திருக்காவலூர்க் கலம்பகம் முதன்மையானது. ஏலாக்குறிச்சியின் அருகாமையிலுள்ள மக்களோடு தொடர்புகொண்டு சமயப் பணியாற்றியபொழுது, அந்தப் பகுதிக்குத் திருக்காவலூர் எனப் பெயரிட்டார். அவர்கட்கு அடைக்கலம் தந்த அன்னை மரியாளை அடைக்கல அன்னை என அழைத்தார். அவ்வன்னையைத் தலைவியாகக் கொண்டு திருக்காவலூர்க் கலம்பகம் எனும் இலக்கியம் படைத்தார்.

'கிறித்தவக் கருத்துகளையும், மரபுகளையும் மிக அழகாகத் தமிழ்ப் பாடல்களால் வெளிப்படுத்தும் ஒரு பெருநூல் திருக்காவலூர்க் கலம்பகம் என்று இதன் பெருமையைக் குறிப்பிடுகிறார் பேராசிரியர் கா.மீனாட்சி சுந்தரனார்.[3]

திருக்காவலூரில் எழுந்தருளியுள்ள தேவ அன்னையின் திருப்புகழைப் பாடுவது திருக்காவலூர்க் கலம்பகம்.

## அமைப்பு

திருக்காவலூர்க் கலம்பகம் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு செய்யுட்களைச் கொண்டது. அந்தாதித் தொடையமைப்பில் பாடப்பட்டுள்ளது.

இந்நூல், புயவகுப்பு, தவம், காலம், இடைச்சி, மறம், கைக்கிளை,வண்டு, குறம், இரங்கல், தழை, அம்மானை, சமூக உல்லாசம், சித்து, சம்பிரதம், தென்றல், ஊசல், பாண், மதங்கி, தூது, வலைச்சி என்னும் இருபது உறுப்புகளைக் கொண்டது. இவற்றுள் 'சமூக உல்லாசம்' என்பது முனிவரால் புதிதாக அறிமுகப்படுத்தப்பட்ட உறுப்பாகும். இது வேறு கலம்பக நூல்களில் இடம் பெறவில்லை.

---

3. K. Meenakshisundaram, P. 321

இந்நூல் வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, துறை, தாழிசை, விருத்தம் முதலிய பலவகைப் பாடல்களால் இயற்றப்பட்டுள்ளது. காப்புச் செய்யுள் நீங்கலாக 20 உறுப்புகள் காணப்படுகின்றன.

### சிறப்புகள்

இது, சிற்றின்பச் செய்திகள் இடம்பெறாத ஒரு கலம்பகம். இதில் பேரின்பச் செய்திகள் அதாவது இறை இன்பச் செய்திகள் மட்டுமே இடம் பெற்றுள்ளன.

உலாவரும் தலைவனைக் கண்டு காமுறும் பெண்களின் நிலை கூறப்படவில்லை. மாறாகத் தலைவி, சந்திரனாகிய தன் வாகனத்தில் எழுந்தருளி வரும் பொழுது, அதைப் பார்த்து மகிழும் மக்களின் மகிழ்ச்சி எடுத்துரைக்கப்படுகிறது. இப்பகுதியையே ‘சமூக உல்லாசம்’ என்று கூறுகிறார் வீரமாமுனிவர்.

தமிழிலுள்ள கலம்பக நூல்கள் பொதுவாக ஆண்பாற் கலம்பகங்களாக உள்ளன. அதாவது பாட்டுடைத் தலைவர் ஆடவராக இருப்பர். ஆனால், திருக்காவலூர்க் கலம்பகம் பெண்பாற் கலம்பகமாக உள்ளது. அடைக்கல மாதா என்ற பெண் தெய்வத்தையே தலைவியாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது.

எனவே, இந்நூலில் பாட்டுடைத் தலைவன் இல்லை. தலைவியே இடம் பெறுகிறாள்.

### இலக்கிய நயம்

நூலின்கண், தம் கற்பனைத் திறத்தால் மிகச் சிறந்த உருவகங்களையும் உவமைகளையும் கையாண்டுள்ளார்.

முனிவர், காப்புச் செய்யுளில், கன்னி மரியைச் சங்காக மிக அழகாக உருவகப்படுத்துகிறார். சங்கு முத்தினைப் பெற்றெடுப்பது, இனச்சேர்க்கையால் அல்ல. நீரினுள்ளிருக்கும் சங்கினுள்ளே மழைத்துளிவிழும். அத்துளியே முத்தாக உருப்பெறுகிறது. இறைவன் திருவருளால் கருத்தரித்த கன்னிமரியாளைச் சங்காக உருவகப்படுத்தியுள்ளார்.

அன்னையை வணங்கி வழிபட்டால் கிடைக்கும் நன்மைகளைப் பற்றிப் பல பாடல்கள் பாடியுள்ளார். அவை இலக்கிய நயம் மிகுந்தவைகளாகக் காணப்படுகின்றன.

மக்களுக்கு அருள் செய்பவள், முடிவு இல்லாதவள், வேதத்தை உடையவள், திருக்காவலூரில் நிலைகொண்டவள்

ஆகிய பெருமைகளைக் கொண்டவள் அடைக்கல அன்னை. நிலவு அடைக்கலமாக அடைந்த அன்னையின் திருவடிகளை அடைவதற்காகப் பாடி வணங்குகிறேன் என்று குறிப்பிடுகிறார் வீரமாமுனிவர்.

உயிர்ஆம் தயையாளை ஓம்பு அனந்தத்தாளை
அயிரா மறைமொழி யாளை - பயிர் ஆகும்
சிந்துசேர் காவலூர்ச் சேர்ந்தாளைப் பாடினேன்
இந்துசேர் தாள் சேர யான்.

மேலும் அடைக்கல அன்னையின் பெருமையை எடுத்துரைக்கின்ற பொழுது பூக்களிலுள்ள தேனை உண்பதைவிட, அடைக்கல அன்னை கொடுத்த தேனை உண்ணுவது எவ்வளவு சிறப்புத் தெரியுமா என்று வண்டைப் பார்த்து வினவுவதாக ஒருபாடல் அமைத்துள்ளார். அதில் அன்னையின் அங்கங்களின் அழகினை மிக அழகாகக் கீழ்க் குறிப்பிடும் பாடலில் வருணிக்கிறார்.

காந்தள் கை கஞ்சம்தாள் காவிக்கண் ஆம்பல் வாய்
வேய்ந்து அலர்ந்த காவ்லூர் மென்கொடியே - ஈந்தமது
உண்ணிகாள் சொல்மின் நீர் ஒத்துஉளதோ பூஉலகில்
பண்அணி பூம் தீம் தேன் பணித்து.

இவ்வாறு பல பாடல்களில் அன்னையின் பெருமைகளைப் புகழ்ந்து பாடுகின்றார்.

இறைமகனாகிய இயேசுவைக் கன்னி மரியாள் உலகிற்கு அளித்த பெருமையினை,

உருவில்லானுக் குருவாகி யுலகிலொரு மகனுதிப்பக்
கருவில்லாக் கருத்தாங்கிக் கன்னித்தாய் ஆயினையே

என்று புகழ்ந்து பாடுகின்றார். தாயுமானவர் அகிலாண்ட அன்னையைப் புகழ்ந்து பாடுவதைப் போல், கன்னிமரியாளைக் கனிந்துருகிப் பாடுகிறார் முனிவர்.

குலசேகர ஆழ்வார், திருமால் நின்றருளிய திருவேங்கடமலையில் படியாகக் கிடக்கவும், மீனாகத் திரியவும், மரமாக நிற்கவும் விரும்புவதாகப் பாடுவார். அதைப்போலத் திருக்காவலூர்த் தலத்தில் தமக்குப் பெருவாழ்வு நிலையாகக் கிடைத்துவிடாதா என்று ஏங்கும்போது, புல்லாய்க் கிடக்கவும், அன்னையின் கூந்தலில் மலர்த்தேன் உண்ணும் வண்டாக மாறவும் வேண்டுகிறார்.

இவ்வாறு இலக்கிய நயம் வெளிப்பட பாடப்பட்ட ஒரு கலம்பகம் திருக்காவலூர்க் கலம்பகம்.

## கித்தேரியம்மாள் அம்மானை

போர்த்துக்கல் நாட்டில் மன்னர் மகளாகப் பிறந்து வாழ்ந்தவள் புனித கித்தேரி அம்மாள். அவள் மிகுந்த சமயப் பற்றுடையவள். கிறித்தவச் சமயத்தில் கன்னி நோன்பு கொண்ட கித்தேரி அம்மாளது அளவுகடந்த பற்றை அறிந்த அவளுடைய தந்தை, அவளைக் கொலை செய்தார். ஐரோப்பாவில் பரவியிருந்த அவளது வரலாற்றைக் கிறித்தவ சமயப் பெருமை வெளிப்படும் வகையில் கித்தேரியம்மாள் அம்மானை எனும் பெயரில் வீரமாமுனிவர் இயற்றினார்.

ஏலாக்குறிச்சிக் கோயிலில் புனித கித்தேரியம்மாளின் உருவச்சிலையையும் நிறுவியுள்ளார் வீரமாமுனிவர்.

முனிவர் இயற்றிய தேம்பாவணி பெருங்காப்பியம் எனில், கித்தேரியம்மாள் அம்மானை சிறுகாப்பியம் எனக் கருதப்படுகிறது.

தமிழ்நாட்டு மக்களிடம் செல்வாக்குப் பெற்றுள்ள நாட்டுப் புறப் பாடல் வடிவமான அம்மானையில் புனித கித்தேரி அம்மாளின் புகழைப் பாடியுள்ளார் முனிவர்.

ஐரோப்பாவில் வாழ்ந்த ஒரு பெண்ணின் வரலாற்றைக் குறிப்பிடும் நூலானாலும், தமிழ்நாட்டையும், தமிழ் இலக்கிய மரபையும் பின்புலமாகக் கொண்டே நூலை இயற்றியுள்ளார். தமிழ்நாட்டுச் சூழலையும் தமிழ் மரபையும் பின்பற்றி எழுதப்பட்டமையால், தமிழ்நாட்டில் வாழ்ந்த ஒரு பெண்ணின் வாழ்க்கை வரலாற்றைப் படிப்பதுபோல அமைந்துள்ளது வீரமாமுனிவரின் இந்த நூல்.

இந்நூல் வெண்செந்துறையால் 1000 திருக்கண்ணிகள் கொண்ட அம்மானைப் பனுவலாகும். இது ஏலாக்குறிச்சியில் இயற்றப்பட்டாகக் கூறப்படுகிறது.

## இலக்கிய நயம்

தமிழ் மரபைத் பின்பற்றியதோடு, தம் கற்பனை வளத்தையும் வெளிப்படுத்திப் பல பாடல்களைப் பாடியுள்ளார் வீரமாமுனிவர்.

நூலில் இடம்பெறும் போர்த்துக்கல் நாட்டின் வளத்தை வருணிக்கும்பொழுது, தமிழ்நாட்டு வளமான கரும்பும், செந்நெல்லும் சூழ்ந்திருக்கும் நாடாகப் படைத்துக் காட்டுகிறார் முனிவர்.

தேனரும்பும் பூங்கரும்பின் செல்வமொடு காய்த்த செந்நெல்
கானிரும்பால் கொய்திடும்போர் கொள்வதலால் போர் இலதால்

என்னும் பாடல் நாட்டு வருணனைபற்றிய பாடலுக்கு ஒரு சான்றாகும். இப்பாடல் நாட்டு வருணனை பாடும்பொழுது தமிழ்க்கவிஞர்கள் பின்பற்றும் மரபை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது.

கற்பனை வளம் வெளிப்படும் வகையில் பல பாடல்களைப் பாடியுள்ளார்.

தாமரையின் இயல்பை வைத்து ஓர் அருமையான கற்பனையை உருவாக்கிப் பாடுகிறார் முனிவர்.

இறைவனின் பெருமைகளைப் புகழ்ந்து பாடும் வாயும் தாமரை, இறைவனை வணங்கும் கையும் தாமரை எனக் கூறவந்த வீரமாமுனிவர் இரண்டிற்கும் ஒரு சிறிய வேறுபாட்டையும் எடுத்துரைக்கிறார். காலையில் விரிந்து மலரும் தாமரையைப் போல, வாய்திறந்து இறைவனைப் புகழ்ந்து பாடுவோம். மாலையில் குவியும் தாமரையைப் போல இரண்டு கைகளையும் குவித்து இறைவனை வணங்குவோம் என்று பாடுகிறார் முனிவர். இதனைக்,

காலைக் கமலமெனக் கர்த்தன்புகழ் வாய்மலர
மாலைக் கமலமென வந்தடியில் கைகுவிய

எனும் பாடலில் வெளிப்படுத்துகிறார்.

மேற்குறிப்பிட்ட வகையில் முனிவர் தம் கற்பனை வளத்தை வெளிப்படுத்தும் பாடல்கள் பல உள்ளன.

## அன்னை அழுங்கல் அந்தாதி

அன்னை மரியாளைப்பற்றிப் பாடிய பாடல்களாலானது அன்னை அழுங்கல் அந்தாதி.

இயேசுபிரானின் பாடு மரணத்தைப் பற்றி அன்னை மரியாள் அடையும் தாங்கொண்ணாத் துன்பத்தை மிக அழகான அந்தாதிப் பாடல்களால் மிகவும் சிறப்பாகப் பாடியுள்ளார். படிப்போர் உள்ளத்தை நெக்குருகச் செய்யும் பாடல்கள் மிகுந்துள்ளன.

இந்நூல், அந்தாதித் தொடையில் 100 கட்டளைக் கலித்துறைகளை உடையது.

அருணகிரி நாதர் இயற்றிய கந்தர் அந்தாதியைக் கற்றதால் ஏற்பட்ட அகத்தூண்டுதலால், அன்னை மரியாள்மீது அந்தாதி பாடினார் வீரமாமுனிவர்.

## அடைக்கல மாலை

அன்னையின் திருவடிகளைப் பணிந்து அவள் புகழைப் புகழ்ந்து பாடும் பாடல்களாக உள்ளன அடைக்கல மாலை எனும் நூல். இது அறுபது கண்ணிகளைக் கொண்ட பஃறொடை வெண்பாக்களால் இயற்றப் பெற்றது.

இந்நூலில், தேர்ந்தெடுத்த சொற்களால் ஓசைநயம்படப் பல பாடல்களைப் பாடியுள்ளார்.

> வைத்தமுடி அத்தனையும் வைத்தமணி அத்தனையும்
> வைத்தமலர் அத்தனையும் வைத்ததொடை அத்தனையும்
> வைத்தகவி அத்தனையும் வைத்தபுகழ் அத்தனையும்
> வைத்தபதம் அத்தனையும் வைத்தபொருள் அத்தனையும்
> வைத்தசிரம் அத்தனையும் வைத்தகரம் அத்தனையும்
> வைத்தவிழி அத்தனையும் வைத்தமனம் அத்தனையும்
> வைத்தஅறம் அத்தனையும் வைத்தவரம் அத்தனையும்
> வைத்தநலம் அத்தனையும் வைத்திருக்க

என் ஓசைநயமும் சொற்சுவையும் பொருட்சிறப்பும் மிளிரப் பாடியுள்ளார். அதைப் போல அன்னையின் அடிகளை வணங்கி, அவள் புகழ் பாடும் பாடலாகப்,

> பதங்கள் பணிந்து பதங்கள் நவின்று
> சதங்கள் வியந்து சதங்கள் - அதிர்ந்து
> சதங்கள் குயின்று கரங்கள் குவிந்து
> வயங்கள் புகழ்ந்து மனங்கள் - நயந்து

என்றும் ஓசைநயமும் சொற்சுவையும் மிகுந்த பாடலைப் பாடியுள்ளார். இவற்றைப் போல் இன்னும் பல பாடல்கள் இடம்பெற்றுள்ளன. செந்தமிழ்ச் சொற்களைப் புனைந்து பாடியதைப் போல் வடமொழி மிகுந்திருக்கும் கண்ணிகளையும் பாடியுள்ளார்.

இந்நூல் முனிவர் திருக்காவலூரில் பணியாற்றிய பொழுது வெளியிடப்பட்டது என்பர்.[4]

4. அமுதன் அடிகள், ப. 154.

## அடைக்கல நாயகிமேல் வெண்கலிப்பா

இது ஐம்பது கண்ணிகளைக் கொண்ட வெண்பாவால் இயற்றப்பட்டுள்ளது. திருக்காவலூர் அடைக்கல நாயகி மேல் பாடப்பட்டது. அடிமையாகிய தம்மை ஆளும் அன்னையைப் பற்றித்,

> துன்பநோய்க் குயிர்மருந்தே துயர்க்கடலின் நிலைக்கரையே
> இன்பவீட் டுயர்வழியே இருள்மயல்கொள் உயிர்க்கொளியே

என்று புகழ்ந்து பாடுகிறார். மேலும் தாம் அடைக்கல மாதாவிடம் சரணடைந்ததன் காரணத்தைச் சொல்லும்பொழுது,

> செறிவிச்சை பொய்களவு தீதனைத்தும் புடை நெருங்க
> அறிவச்சம் நிறைநாணம் அவையெல்லாம் அகன்றனவே

என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு பல அருமையான பாடல்களை அடைக்கல நாயகி மேல் வெண்பாவாகப் பாடியுள்ளார்.

## வண்ணம்

இசை இன்பம் வெளிப்படும் வகையிலான புதுப்புது வண்ணங்களை விருத்தப் பாக்களில் பாடிய பெருமை வீரமாமுனிவருக்கு உண்டு.

கம்பர், தம் இராமாயணத்தில் 87 வண்ணங்களை அறிமுகப்படுத்தியுள்ளார். தாம் 90 வண்ணங்களை அறிமுகப்படுத்தியுள்ளதாகவும், வேண்டுமாயின் ஒவ்வொரு பாடலுக்கும் ஒருவண்ணம் காட்ட இயலும்' எனவும், தாம் இயற்றிய செந்தமிழ் இலக்கணம் என்ற நூலில் குறிப்பிடுகின்றார் வீரமாமுனிவர். எனவே, வண்ணத்தில் முனிவருக்கு இருந்த புலமையும் ஈடுபாடும் நன்கு தெரிகிறது.

தாம் இயற்றிய இலக்கண நூல்களாகிய செந்தமிழ் இலக்கணம், திறவுகோல் . ஆகியவற்றில் வண்ணம் என்னும் பாவகைக்கு எத்தகைய இலக்கணத்தை வகுத்து அமைத்தாரோ, அதனின்றும் சற்றும் பிறழாமல் இந்நூலை இயற்றியுள்ளார்.

இவ்வண்ணம் எட்டுக் கலைகளைக் கொண்டுள்ளது. முதல் கலையில் கடவுளைப் பற்றிய பாடப்படுகிறது. இரண்டாவது கலையில், இயேசு பெருமாள் பிறந்த யூதேயா நாட்டினைப் பற்றிப் பாடப்படுகிறது. மூன்றாவது கலையிலும், நான்காவது கலையிலும்

வானவர் தொழுவதற்குரிய இயேசுவின் பெருமை கூறப்படுகிறது. அதன்பின்னர், மதலேனா மரியாள், செசீலி, பராபரை, கித்தேரி அம்மாள் ஆகியோரை முறையே ஐந்தாவது, ஆறாவது,ஏழாவது,எட்டாவது கலைகளிலும் புகழ்ந்து பாடுகிறார் முனிவர்.

வண்ணத்திற்கே உரிய சந்தநயம் மிகச் சிறப்பாக இந்நூலில் வெளியிடப்படுகிறது.

### கருணாம்பர (தேவார)ப் பதிகம்

இந்து சமயப் பாடல்களில், குறிப்பாகச் சைவ சமயப் பாடல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் முனிவர். தேவாரம், திருவாசகம் ஆகியவற்றை மிகுந்த விருப்பத்தோடு கற்றுள்ளார். எனவே, அவற்றின் செல்வாக்கால் தேவாரப் பாடல்களைப் பாட எண்ணினார். தம் எண்ணத்தை நிறைவேற்றும் வகையில் தேவாரப் பாடல்களைப் போல் 12 பாடல்களைக் கருணாம்பர (தேவார)ப் பதிகம் என்னும் தலைப்பில் முனிவர் பாடினார்.

இந்நூல் கிறித்தவக் கோட்பாடுகளை விளக்குவதாக அமைந்துள்ளது.

## இலக்கணம்

கவிதைகள் பல இயற்றிக் கவிஞராகத் திகழ்ந்த வீரமாமுனிவர் இலக்கண நூல்கள் சிலவற்றையும் படைத்தார். சிறப்புடைய ஓர் இலக்கணப் புலவராகவும் வாழ்ந்தார். மேனாட்டார்கள் புரிந்து கொள்ளும் வகையிலும் மொத்தம் நான்கு இலக்கண நூல்களை இயற்றினார். அவற்றுள் செந்தமிழ், கொடுந்தமிழ், இலக்கணத் திறவுகோல் ஆகிய மூன்றும் மேலை நாட்டார்க்காக இலத்தீன் மொழியில் எழுதப்பட்டவை. தொன்னூல் விளக்கம் எனும் நூல் தமிழர்களுக்காக எழுதப்பட்டது.

### கொடுந்தமிழ் இலக்கணம்

இந்த நூலின் முழுத்தலைப்பு "A Grammar of the Common dialect of the Tamil language Called Koduntamil "என்பதாகும்.

இந்நூல்தான் வீரமாமுனிவர் இயற்றிய முதல் இலக்கண நூல். இது 1728-ஆம் ஆண்டில் இயற்றப்பெற்றது. வீரமாமுனிவர் வாழ்ந்த காலத்தில் வெளியிடப்பட்ட நூல் இது ஒன்றே என்பர்.[5]

5. அமுதம் அடிகள், ப. 163.

மொழியியல் நோக்கில் இந்த இலக்கண நூலைப் பற்றி மொழியியல் அறிஞராகிய தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் இரண்டு கட்டுரைகள் எழுதியுள்ளார்.

அமைப்பியல் நோக்கில் தமிழ் வரிவடிவங்களை இந்நூலில் முதன்முதலாக ஆராய்ந்துள்ளார். இதில் மொழி அமைப்பு உண்மைகளைப் பொதுமைப்படுத்தி விதிகளாக விளக்குகிறார். தமிழ்மொழி அமைப்பை ஆங்காங்கே ஐரோப்பிய மொழிகளின் அமைப்புகளோடுள்ள ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் விளக்குகிறார்.

நூல் ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

1. தமிழ் எழுத்துகளும் தமிழ் நெடுங்கணக்கின் விதிகளும்
2. பெயர்களும் பதிலீட்டுப் பெயர்களும்
3. வினைச் சொற்கள்
4. தொடரியல் விதிகள்
5. எண்ணுப் பெயர்களும் அன்றாடத் தேவைக்கான சொற்களும்

'தமிழில் இருவகை மொழிகள் வழங்குகின்றன. அவற்றைச் செந்தமிழ் என்றும், கொடுந்தமிழ் என்றும் குறிப்பிடலாம்' என்று வீரமாமுனிவர் கூறி, அவற்றிற்கு இலக்கணம் வகுத்தார். அவற்றுள் பேச்சுமொழிக்கு எழுதப்பட்ட இலக்கண நூலே கொடுந்தமிழ் இலக்கணம்.

தம், பன்மொழிப் புலமையால், தமிழ் ஒலியோடு, போர்த்துகீஸ், இஸ்பானியம், பிரஞ்சு, இத்தாலி ஆகிய மொழிகளில் ஒலிகளை ஒப்பிட்டுக் கூறுகிறார். தமிழின் ஒலி நுட்பங்களையும் எடுத்துரைக்கிறார். மேலும் தமிழில் ஒவ்வோர் அசையும் எவ்வாறு ஒலியைமட்டும் கொண்டு பாகுபாடு செய்யப்படுகின்றது என்பதனை ஐரோப்பிய மொழிகளுடன் ஒப்பிட்டு விளக்கிக் காட்டுகிறார்.

பிறமொழி ஒலிகளிலிருந்து வேறுபடுகின்ற ட, ண, ள, ழ ஆகிய தமிழ் ஒலிகளின் பிறப்பு முறைகளையும் விளக்கிக் காட்டியுள்ளார்.

மொழியை அறிவியல் அணுகுமுறையோடு நோக்கியதன் விளைவாக ஏற்பட்டது மொழியியல். இது இருபதாம் நூற்றாண்டின் சிந்தனைகள் என்பர். ஆனால், வீரமாமுனிவர் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே தாம் இயற்றிய கொடுந்தமிழ் இலக்கணம் என்ற

நூலில் மொழியியல் சிந்தனைகளை வெளியிட்டுள்ளார். அதிலும் விளக்கமொழியியல் (Descriptive Linquistics) சிந்தனைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

பேராசிரியர் செ.வை. சண்முகம் அவர்கள், 'சமூகக் கிளைமொழி வழக்குகள், இலக்கணத்தின் இயல்பு ஆகியவைகளும் பெஸ்கி நன்கு உணர்ந்தவராகக் காணப்படுகிறார். எனவே, அவரைத் தமிழ் இலக்கண அறிஞர் என்பதைவிட, நல்ல மொழியியல் அறிஞர் என்று கூறுவதே பொருத்தமாக இருக்கும்'[6] என்று குறிப்பிடுகிறார்.

எழுத்துகள் எவ்வாறு திரிகின்றன, எவ்வாறு மிகுகின்றன என்பதையும் குறிப்பிடுகின்றார். புணர்ச்சி விதிகளை எளிமையாகக் கற்பதற்குரிய வகையில் எடுத்துரைக்கிறார். தாம் புதிதாகச் செய்த எழுத்துச் சீர்திருத்தத்தை இந்நூலில் கூறுகிறார்.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் பேசப்படும் வட்டார மொழிகளைப் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு, தமிழ்மொழியில் குறிப்பாகப் பேச்சுமொழியைப் பற்றிப் பல கருத்துகளைக் கொடுந்தமிழ் இலக்கண நூலில் கூறியுள்ளார்.

கொடுந்தமிழ் இலக்கணம் வீரமாமுனிவர் தமிழ்மொழி அமைப்பை எவ்வளவு ஆழமாக ஆராய்ந்துள்ளார் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

## செந்தமிழ் இலக்கணம்

தமிழ் இலக்கியங்கள் கவிதை வடிவிலே இருக்கின்றன. கவிதையைப் படித்துப் பொருள் புரிந்துகொள்ள இயலாதவர், தமிழ் இலக்கியத்தைப் புரிந்துகொள்ள இயலாது. குறிப்பாகப் பிற மொழியாளர்க்குப் புரிவது மிகவும் கடினம். எனவே, தமிழ் இலக்கியத்தைக் கற்க விரும்புவோர் கவிதையைப் பற்றியும் இலக்கண விதிகளைப் பற்றியும் அறிந்திருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதப்பட்டதே செந்தமிழ் இலக்கணம் என்று வீரமாமுனிவர் குறிப்பிட்டுள்ளார்.

மேலும், சமயப் பணியாற்றும் ஐரோப்பியர்களுக்குப் பயன்படும் வகையில் எழுதப்பட்டதே செந்தமிழ் இலக்கணம்.

---

6. செ.வை. சண்முகம், கிறித்துவ அறிஞர்களின் இலக்கணப்பணி, ப. 68

அதனால், எழுத்து, சொல், யாப்பு என்னும் மூவகை இலக்கணங்களைப் பற்றி மட்டுமே இந்நூல் கூறுகிறது. ஏனென்றால் அணி இலக்கணம் பற்றி ஐரோப்பியர் அறிந்திலர். இருப்பினும் உவமை, உருவகம் முதலிய அணிகளைப் பற்றியும் யாப்பிலக்கியப் பகுதியில் கூறுகிறார்.

இந்த நூலின் முழுத்தலைப்பு "A Grammar of the High dialect of the Tamil language as shentamil to which is added an introduction termed to poetry " என்பதாகும்.

இந்நூலில் இலத்தீன் மொழியில் 1730-இல் எழுதி முடிக்கப்பட்டு 1822 -இல் ஆங்கில மொழிபெயர்ப்புடன் அச்சிடப்பட்டது.

செந்தமிழ் இலக்கணம் இரண்டு பெரும் பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது.முதல் பிரிவில் எழுத்து, பெயர், வினை என்று மூன்று இயல்கள் உள்ளன. இரண்டாவது பிரிவில் யாப்பு, பா, இனம், செய்யுளின் பண்பு என்ற நான்கு இயல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

கொடுந்தமிழ் இலக்கண நூலை எழுதுகின்றபோதே செந்தமிழ் இலக்கண நூலொன்று எழுதவிருப்பதாக முனிவர் குறிப்பிடுகின்றார். கொடுந்தமிழ் நூல் இயற்றிய இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் 1730-இல் செந்தமிழ் இலக்கணநூல் எழுதப்பட்டது.[7]

கையெழுத்துப் பிரதியாக இருந்த இந்நூலைப் பெஞ்சமின் பாபிங்க்ட்டன் என்பவர் 1822-ஆம் ஆண்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

## தொன்னூல் விளக்கம்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தையும் விளக்கிக் கூறுவதற்காக எழுதப்பட்ட நூல் தொன்னூல் விளக்கம். இதுவும் முனிவரால் 1730-ஆம் ஆண்டு இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்நூலின் முதற்பதிப்பு 1838-இல் வெளியானது.

வீரமாமுனிவர் இயற்றிய ஏனைய இலக்கண நூல்களிலிருந்து இந்நூல் வேறுபட்டது. இது தமிழின் பழைய மரபினைப் பின்பற்றி எழுதப்பட்டுள்ளது.பழைய இலக்கணக் கோட்பாடுகளையும் சுருக்கிக் கூறுகிறது.

7. அமுதன் அடிகள், ப. 165.

மேலும், பழைய இலக்கண நெறிகட்கு ஏற்ப, 'நீட்டல், கழித்தல், மெய்க்கு இருபுள்ளி' என இலக்கணம் அமைத்துள்ளார். அதற்கேற்ப உரையும் எழுதினார்.

இந்நூலில் நன்னூலின் செல்வாக்குக் காணப்படுகிறது என்பர். ஆனால், நன்னூலில் கூறாத மொழிப்புதுமைகளை வரலாற்று மாற்றங்களைத் தொன்னூல் விளக்கம் கூறுகிறது என்று பேராசிரியர் செ.வை. சண்முகம் குறிப்பிடுகிறார் (ப.161).

தொன்னூல் விளக்கத்தின் சிறப்பினை எடுத்து இயல்பும் வகையில் 'தொன்னூல் விளக்கப் புகழ்ச்சிமாலை' எனும் நூல் வெளியிடப்பட்டுள்ளது.

## இலக்கணத் திறவுகோல்

முனிவர் இயற்றிய நான்காவது இலக்கண நூல், இலக்கணத் திறவுகோல். இதனை லூத்திரன் சபையினர் 1876-இல் அச்சிட்டு வெளியிட்டுள்ளனர்.

தமிழ் இலக்கணத்தின் ஐம்பிரிவுகளையும் கிறித்துவச் சமயத் தொண்டர்கள் அறிந்துகொள்ளும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. மேலும் தமிழ் இலக்கியமாகிய பேழையைத் திறப்பதற்குரிய திறவுகோலாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் இஃது எழுதப்பட்டது.

## தமிழ் இலக்கண மரபு

ஒரு சொல்லே அடுத்து அடுத்து வருவது கவிதைக்கு ஒலியும் அழகும் சேர்க்கிறது. இதைத் சொல் பின்வரு நிலையணி என்று தமிழ் இலக்கணம் கூறும். வீரமாமுனிவர் இவ்வணியைப் பல இடங்களில் கையாண்டு கவிதைக்கு அழகு சேர்க்கிறார்.

கோடை இடிபோல் முழங்கிக் கொண்டுவரும் பகைவரது படை, கூட்டிலுள்ள பறவைகள் பயந்து ஓட, பூமி கூசி நெகிழும்படி வந்து கூடியது என்பதைப் பின்வரு நிலையணியைப் பயன்படுத்தி மிகவும் நயமாகக் கூறியுள்ளார்.

'கூடார் முகில் ஆர்த்தன கோடை எனக்
கூடார் தொழ கோ முரசின் குரலோ
கூடார் பறவைக் குலம் அஞ்சி எழ
கூடார் படையால் புவி கூசினதே'

என்று பாடுகிறார்.

இங்கு, 'கூடார்' என்ற சொல் நான்கு வரிகளிலும் நான்கு விதமான பொருளை வழங்குமாறு பாடலை அமைத்துள்ளார்.

முதல் வரியில் உள்ள 'கூடார்' என்பதைக் 'கூடு+ஆர்' என்று (ஆர்-பொருந்தி) பிரித்தால் 'கூடுகின்ற மலையின் உச்சியில் பொருந்தி இருக்கின்ற மேகம்' என்று பொருள்படும்.

இரண்டாவது வரியிலுள்ள 'கூடார்' என்பது. 'நம்மோடு' நட்பாலோ, அன்பாலோ கூடாத பகைவர்' என்று பொருள்படும்.

மூன்றாவது வரியில் கூட்டில் பொருந்தி யிருக்கின்ற பறவை என்றும் பொருள் படும்.

நான்காவது வரியிலுள்ள 'கூடார்' கூடு+ஆர் என்பது கூடி நிறைந்த (ஆர் - நிறைந்த) படை என்றும் பொருள்படும்.

### ஒரு சொல்

நாட்டுப் படலத்தில் சோலையைப் பற்றி வருணிக்கும் பல பாடல்களில் ஒரே சொல்லைப் பாடல் வரிகளில் மீண்டும் மீண்டும் பயன்படுத்தி, ஒவ்வொரு வரியிலும் ஒவ்வொரு விதமான செய்திகளைத் தருமாறு அமைத்திருப்பது மிகவும் பாராட்டற் குரியது.

குற்றம் கண்டு பிடிக்க முடியாத மக்கள் விரும்பி உறையும் நாடு என்பதை,

> ' வண்டு உரைத்து மலர்ந்து அலர்ப் புண் அலால்
> வண்டு உரைத்து மலர்ந்து அகப்புண் இலால்
> வண்டு உரைத்து மயக்கு இல நாடு, கலை
> வண்டு உரைத்து மயக்கு உறும் நாடு அதே '

என மிக நயமாக எடுத்து இயம்புகிறார் வீரமாமுனிவர். அந்த நாட்டில், வண்டுகள் உராய்வதனால் மலர்ந்த மலர்களிடையே காணப்படும் புண்களே அல்லாமல் அம்பு துளைப்பதனால் ஏற்படும் புண்கள் இல்லாத நாடு. குற்றம் கூறி மயக்கம் அடைவதற்கு வாய்ப்பில்லாத நாடு. கடலிலுள்ள சங்குகள் ஒலித்து இன்ப மயக்கம் மட்டுமே அந்த நாட்டில் இருக்குமென்று குறிப்பிடுகின்றார். துன்ப மயக்க மில்லாது இன்ப மயக்கம் மட்டுமே இருக்கும் நாடு அது.

இதைப் போல, மாலை இருள் மாறிய பின்னரும் நிறை மதிபோன்ற மகளிர்கள் 'முல்லை சான்ற கற்பெனும்' பெயருக்கு

ஏற்ப, முல்லை மலரை அணிந்திருந்தனர் என்று திரும்பத்திரும்ப 'மாலைமாறி' எனும் சொற்றொடர்களைப் பயன்படுத்தி மிக அழகுற அமைத்துள்ளார்.

> ' மாலை மாறி வயங்கிய மா மதி
> மாலை மாறி வயங்கிய மாதர்கள்
> மாலை மாறிய கற்புடை மார்பு உறை
> மாலை மாறிய கற்பு உடை மாண்பர் ஓ'

இப்பாடல் ஓசை நயம் வழங்குவதோடு, கற்பதற்கும், நினைவில் வைத்துக்கொள்வதற்கும் மிகவும் வாய்ப்பான ஒன்று எனலாம். ஆனால், அவற்றைவிட மிகவும் சிறப்பான ஒன்று, வேற்று நாட்டைச் சார்ந்த ஒருவர், இதிலும் திராவிட மொழிக் குடும்பத்திற்குச் சிறிதளவேனும் தொடர்பில்லாத ஐரோப்பாவைச் சார்ந்த ஒருவர், சொல்லாடல் புரிந்திருப்பதுவே யாகும். அந்த அளவுக்குத் தமிழ்ச் சொல் வளம் மிகுந்தவர் வீரமாமுனிவர்.

இதைப் போல 'அற', 'அறுந்து விழ' 'அழிய' எனும் பொருள் தரும் வகையில் ஒரு பாடலிலேயே பதின்மூன்று இடங்களில் அமைத்துள்ளார்.

> ' கொடிகள்அற, வானில் தவழ் குடைகள் அற
> கொடிகளோடு தேரும்அற, யானை
> அடிகள் அற, வாசிஅறி, நெடிய சிலை நாணி அற
> அரணமொடு மார்பும் அற, மற மன்னர்
> முடிகள் அற, முங்கம் அற, அணிகள் அற, மன்னர் அற
> .முனையும் ஒரு சோசுவனோடு, ஆர் ஆர்
> இடிகள் அற வேகு அமரில், எழுது கணையோடு
> கணை எழுத எதிர்க்கின்ற வருள், உயர்ந்தார்'

கொடிகள் அறவும், வானளாவிய குடைகள் அறவும், மேகத்தை அறுக்கும் கொடிகளோடு தேரும் அறவும், யானையின் கால்கள் அறவும், குதிரைகள் அறவும், நெடிய வில்லோடு சேர்ந்து நாணும் அறவும், கவசத்தோடு சேர்ந்து மார்பும் அறவும், துணைவந்த வீர மன்னர்களுடைய முடிகள் அறவும் தலைகள் அறவும், அணிகள் அறுந்து விழவும், வீரர்கள் அறவுமாகச் சோசுவன் முனைந்து போரிட்டான். இடிகள் அறுமாறு நடந்த போரில் உயிர் பிழைத்தவர் யார் யார், என்று விளக்குகிறார் ஆசிரியர். அப்போர் எவ்வாறு வகையான அழிவுகளை ஏற்படுத்தியது என்பதை விளக்க 'அறு' என்ற ஒரு சொல்லையே மிகவும் பொருத்தமாகவும், சிறப்பாகவும் கூறுகின்றார் வீரமாமுனிவர்.

## சொற்பொருள் பின்வரு நிலை அணி

சொற்பொருள் பின்வரு நிலை அணியைப் பயன்படுத்தி, இரவு காட்சி ஒன்றினை மிக அழகாக வருணிக்கிறார் வீரமாமுனிவர்.

'பூவிடை அளிகள் துஞ்ச, பொதும் பிடை மயில்கள் துஞ்ச,
கோவிடை அன்னம் துஞ்ச, கொம்பிடை குயில்கள் துஞ்ச,
மாவிடை முசுக்கள் துஞ்ச, மருளிடை இரவு துஞ்ச,
நாவிடை உரைகள் துஞ்ச, நலம் எலாம் துஞ்சும் காவே'

வண்டுகள் மலர்களில் துயிலவும், மரப் பொருந்துகளில் மயில்கள் துயிலவும், தடாகத்தில் அன்னங்கள் துயிலவும், கொம்புகளில் குயில்கள் துயிலவும், மாமரங்களில் கருங்குரங்குகள் துயிலவும், மயக்கத்திடையே இரவு துயிலவும், நாவுகளில் நின்று எழும் பேச்சுகளெல்லாம் துயிலவுமாக, இரவுப் பொழுதில் அச்சோலையின் நலங்கள் எல்லாமே தூங்கிக் கிடக்கும் என்பது இப்பாடலின் கருத்து. துஞ்ச என்ற ஒரே சொல்லை வெகு நயமாகக் கையாண்டுள்ளார்.

மேலும் தமிழ் இலக்கிய மரபைப் பின்பற்றிப் பலாக் கனிகள் தோறும் குரங்குகள் பாய்ந்து உலாவுவதாகவும், தேன் ஒழுகுவதாகவும் பாடல்களை அமைத்துள்ளார்.

'வருக்கையின் கனிகள் தோறும் வானரம் உலவிப் பாய,
செருக் கையின் குருதிபோலச் சிந்து தேன் பெருக்கு உற்று ஓடி
பருக்கையின் விளங்கும் தெண் நீர்ப் பரப்பும் ஆறு இடத்து இட்டு ஏவித்
தருக்கையின் வனைந்த மாலைச் சாரல்கண் போயினாரே'

என்ற பாடல் சிறந்ததோர் எடுத்துக்காட்டு.

பலாக் கனிகளில் குரங்குகள் பாய்ந்து உலாவவும், போரிடத்துச் சிந்தும் இரத்தம் போலச் சிந்தும் தேனோடு பெருக்கெடுத்தோடி, பளிங்குபோல் விளங்கும் தெளிந்த நீரைப் பரப்பி ஓடும் ஆற்றைத் தமக்கு இடப் புறமாக விட்டுச் சென்று, மலர்களைத் தாங்கி நிற்கும் மலைச் சாரல் வழியாகச் சென்றனர்.

இதில், தமிழகச் சோலைகளின் வளத்தை வியந்து கூற விழையும் கவிஞர்கள், குரங்குகள் பாய்ந்து உலாவும் அளவுக்குப் பலாப் பழங்கள் மிகுந்த சோலை. மலர்களிலிருந்து தேன் சொரியும் அளவுக்கு வளமானது என்று குறிப்பிடுவர். அந்த மரபையே பின்பற்றிச் சோலையின் வளத்தைக் குறிப்பிடுகின்றார்.

### தமிழ் மரபும் பண்பாடும்

வீரமாமுனிவர் தம் படைப்புகளில் தமிழ் மரபையும் பண்பாட்டையும் பெரிதும் பின்பற்றினார்.

அன்னை மரியாளைத் தமிழ்ப் பெண்ணாகவே கண்டார். அன்னை மரியாளுக்குத் தாம் அமைத்த ஆலயங்களில் எல்லாம் அன்னையின் திருவுருவத்தைத் தமிழ்ப் பெண்ணாகவே காட்சியளிக்கச் செய்தார். 'பெரிய நாயகி' 'அடைக்கல மாதா' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்.

காப்பியத்தில் இடம் பெற்றுள்ள கதை மாந்தர்களுக்கு அமலன், விமலன், வளன் போன்ற தமிழ்ப் பெயர்களையே சூட்டினார்.

தமிழ்ப் பெண்கள் தம் காலில் அணியும் அணிகலன்களை யூதேயா நாட்டுப் பெண்கள் அணிந்திருப்பதாக அணிவித்து மகிழ்கிறார். மரியாளின் தோழிகள் தம் காலில் சிலம்பை அணிந்திருப்பதாக

'எழில் ஏந்து சிலம்பு இரட்ட'

என்று குறிப்பிடுகின்றார்.

மேலும் கிண்கிணியையும் மேகலையையும் அணிந்திருப்பதாக இன்னொரு இடத்தில் குறிப்பிடுகின்றார்.

தமிழர்களின் வாழ்வோடும், பண்பாட்டோடும் தொடர்புடைய ஒன்று மலர், மன்னர்களின் இலச்சினை, போருக்குரிய அடையாளம், இறை வழிபாடு, மங்கல நிகழ்ச்சி, புலவர்களின் உவமை, உருவகம் முதலிய அனைத்திலும் இடம் பெறுவது மலர். இந்த உண்மையை நன்கு உணர்ந்தவர் முனிவர். எனவே, வாய்ப்புக் கிடைக்கும் இடங்களிலெல்லாம் அன்னை மரியாளை,

'மலரினாள்'

'மலரினும் தூயவள்'

'செந்தாமரை அன்னாள்'

என்றும், இறைவனின் பாதங்களைத்

'தாள் மலர்'

என்றும், இறைவனை,

'மதுமலர் வடிவாய்'

என்றும் பலவாறு மலரோடு ஒப்பிட்டுப் பாராட்டுகின்றார்.

## தமிழ் மரபு

தலைவன் பிரிந்து சென்றால் அவனை நினைத்து வருந்தும் தலைவி, புள்ளினங்களையும் இயற்கைப் பொருட்களையும் அழைத்துத் தம் துன்பங்களைக் கூறுவதும், தூது செல்ல வேண்டுவதும் தமிழ்க் கவிதைகளில் மரபாகப் பின்பற்றப்படுவதை வீரமாமுனிவர் பல இடங்களில் பின்பற்றுகிறார்.

இயேசு பெருமானைப் பிரிந்து தந்தை சூசை கூறுவதாக,

' குயிலே, கிளியே, வெண்குருகே, கோ அனமே,
மயிலே, இணைந்து, என்மனம் குளிர்ப்ப, அன்னாள் கொள்
எயிலே வனமே இயம்பிரேல், போய், அவற்கே
துயிலே இல நான் துஞ்சுவன் என்பீர். '

என்று குறிப்பிடுகின்றார்.

'குயிலே, கிளியே, வெண்மை நிறம் உடைய நாரையே, அரச அன்னமே, மயிலே, எனக்கு இரங்கி, என் மனம் குளிருமாறு, அவன் மறைவிடமாகக் கொண்டுள்ள மதிலையோ, வனத்தையோ சொல்லுங்கள். அவ்வாறு சொல்ல மாட்டீர் ஆயின், நீங்களே போய், தூக்கமே கொள்ளாத நான் இனி இறப்பேன் என்று அவனுக்குச் சொல்வீர்' என்று சூசை கூறுவதாக வீரமாமுனிவர் தமிழ் மரபைப் பின்பற்றிப் பாடலை அமைத்துள்ளார்.

மேலும், ஏழுஉலகு, ஈரேழு உலகு, ஏழுபிறவி போன்ற நம்பிக்கை மேலை நாட்டில் குறிப்பாகக் கிறித்தவ சமயத்தினரிடம் இல்லை. இந்து சமய நம்பிக்கையாகிய இம்மரபைத் தேம்பாவணியில் இடம் பெறச் செய்துள்ளார். இயேசு பெருமான் ஆணையிட, மரியாளும், சூசையும் சென்ற செய்தியைக் குறிப்பிடும்போது 'எழுக, என்றனன் ஏழ் உலகு ஆள்பவன்' என்று சுட்டுகின்றார்.

தமிழ் இலக்கியத்தில் நிலத்தைத் தாயாகவும், கடலை அவளது ஆடையாகவும், பாவித்துப் பாடும் மரபு உண்டு. நிலமகளைத் தன் தாயென்றும் பார்க்காமல் கிழித்துக் கீறும் உழவர்களுக்கும் உணவாகவும், தம் மக்களைத் தாங்கும் நிலமாகவும் திகழ்வதை உவமையாகத் தமிழ் பாக்களில், குறிப்பாகத் திருக்குறள் போன்ற நீதி நூற்களிலும் பார்க்கின்றோம். இத்தமிழ்க் கவி மரபைப் பின்பற்றி,

' உவர்க்கும் தாழ் கடல் உடுத்து அகள் விரி தலை ஞாலம்
எவர்க்கும் தாய் என எண் இலா கிழிபடக் கீறும்
அவர்க்கும் தான் உணவு அளித்தலே, நோய் செய்வார்க்கு உதவி
தவர்க்கும் தாவ அருந்தருமம் என்று இயற்றுதல் போன்றே '

என, தொல்லை செய்வாக்கும் தீங்கு செய்யாது நன்மை செய்யும் நிலத்தைப் போன்றோர்கள் அருளுடையவர்கள் என்று குறிப்பிடுகின்றார் வீரமாமுனிவர்.

## அகராதிகள்

அகரவரிசையில் முதன் முதலில் தமிழில் அகராதியை அமைத்த பெருமை வீரமாமுனிவர்க்கு உண்டு. தமிழில் உள்ள பழைய நிகண்டுகளையும் தமது பன்மொழி அறிவையும், தமிழ் இலக்கிய-இலக்கணப் புலமையையும் அடிப்படையாகக் கொண்டு சதுர் அகராதியையும், பேச்சுமொழியை அடிப்படையாகக் கொண்டு தமிழ்-இலத்தீன் அகராதியையும், அவர்காலத்தில் ஆட்சியிலும் சமயப்பணியிலும் ஈடுபட்டிருந்த போர்த்துக்கீசியருக்காகப் போர்த்துக்கீஸ்-இலத்தீன்-தமிழ் அகராதியையும் இயற்றினார்.

தமிழில் அகராதித் துறைக்கு வீரமாமுனிவர் செய்துள்ள பணி போற்றற்குரியது.

### சதுரகராதி

சதுரகராதி 1732-இல் எழுதப்பட்டு[8] 1824-இல் அச்சிடப் பெற்றது,[9] என்று குறிப்பிடுவர்.

சதுரகராதி பல பதிப்புகளைக் கண்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டில்மட்டும் ஒன்பது பதிப்புகள் வெளிவந்தன. இதுவரையில் ஏறத்தாழ 14 பதிப்புகள் வந்துள்ளன என்று தெரிகிறது.

பிற்காலத்தில் வந்த அகராதிகளுக்குச் சதுரகராதி ஒரு முன்னோடியாக அமைந்தது. இந்நூலின் சிறப்பினைப் பற்றிப் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை கீழ்க்குறிப்பிடுமாறு கூறுகின்றார்.

> இவ்வகராதி நம்நாட்டுப் பழமையான பொருள்கூறும் முறைகளை முற்றிலும் மாற்றிவிட்டது. பொருள் தெளிவை விடப் பொருள் மயக்மே தருமாறு அமைந்திருந்த தொடக்க கால நிகண்டுகளின் செய்யுள்நடை, வேண்டுமென்றே ஒதுக்கப்பட்டதெனத் தொடக்கப் பாடல் அறிவிக்கிறது. சரியான அகராதி நிரன்முறை பின்பற்றப்படுகிறது. பொருள் கூறுவதிலும் கடினச் சொற்களுக்கு மட்டும்

---

8. கு. இன்னாசி, ப. 49
9. அமுதன் அடிகள், ப. 172

பொருள்கூறும் பழமையான மரபு முதன்முறையாக நீக்கப்பட்டுப் பல எளிய சொற்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்துகின்ற சொற்களுக்குப் பொருள் தரும் வகையில் இந்த அகராதி அமைக்கப்பட்டுள்ளது.

தமிழிலுள்ள 'கடுங்காயிலகனி நஞ்சு', 'சக்கிரே புரனி நஞ்சு'போன்ற பழமொழிகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்துள்ளார். தமிழிலுள்ள சில பழமொழிகளுக்கு இணையான இலத்தீன் பழமொழிகளையும் இந்த அகராதியில் கொடுத்துள்ளார். 'எறும்பு நடக்க நடக்கக் கல்லும் குழியாகும்', 'துஞ்சி நின்றான் மிஞ்சியுண்ணான்', 'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்'போன்றவை இதற்கு உரிய எடுத்துக் காட்டுகளாகும்.

பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி, தொடையகராதி எனும் நான்கு பிரிவுகளைக் கொண்டது சதுரகராதி.

சதுரகராதியின் பின்னர்த் தோன்றிய அகராதிகள் அனைத்தும், சதுரகராதியையே மூலமாகக் கொண்டுள்ளன. அதேபோல, இதற்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டுகளில் சதுரகராதியின் செல்வாக்குக் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாகப் பொதிகை நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு, விரிவு நிகண்டு, பொருட்டொகை நிகண்டு முதலியனவற்றைக் குறிப்பிடலாம்.

### தமிழ் - இலத்தீன் அகராதி

பேச்சு மொழிக்கென இயற்றப்பட்டது தமிழ்-இலத்தீன் அகராதி. இது 1882-ஆம் ஆண்டு அச்சிடப்பெற்றது. இதில், தமிழ்ச்சொற்களை அகர வரிசையில் தொகுத்து அவற்றிற்குரிய பொருள்கள் இலத்தீன் மொழியில் கொடுக்கப்பட் டுள்ளன. சில இடங்களில் பிரஞ்சிலும் போர்த்துகீசிலும் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இதில், ஒன்பதாயிரத்திற்கும் மேற்பட்ட சொற்கள் இடம் பெற்றுள்ளன. சிலவற்றைச் சொற்களாக மட்டுமன்றி, மரபுத் தொடர்களாகவும் குறிப்பிட்டுப் பொருள் கூறுகிறார். சொற்கள் மொழியில் பயன்படும் முறையைத் தெளிவாக்க, அவற்றைச் சொற்றொடர்களிலும் சில இடங்களில் எடுத்துரைக்கிறார்.

மருத்துவத் துறையிலும் புலமையுடையவராக வீரமாமுனிவர் திகழ்ந்தார். தம் புலமையைத் தம் அகராதியில்

வெளிப்படுத்தியுள்ளார். மருத்துவம் தொடர்பான சொற்கள், நோய்கள், மருந்துகள், முறைகள் ஆகியவைபற்றிக் குறிப்பிடுகின்றார். மேலும், ஒரு சொல்லுக்குரிய பொருளைக் குறிப்பிடுவதோடு அதுதொடர்பான செய்திகளையும் குறிப்பிடுகின்றார். எடுத்துக்காட்டாகக் 'காய்ச்சல்' என்னும் சொல்லுக்குப் பொருள் கூறும்போது 19 வகையான காய்ச்சல்களைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். கருஞ்சீரகம், கோரோசனை, சாதிலிங்கம், தூதுவளை போன்றவை மருந்துகளாகப் பயன்படுவதுபற்றியும் குறிப்பிடுகின்றார்.

சமயப் பணியாளருக்குப் பயன்படுவதற்காகத் தொகுக்கப்பட்ட இந்த அகராதியில் கிறித்துவ சமயம் தொடர்பான பல சொற்களும் இடம் பெற்றுள்ளன.

### போர்த்துகீஸ்-இலத்தீன்-தமிழ் அகராதி

வீரமாமுனிவர், தமது முன்னுரையில் தமிழ்-இலத்தீன் அகராதியின் இரண்டாவது பகுதி என்று குறிப்பிட்டிருந்தாலும், இது முற்றிலும் தனித்தன்மை வாய்ந்த ஒரு தனி அகராதி.

இதில் 4, 343 சொற்கள் இடம் பெற்றுள்ளன.

தொடக்க நிலையில் தமிழ் கற்போர்க்குப் பயன்படும் வகையில் எழுதப்பட்டதாயினும், போர்த்துக்கீசியச் சொற்களை அகரவரிசையில் அமைத்து, அவற்றிற்கு இலத்தீனிலும், தமிழிலும் பொருள் கூறப்படுகிறது. பொதுவாகப் பெரும்பாலும் போர்த்துக்கீசியச் சொற்களுக்கு இணையான இலத்தீன் சொற்களைக் கூறிவிட்டு, அதன் பின்னர்த் தமிழில் பொருள் கூறுகிறார்.

இந்த அகரரதியின் நோக்கத்தைக் குறிப்பிடும்பொழுது, குழந்தைகள் கற்பதைப் போல, எளிமையான சொற்களைப் புரிந்து கொண்ட பின்னர், அதிலிருந்து கடுமையான சொற்களை எளிதில் புரிந்துகொள்வதற்காகவும், ஐரோப்பிய நாட்டைச் சார்ந்த சமயத் தொண்டர்கள் பயன் பெறுவதற்காகவும் இவ்வகராதியை இயற்றியதாகக் கூறுகிறார் வீரமாமுனிவர்.

இந்த அகராதி, கையெழுத்துப் பிரதியாகவே, செண்பகனூர் (Shenbaganur) எனும் இடத்திலுள்ள இயேசு சபையாரின் (Society of Jesus), சமய ஆவணக் களரியில் (Mission Archives) இருக்கிறது.

## உரைநடை நூல்கள்

தொடக்க காலத்தில் தமிழில் உரைநடை நூல்கள் இயற்றிய ஐரோப்பியர்களுள் குறிப்பிடத்தக்கவர் இராபர்ட்-டி-நொபிலி. அதன்பின்னர், சீகன்பால்கு போன்ற வேறு சில ஐரோப்பியக் கிறித்தவ சமயத் தொண்டர்கள் உரைநடை நூல்களை இயற்றியிருந்தாலும் அவர்களுள் குறிப்பிடத்தக்க சிறப்புடையவர் வீரமாமுனிவரே. வீரமாமுனிவரின் உரைநடைப் பணியின் பெருமையினை ஆய்ந்த பேராசிரியர் கு. இன்னாசி அவர்கள் 'தற்காலத் தமிழ் உரைநடையில் காணப்படுகின்ற அனைத்துச் சிறப்புக் கூறுகளையும் கொண்டு, தமிழ் மறுமலர்ச்சி உரைநடைக்கு வழியமைத்தவர் வீரமாமுனிவரே ஆகும்'[10] என்று பாராட்டுகின்றார்.

வீரமாமுனிவர் 9 உரைநடை நூல்களை எழுதினார். அவற்றுள் 7 நூல்களே அச்சிடப்பட்டு நூல்களாக வெளிவந்தன. ஏனைய இரண்டு நூல்களும் கையெழுத்துப் பிரதிகளாகவே உள்ளன.

வீரமாமுனிவர் சமயத் தொண்டாற்றிய காலத்தில் வேறுவேறு பிரிவைச் சார்ந்த கிறித்தவ சமயத்தவர்களும் சமயப் பிரச்சாரம் செய்து வந்தனர். அவர்களுள், லுத்தரன் சபையைச் சார்ந்தவர்களுக்கும் வீரமாமுனிவர் பங்குகொண்ட இயேசு சபையைச் சார்ந்தவர்களுக்கும் வீரமாமுனிவர் பங்குகொண்ட இயேசு சபையைச் சார்ந்தவர்களுக்கும் அடிக்கடி, கருத்து வேறுபாடுகளும், கருத்து மோதல்களும் ஏற்பட்டன. அப்பொழுது வீரமாமுனிவர் தாம் சார்ந்த சபையினரின் கருத்துகளை விளக்கவும், லுத்தரன் சபையாரின் கருத்துகளிலுள்ள குறைகளைச் சுட்டிக் காட்டவும், மறுத்துரைக்கவும் 'வேத விளக்கம்', 'லூத்தர் இனத்தியல்பு', 'பேதகம் மறுத்தல்'போன்ற உரைநடை நூல்களை இயற்றினார். கிறித்தவக் குருமார்களுக்குத் துணைபுரியும் வேதியர்களின் கடமைகளைப்பற்றி, 'வேதியர் ஒழுக்கம்' என்ற உரைநடை நூலை எழுதினார் என்று முன்னர்க் குறிப்பிட்டோம். செந்தமிழ், கொடுந்தமிழ் என இருவேறு வகைகளாகப் பிரித்து, அவற்றிற்குச் செந்தமிழ் இலக்கணம், கொடுந்தமிழ் இலக்கணம் என இரண்டுவகை இலக்கண நூல்களைத் தனித்தனியே எழுதினார் வீரமாமுனிவர். அதைப்போல உரைநடையின் இருவகைகளுக்கும் இரண்டு உரைநடை நூல்கள் எழுதினார். செந்தமிழ் நடைக்கு வாமன் சரித்திரத்தையும், கொடுந்தமிழ் நடைக்குப் பரமார்த்த குரு கதையையும் எழுதியுள்ளார்.

10. கு. இன்னாசி, ப. 64

## வேத விளக்கம்

முன்னர்க் குறிப்பிட்டதுபோல் லூத்தரன் சபையாரின் கருத்துகளின் குறைகளைச் சுட்டிக் காட்டுவதற்காக எழுதப்பட்ட நூல், வேத விளக்கம்.

இந்நூலை வீரமாமுனிவர் 8 இயல்களாகப் பிரித்துள்ளார். இவற்றில் 140 தலைப்புகள் உள்ளன. நூலின் இறுதியில், நூலில் கூறப்பட்ட பொருள்களைப் பற்றி 14 பக்கங்களில் பொருளடக்க அகரவரிசை அட்டவணை (Index) கொடுக்கப்பட்டுள்ளது. இத்தகைய பொருளடக்க அட்டவணையை நூலின் பின்பக்கத்தில் சேர்க்கும் மரபை முதன்முதலில் தமிழில் அறிமுகப்படுத்தியவர் வீரமாமுனிவரே.[11]

நகைச்சுவையும், அங்கதமும் கலந்த உரைநடையை இந்நூலில் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்.

## பேதக மறுத்தல்

முனிவரின் வேத விளக்கத்திற்கு மறுப்பாகத் 'திருச்சபைப் பேதகம்' என்னும் நூலை லூத்தரன் சபையார் போர்த்துகீசியம் தமிழ் ஆகிய இருமொழிகளிலும் வெளியிட்டனர். இதற்கு மறுப்பாகப் 'பேதக மறுத்தல்' எனும் நூலை வீரமாமுனிவர் எழுதினார். இந்நூல் 1728-இல் இயற்றப்பட்டது.

## லூத்தர் இனத்தியல்பு

லூத்தரன் சபையார்கள் எழுதிய நூல்களில் காணப்பட்ட குறைகளைச் சுட்டிக் காட்டுவதற்காக எழுதப்பட்ட நூல் லூத்தர் இனத்தியல்பு.

லூத்தரன் சபையாரும் கிறித்துவச் சமயச் சார்பான பல உரைநடை நூல்களை எழுதி வெளியிட்டார்கள். அவற்றில் பல குறைகள் இருந்தன. அந்தக் குறைகளைக் கூறி, அவற்றிற்கான சரியான கருத்துகளை இந்நூலில் வெளியிட்டார்.

## வேதியர் ஒழுக்கம்

முனிவர் இயற்றிய உரைநடைகளில் சிறந்த நூல் வேதியர் ஒழுக்கம். இது 28 அதிகாரங்களைக் கொண்டது. இந்நூல் 1730-ஆம் ஆண்டில் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது.[12]

11. K. Meenakshisundaram, P. 281
12. அமுதன் அடிகள், ப. 159

கத்தோலிக்கக் கிறித்துவத் துறவியர்க்கு உறுதுணையாக இருந்து பணியாற்றிய வேதியர்களின் வாழ்வையும் பணிகளையும் பற்றி இந்நூல் குறிப்பிடுகிறது.

இந்நூல் இலத்தீனிலும், தெலுங்கிலும் கன்னடத்திலும் மொழிபெயர்க்கப்பட்டது. டாக்டர் ஜி.யு. போப் அவர்களால் பாராட்டப்பட்டது.

### பரமார்த்த குரு கதை

இது ஒரு சிறுகதைத் தொகுப்பு நூல். இந்நூல் மிகவும் நகைச் சுவையுணர்வுடையது. தமிழில் எழுதப்பட்ட இந்நூலைப் பின்னர் முனிவரே இலத்தீனில் மொழி பெயர்த்தார்.

இந்நூல், கத்தோலிக்கக் கிறித்தவ மாணவர்களுக்காக இயற்றப்பட்டது. இந்நூலின் ஒருபகுதி வேதவிளக்கம் என்ற நூலில் பயன்படுத்தப்பட்டது.

இந்நூல் 1845-இல் அச்சிடப்பட்டது. இதுவரையிலும் 8 பதிப்புகள் வெளிவந்துள்ளன.

பரமார்த்த குரு என்ற குருவுக்கு, மட்டி, மடையன், பேதை, மிலேச்சன்,மூடன் என்று ஐந்து சீடர்கள் இருந்தனர். இவர்களுக்கிடையே நிகழும் நகைச்சுவை நிகழ்ச்சிகளையே பரமார்த்த குரு என்ற கதையில் குறிப்பிடுகின்றார் முனிவர். நிகழ்ச்சிகளை எவ்வாறு நகைச்சுவையாக அமைத்துள்ளார் என்பதற்கு எடுத்துக்காட்டாகக் கீழ்க் குறிப்பிடும் நிகழ்ச்சியைப் பார்க்கலாம்.

### குருவும் சீடர்களும்

பரமார்த்த குருவும் அவரது ஐந்து சீடர்களும் ஏனைய சீடர்களை வினவுவதற்காகச் சென்று, கிராமங்கள் வழியாக மீண்டும் வரும்பொழுது ஒருநாள் நடு இரவு நேரத்தில் ஓர் ஆற்றங்கரைக்குச் சென்றார்கள்.

அந்த ஆறு கொடியது என்றும், எனவே அது விழித்திருக்கும் வேளையில் அந்த ஆற்றைக் கடக்கக்கூடாது என்றும் கூறினார் குரு. எனவே, அந்த ஆறு தூங்கிக்கொண்டிருக்கிறதா விழித்துக் கொண்டிருக்கிறதா என்று அறிந்து வர மிலேச்சன் எனும் தம் சீடனை அனுப்பினார். மிலேச்சன் புகையிலைச் சுருட்டைத் தீப்பற்ற வைப்பதற்காகக் கையிலேந்தியுள்ள கொள்ளிக்கட்டையைக்

கையிலேந்திக் கொண்டு சென்று, அதைத் தண்ணீருக்குள் செலுத்தினான். தீக்கட்டையைத் தண்ணீருக்குள் செலுத்தியதும் சுறீரெனப் புகைந்த புகை வெளியே வந்தது. அதைக்கண்ட மிலேச்சன் பதறி விழுந்து ஓடி, 'ஐயா, ஐயா இப்போது நதியைக் கடக்கத் தருணமன்று. அது விழித்திருந்து நான்தொட்ட உடனே நச்சு நாகம்போல் சீறித் தீயெரி கோபத்தில் பாய்ந்து என்னை எதிர்த்தது. அதன் கோபத்திலிருந்து உயிர்தப்பி ஓடிவந்தேன்' என்று குருவிடம் கூறினான்.

இவ்வாறு பல நகைச்சுவை நிகழ்ச்சிகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

**வாமன் சரித்திரம்**

தேம்பாவணிக் காப்பியத்தில் 28-வது படலத்தில் இடம் பெற்றுள்ள சூசைக்கும் வாமனுக்கும் இடையிலான உரையாடல் பகுதி, 'வாமன் சரித்திரம்' எனும் தலைப்பில் உரைநடை நூலாக வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் 6 பக்கங்களையே கொண்டுள்ளது. இது, 1843-இல் அப்பாவுப்பிள்ளை என்பவரால் அச்சிடப்பட்டது.[13]

## கையெழுத்துப் பிரதிகள்

மேலும் கையெழுத்துப் பிரதிகளாகவும் சில உரைநடை நூல்கள் உள்ளன. 'திருச்சபைக்குப் பொது நிருபம்', 'திருச்சபைக் கணிதம்' ஆகிய இரண்டும் அச்சிடப்படாமல் கையெழுத்துப் பிரதிகளாகவே உள்ளன. இவை இரண்டும் செண்பகனூரில் உள்ள இயேசு சபையாரின் ஆவணக்களரியில் உள்ளன.

திருச்சபையாருக்குப் பொது நிருபம் எனும் நூல் கத்தோலிக்கர் அனைவருக்கும் முனிவர் தாமே அறவுரை கூறுவதுபோல் அமைந்தது.

திருச்சபைக் கணிதம் எனும் நூல் பழைய கிரகோரியன் பஞ்சாங்கத்தைப் (Gregorean Calender) போல் தமிழில் எழுதப்பட்ட ஒரு நூல். இந்தப் பஞ்சாங்கத்தைப் பற்றி வீரமாமுனிவர்,

> ஐரோப்பாக் கணிதம் படிக்கும் கத்தோலிக்க ரோமன் திருச்சபையில் வருடந்தோறும் வருகிற வருஷப்பிறப்பு, மாதப்பிறப்பு, வாரம், தேதி வேற்றுமைகளுள் கடன் திருநாள்

13. K. Meenakshisundaram, P. 286

> கடனொரு சந்தி சுத்த போசங்களும் மற்றத் திருநாட்களுமறியும்படிக்கு உண்டாக்கப்பட்ட பஞ்சாங்கக் கணிதம்

என்று நூலின் தொடக்கத்திலேயே குறிப்பிட்டுள்ளார்.[14] இந்நூல் 68 பக்கங்களைக் கொண்டது. சில வரிகளில் செய்யுளும் இடம் பெற்றுள்ளது.

இவ்வாறு உரைநடை நூல்கள் பலவற்றை இயற்றித் தமிழ் உரை நடையை வளப்படுத்தினார்.

## உரை நூல்கள்

உரைநடை நூல்கள் பலவற்றைப் படைத்த வீரமாமுனிவர், உரை நூல்களையும் இயற்றினார்.

### தொன்னூல் விளக்க உரை

தாம் எழுதிய தொன்னூல் விளக்கம் என்னும் இலக்கண நூலுக்குத் தாமே உரை எழுதினார். பழந்தமிழ் இலக்கணங்களை அனைவரும் அறிந்துகொள்ளும் வகையில் தொன்னூல் விளக்கத்திற்கு உரையெழுதியுள்ளதாகத் தம் உரையில் குறிப்பிடுகின்றார்.

தொல்காப்பியம், நன்னூல், நேமிநாதம், புறப்பொருள் வெண்பாமாலை, தண்டியலங்காரம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, வீரசோழியம், வெண்பாப் பாட்டியல் போன்ற பல இலக்கண இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் பலவற்றை எடுத்துக் கையாண்டுள்ளார்.

தமது உரைக்கு மேற்கோள் காட்டுவதற்காகப் பல இலக்கண நூல்களையும் இலக்கியங்களையும் வீரமாமுனிவர் நன்கு படித்திருக்கிறார். அது அவரது புலமைக்கும் ஈடுபாட்டிற்கும் சான்றாகத் திகழ்கிறது.

### திருக்குறள் உரை

திருக்குறளின் சிறப்புகளையும், அதைக் கற்பதால் ஏற்படும் பயனையும் ஐரோப்பியர்களுக்குப் புலப்படுத்தும் நோக்கத்துடன் திருக்குறளை இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்தார். அதோடு அமையாமல் திருக்குறட்பாக்களில் சிறந்த பாக்களைத் தேர்ந்தெடுத்துப் பாமர மக்களும் புரிந்துகொள்ளும் வகையில் தாமே

14. K. Meenakshisundaram, P. 285

உரை எழுதினார். பாமர மக்களிடமும் திருக்குறள் சென்று சேர வேண்டும், அதன் பெருமையை அவர்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்னும் நோக்கத்துடனேயே திருக்குறளுக்கு உரை எழுதினார்.

பொதுமக்கள் எளிதில் புரிந்துகொள்வதற்காகவே உரைநடை நூல்களையும், பல உரைகளையும் வீரமாமுனிவர் எழுதினார்.

## மொழிபெயர்ப்பு நூல்

வீரமாமுனிவர் திருக்குறளில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். அதில் நல்ல புலமையும் பெற்றிருந்தார். எனவே, அதில் ஒரு வல்லுநராகத் திகழ்ந்தார்.[15] வாய்ப்புக் கிடைக்கும்பொழுதெல்லாம் திருக்குறளை மேற்கோளாகக் காட்டினார்; அதன் பெருமைகளை எடுத்துரைத்தார்.

தாம் இயற்றிய தேம்பாவணி எனும் காப்பியத்தில் முப்பதிற்கும் மேற்பட்ட பாடல்களில் திருக்குறள் தொடர்களையும் கருத்துகளையும் கையாண்டுள்ளார். அதேபோல் தொன்னூல் விளக்கம், செந்தமிழ் இலக்கணம், திறவுகோல் ஆகிய இலக்கணநூல்களிலும் பல இடங்களில் திருக்குறளை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

### முதல் முயற்சி-இலத்தீன் மொழிபெயர்ப்பு

திருக்குறளில் தமக்கிருந்த ஆழ்ந்த புலமையினால், முதன்முறையாக இலத்தீன் மொழியில் அதனை மொழிபெயர்த்தார். இம்மொழிபெயர்ப்பு ஐரோப்பிய மொழிகளில் மட்டுமல்ல உலக மொழிகளிலும் முதல் முயற்சியாகும். மேலும் இம்முயற்சி பிற ஐரோப்பிய மொழிகளிலும் உலக மொழிகளிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டமைக்கு வழிகோலியது. வீரமாமுனிவரைப் பின்பற்றி, டாக்டர் ஜி.யு.போப், எல்லீசு, மறைத்திரு டுரு (Rev. Drew) ஆகியோர் ஆங்கிலத்திலும், மறைத்திரு டாக்டர் கே. க்ராவ்ல் (Graul) செர்மன், இலத்தீன் ஆகிய மொழிகளிலும், 'ஆரியேல்' (Ariel) பிரஞ்சுமொழியிலும் குறளை மொழிபெயர்த்தனர். எனவே, திருக்குறளை உலகறியச் செய்த பெருமை வீரமாமுனிவருக்கு உண்டு. இப்பணி, அவர் செய்த தமிழ்த்தொண்டுகளுள் தலையாயது. திருக்குறளிலுள்ள அறத்துப்பாலையும், பொருட்பாலையும் மட்டும் மொழிபெயர்த்தார். அன்று,

15. K. Meenakshisundaram, P. 92

ஐரோப்பாவில் அறிஞர்களின் மொழியாகக் கருதப்பட்ட இலத்தீன் மொழியில் பெயர்த்தார்.

முறை

தம் மொழிபெயர்ப்பில் முதலில் தமிழில் திருக்குறளைக் கொடுக்கிறார். அதை ஒலிப்பதற்குத் துணையாக உரோமை எழுத்தில் (Roman Script) ஒலிபெயர்ப்பினைத் தருகிறார். அடுத்து, பொருளையும் இலக்கணக்குறிப்பையும் கொடுக்கிறார். சில குறள்களுக்கு விளக்கமும் தரப்படுகிறது.

பழைய உரையாசிரியர்களைப் பின்பற்றல்

தம் உரையில் பழைய உரையாசிரியர்களைச் சில இடங்களில் பின்பற்றியுள்ளார். எடுத்துக்காட்டாக 58-வது குறளுக்கு மணக்குடவர், காளிங்கர் உரையை அவ்வாறே ஏற்றுக் கொள்கிறார். சிலவற்றிற்கு மரபாகச் சொல்லப்பட்டு வந்த கருத்துகளுக்கு மாறுபாடாகவும் கூறுகின்றார். ஊழைப் பற்றி ஏனையோர் கூறிய உரையிலிருந்தும் வேறுபட்டு, 'தேவ கட்டளை', 'கடவுளின் திட்டம்'என்று பொருள் கூறுகிறார். 'ஊழ்'எனும் சொல்லுக்குப் 'பழமை'என்றே பொருள் கொள்கிறார் முனிவர்.

இறைவனின் கட்டளைகளை மீறுவோர் தண்டனை அடைவர்; இறைவனின் கட்டளையைப் பின்பற்றி நடப்போர் சிறப்புப் பெறுவர் என ஊழ் பற்றிய அதிகாரம் கூறுகிறது என்று கூறுகிறார் முனிவர்.

மேற்குறிப்பிட்டதைப் போல, 'மக்கட்பேறு'எனும் அதிகாரத்திலுள்ள,

> எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
> பண்புடை மக்கட் பெறின்

என்னும் குறளுக்குப் பழைய உரையாசிரியர்கள் கூறும் கருத்திலிருந்து மாறுபட்டுப் புதிய பொருள் தருகிறார்.

பழியறியாத பண்புடை மக்களைப் பெறும் ஒருவன் இறந்த பின்னும் கூடத் தீமைகள் அவனைத் தீண்டா. அதாவது குற்றமில்லாத மக்கள் உனக்கு இருந்தால், இறப்புக்குப் பின்னும் நீ அவர்களால் பயன்பெறுவாய். ஏனெனில் மன்றாட்டு, ஈகை, உண்ணாநோன்பு ஆகியவற்றால் அவர்கள் உனக்கு உதவுவர் என அக்குறளுக்கு உரை கூறுகிறார்.

மாறுபட்ட கருத்துகள்

தாம் ஒரு கிறித்தவத் தொண்டர் என்பதை மனத்திற் கொண்டும், ஐரோப்பியர்கள் ஒத்துக்கொள்ளும் வகையிலும் சில திருக்குறள்களுக்குப் பிற உரையாசிரியர்களிலிருந்து மாறுபட்ட கருத்துகளை வழங்கியுள்ளார்.

தமிழ் மொழியைக் கற்று, அதில் புலமை பெற்று, இலக்கியம், இலக்கணம் முதலியவற்றைப் படைத்துத் தமிழ்ப்பணி செய்ததோடு, தமிழில் தலைசிறந்த நூலாகிய திருக்குறளின் பெருமையை உலகறியச் செய்த வீரமாமுனிவரின் பணி மகத்தானது என்றும் நினைத்துப் பாராட்டத்தக்கது.

## எழுத்துச் சீர்திருத்தம்

காலந்தோறும் மாறிவரும் தமிழ் எழுத்து வரிவடிவத்திலும் வீரமாமுனிவர் சில சீர்திருத்தங்களைச் செய்தார்.

முன்னர், எகர ஒகரங்கள் மேற்புள்ளி பெற்றன. பின்னர். அப்புள்ளிகளை எழுதுவோர் விட்டுவிட்டனர். மேலும் மெய்களோடு சேர்ந்து உயிர்மெய் ஆகும்பொழுது ஏகார,ஓகாரங்களோடு எகர, ஒகரங்கள் வேறுபாடு தெரியாமல் போயின. அவற்றிலுள்ள குழப்பத்தை நீக்கியவர் வீரமாமுனிவர். தமது பட்டறிவைப் பயன்படுத்தி, உயிர் மெய்யுடன் கூடிய எகர,ஒகரக் குறில், நெடில் வேறுபாடுகள் அமைய வழிவகுத்தார் முனிவர்.

தமது எழுத்துச் சீர்திருத்தத்தைப் பற்றிக் கொடுந்தமிழ் இலக்கண நூலில் குறிப்பிடுகிறார்.

தற்காலத்தில் வழங்கும் குறில் வடிவ, நெடில் வடிவக் கொம்புக் குறியீடுகளை அந்நூலில் எடுத்துக் காட்டுகிறார். முனிவர் செய்த இக்குறில் நெடில் சீர்திருத்தத்தைத் தாம் இயற்றிய சதுரகராதியிலும் பயன்படுத்தியுள்ளார்.



# 6. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் வீரமாமுனிவரின் பங்களிப்பு (Contribution)

கிறித்துவச் சமயத்தைப் பரப்புவதற்காகத் தமிழகம் வந்த ஐரோப்பியர்களுள் சிலர் சிறந்த தமிழ்த்தொண்டராகவும் திகழ்ந்தனர். தமிழுக்கு அவர்கள் ஆற்றிய தொண்டால் தமிழ் பலநிலையிலும் வளம் பெற்றது. குறிப்பாக மொழிபெயர்ப்பிலும் நவீன தமிழ் இலக்கிய வளர்ச்சியிலும் தமிழ் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அடைவதற்கு ஐரோப்பியர்களின் பங்களிப்புத் தலையாய காரணமாகும்.

## அச்சு இயந்திர அறிமுகமும் இலக்கிய வளர்ச்சியும்

அச்சு இயந்திர அறிமுகமும் அதன் விளைவான அச்சடித்தலும் வெளியீடுகளும் அவற்றின் வாயிலான செய்தி பரப்பலும், ஐரோப்பாவில் அரசியலிலும் சமுதாயத்திலும் குறிப்பாக இலக்கிய வளர்ச்சியிலும் அளவிடற்கரிய சாதனைகளை உருவாக்கின. அதைப்போலத் தமிழகத்தில் ஐரோப்பிய கிறித்தவப் பாதிரிமாரால் அறிமுகப்படுத்தப்பட்ட அச்சு இயந்திரமும் அச்சடித்தலும் வெளியீடுகளும் பல வகையில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வழிகோலின. மறைந்துபோய்க்கொண் டிருந்த தமிழ் இலக்கியத்தைப் பாதுகாக்கும் வாய்ப்பை அச்சுப் பதிப்புகள் உ.வே. சாமிநாதய்யர் போன்ற தமிழர்கள் வாயிலாக உருவாக்கின. மேலும், பல இலக்கிய வெளியீடுகள்வாயிலாகத் தமிழ் இலக்கியம் மேலை நாடுகளுக்கு அறிமுகம் ஆவதற்கும், உலகளாவிய நிலையில் அறிமுகமாகி வளர்ச்சியடைந்துகொண் டிருந்த நவீன இலக்கிய வகைகள் தமிழில் இடம் பெறுவதற்கும் துணை செய்தன.

இத்தகைய ஒரு பின்புலம் அல்லது ஒரு புதிய சூழல் உருவாகு வதற்கு ஐரோப்பியர்களின் தமிழ்த்தொண்டு பெருங்காரணமாகும்.

### தனிச்சிறப்பு

தமிழ்த்தொண்டு செய்த ஐரோப்பியர்களுள் வீரமாமுனிக் கென்று ஒருதனிச்சிறப்புண்டு. ஏனைய ஐரோப்பியர்களைவிட, வீரமாமுனிவரே பெருமளவில் தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தியவர்.

தமிழ் இலக்கியத்தை, விருப்பு வெறுப்பின்றி நன்கு கற்றார். அதில் மிகுந்த ஈடுபாடு கொண்டார். ஈடுபாடு கொண்டதோடு அமையாமல், அவ்விலக்கிய வடிவங்களில் தம் கருத்துகளையும் வெளிப்படுத்திப் புதிய இலக்கியங்களைத் தமிழில் படைத்தார்.

### சிற்றிலக்கியங்கள்

கலம்பகம், அந்தாதி, அம்மானை, மாலை, வெண்கலிப்பா, பதிகம், வண்ணம் எனும் சிற்றிலக்கிய வகைகளில் இலக்கியங்கள் பல படைத்தார். இவை சிற்றிலக்கியத்தை வளப்படுத்தின.

### காப்பியம்

தேம்பாவணி எனும் ஓர் அரிய காப்பியத்தை இயற்றித் தமிழ்க்காப்பிய இலக்கியத்தை வளப்படுத்தினர். உலகிலுள்ள முக்கியமான சமயங்கள் அனைத்திற்கும் தனித்தனிக் காப்பியங்களைக் கொண்டது ஒரு மொழி என்ற பெருமை தமிழுக்கு உண்டு. அப்பெருமையைச் சேர்த்தவர் வீரமாமுனிவர். சைவம், வைணவம், சமணம், பௌத்தம், என்ற சமயங்களில் தமிழ்க்காப்பியங்கள் இயற்றப்பெற்றிருந்தன. வீரமாமுனிவர் கிறித்துவக் காப்பியமாகத் தேம்பாவணியை இயற்றினார். இதைப் பின்பற்றி இசுலாம் காப்பியம் இயற்றுவதற்கும் வழிவகுத்தார்.

சைவத்திற்குப் பெரியபுராணம், வைணவத்திற்குக் கம்பராமாயணம், சமணத்திற்குச் சீவகசிந்தாமணி, பௌத்தத்திற்கு மணிமேகலை, இசுலாமிற்குச் சீறாப்புராணம், கிறித்துவத்திற்குத் தேம்பாவணி என்று குறிப்பிடும் வகையிலான பெருமையைச் சேர்த்தார் வீரமாமுனிவர்.

### கொடுந்தமிழுக்கும் இலக்கணம்

பேச்சு மொழிக்கெனக் கொடுந்தமிழ் இலக்கணம் என்ற தனியொரு இலக்கண நூல் எழுதினார். பிற்காலத்தில் வளர்ச்சி யடைந்த மொழியியல் துறைக்கு இந்நூல் ஒரு முன்னோடியாய் அமைந்துள்ளது.

### உரைநடை வளர்ச்சி

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னரே, தமிழ் உரைநடை பெருமளவில் வளர்ச்சி அடைந்தது. தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு ஐரோப்பியர்களின் தொண்டு மகத்தானது. அந்த மகத்தான தொண்டைச் செய்தவர்களுள் வீரமாமுனிவரும் ஒருவர். தமிழில் ஏழு உரைநடை நூல்களை எழுதி, தமிழ் உரைநடைக்கு வளம் சேர்த்துள்ளார்.

### திருக்குறளின் பெருமை

தமிழ் இலக்கியத்திலுள்ள சிறந்த கருத்துகள், குறிப்பாகத் திருக்குறளிலுள்ள கருத்துகள் உலகளாவிய நிலையில் பரவுவதற்குக் காரணமாக அமைந்தவர் வீரமாமுனிவர். ஐரோப்பிய மொழிகளில் திருக்குறளை மொழிபெயர்த்தமை, பிற ஐரோப்பிய மொழிகளில் மட்டுமல்ல, உலக மொழிகள் பலவற்றிலும் மொழி பெயர்ப்பதற்கு வழிவகுத்தது. இன்றைக்கு விவிலியத்திற்கு அடுத்த நிலையில் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட அறநூலாகத் திருக்குறள் விளங்குவதற்கு வீரமாமுனிவரின் திருக்குறள் மொழிபெயர்ப்பு ஒரு காரணமாகும்.

அண்மைக்காலப் புதிய இலக்கிய வடிவமான சிறுகதையின் முன்னோடியாகவும் வீரமாமுனிவர் திகழ்ந்தார். அவர் இயற்றிய பரமார்த்த குருகதை, தமிழ்ச் சிறுகதைக்கு முன்னோடி என்பர்.

### அகராதிகள்

அகர வரிசையில் அகராதி தொகுத்தளித்த பெருமை வீரமாமுனிவருக்கு உண்டு. அதிலும் ஒருமொழி அகராதி, இருமொழி அகராதி, மும்மொழி அகராதி என மூன்று அகராதிகளை ஆக்கியுள்ளார். சதுரகராதி ஒருமொழி அகராதி; தமிழ்-இலத்தீன் அகராதி இருமொழி அகராதி; போர்த்துக்கீஸ்-இலத்தீன்-தமிழ் அகராதி மும்மொழி அகராதி.

சதுரகராதியை மூலமாகக் கொண்டு பல அகராதிகள் தமிழில் உருவாவதற்கு வித்திட்டவர் வீரமாமுனிவர் எனலாம்.

### நாட்டுப்புற இலக்கியம்

தம் சமயப் பணியின் பொழுது பல ஊர்களில் தங்கும் வாய்ப்பு வீரமாமுனிவருக்கு ஏற்பட்டது. அவர் வாழ்ந்த இடங்களிலுள்ள கிராம மக்களோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். எனவே, அவர்களது மொழிகள், வழக்காறுகள், செயல்கள், பழக்க

வழக்கங்கள் முதலியவற்றை நேரடியாக அனுபவ ரீதியாக அறிந்திருந்தார் வீரமாமுனிவர். அதனால் தமிழக நாட்டுப்புறக் கதைகளையும், பாடல்களையும் நன்கு தெரிந்திருந்தார். அவற்றைத் தம் படைப்புகளில் பயன்படுத்தியுள்ளார். தேம்பாவணியில் இடம் பெற்றுள்ள கிளைக்கதைகள் நாட்டுப்புறவியல் புராணவியற் கதைக்கூறுகளாகவே காணப்படுகின்றன.தற்காலத்தில் பிரபலமாகிக் கொண்டிருக்கும் நாட்டுப்புறவியலிலும் வீரமாமுனிவர் பங்கு பெற்றிருக்கிறார்.

### அங்கத இலக்கியம்

தமிழில் அங்கத இலக்கியம் (Satire) பல நிலையில் இன்று வளர்ச்சி அடைந்துள்ளது. ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டிலேயே தமிழ் உரைநடையில் அங்கத இலக்கியத்தை அறிமுகப்படுத்தினார் வீரமாமுனிவர். அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்வது அவர் இயற்றிய 'பரமார்த்த குருகதை'. நகைச்சுவை மிகுந்த இந்தக் கதை பலரைக் கவர்ந்தது. எனவே உலகின் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது. வீரமாமுனிவரே அதை இலத்தீன் மொழியில் எழுதினார். கமீல் சுவலபில் என்பவர் செக் மொழியில் மொழிபெயர்த்தார். அபீதுபாஸ் என்பவர் பிரஞ்சு மொழியில் மொழிபெயர்த்தார்.

### தமிழ்மரபு

தமிழரல்லாதவராக இருந்தும் தமிழ் மரபை முழுமையாகப் பின்பற்றினார். தாம் படைத்த இலக்கியத்தில்மட்டு மல்ல நடை, உடை, உணவு மற்றும் பழக்க வழக்கங்களிலும் தமிழ் மரபைப் பின்பற்றினார். கிறித்தவ சமயத்தவராக இருந்தாலும் இந்து சமய மரபுப் படியும், தமிழ் மரபுப்படியுமே தாம் இயற்றிய நூல்களுக்கு 'அடைக்கல நாயகி', 'அடைக்கலமாலை'எனப் பெயரிட்டார். அன்னை மரியாளையும் தமிழ்ப் பெண்ணாகவே கண்டார். கோனாங்குளத்தில், அன்னை மரியாளுக்கு ஓர் ஆலயம் அமைத்தார். அதில் அன்னையின் திருவுருவை நிறுவினார். அத்திருஉரு தமிழ்ப் பெண்ணாகவே காட்சியளிக்கச் செய்தார்.

### ஈடு இணையற்ற தொண்டு

கவிதைகள் இயற்றி, காப்பியம் படைத்து, இலக்கணம் எழுதி, அகராதி தொகுத்து, மொழிபெயர்த்து, உரை செய்து, உரைநடை நூல்களும் எழுதித் தமிழுக்கு வீரமாமுனிவர் செய்த தொண்டு ஈடு இணையற்றது.

பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வளர்ச்சியில் வீரமாமுனிவர் பங்களிப்புக் கணிசமானது. தமது 18ஆவது வயதிலேயே சமயத்தொண்டிற்குத் தம்மை ஒப்படைத்த வீரமாமுனிவர், தமிழகத்திற்கு வருகை தந்து, தமிழைக் கற்றது தமிழ் பெற்ற பேறே எனலாம்.

**தமிழரின் தொண்டு**

தம்மை ஒரு தமிழனெனக் கல்லறையிலும் குறிக்கச் சொன்னவர் டாக்டர் ஜி.யு. போப். தம்மை ஒரு தமிழனாகவே ஆக்கிக்கொண்டு தமிழ்த்தொண்டு செய்த ஒரு பெருமகனார் வீரமாமுனிவர்.

தமிழர் ஆன வீரமாமுனிவரைத் தமிழராகிய நாம் என்றும் நினைவில் இருத்திப் போற்றுவோம்.



பின்னிணைப்பு

## நூல்கள்

### வீரமாமுனிவர்
### (ஜோசப் பெஸ்கி)

| | | |
|---|---|---|
| ஐந்திலக்கண தொன்னூல் விளக்கம் | – | செயின்ட் சோசப் அச்சகம், சென்னை *(1891)* |
| பேதம் மறுத்தல் | – | தரங்கம்பாடி லுத்தரன் மிஷன், பாண்டிச்சேரி *(1842)* |
| சதுரகராதி | – | சென்னை *(1828 - இரண்டாம் பதிப்பு)* |
| வேதியர் ஒழுக்கம் | – | சமய நூல் வெளியீட்டுப் புத்தகச் சங்கம், சென்னை. *(1898)* |
| பரமார்த்த குருகதை | – | கபூகம், சென்னை *(1960)* |
| தேம்பாவணி (மூன்று தொகுதிகள்) | – | வீரமாமுனிவர் ஆய்வுக் கழகம், பாளையங்கோட்டை *(1982)* |
| வேத விளக்கம் | – | பாண்டிச்சேரி *(1936)* |
| கிறிஸ்து மார்க்கம் இந்தியாவில் விருத்தியான சரித்திரம் | – | பௌவர் எச்., எஸ்.பி.சி.கே., சென்னை *(1879)* |
| தேம்பாவணிச் சொற்பொழிவுகள் | – | ஞானப்பிரகாசம் ஆர்., சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை *(1960)* |

A Grammar of the Common Dialect of the Tamil Language – Beshi, Joseph. C. Christian Knowledge Society Press, Madras (1848)

Influence of Hinduism on Christianity – Gnana Robinson (Ed) The Tamil Nadu Theological Seminary, Madurai (1980)

Christianity and Tamil Culture – Ignatius Hirudayam University of Madras, Chennai (1977)

Grace in Christianity and Hinduism – Kulendran. S. Oxford Press, London (1964)

பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வளர்ச்சியில் வீரமாமுனிவர் பங்களிப்புக் கணிசமானது. தமது 18ஆவது வயதிலேயே சமயத்தொண்டிற்குத் தம்மை ஒப்படைத்த வீரமாமுனிவர், தமிழகத்திற்கு வருகை தந்து, தமிழைக் கற்றது தமிழ் பெற்ற பேறே எனலாம்.

**தமிழரின் தொண்டு**

தம்மை ஒரு தமிழனெனக் கல்லறையிலும் குறிக்கச் சொன்னவர் டாக்டர் ஜி.யு. போப். தம்மை ஒரு தமிழனாகவே ஆக்கிக்கொண்டு தமிழ்த்தொண்டு செய்த ஒரு பெருமகனார் வீரமாமுனிவர்.

தமிழர் ஆன வீரமாமுனிவரைத் தமிழராகிய நாம் என்றும் நினைவில் இருத்திப் போற்றுவோம்.



பின்னிணைப்பு

## நூல்கள்

### வீரமாமுனிவர்
### (ஜோசப் பெஸ்கி)


| | | |
|---|---|---|
| ஐந்திலக்கண தொன்னூல் விளக்கம் | – | செயின்ட் சோசப் அச்சகம், சென்னை (*1891*) |
| பேதம் மறுத்தல் | – | தரங்கம்பாடி லூத்தரன் மிஷன், பாண்டிச்சேரி (*1842*) |
| சதுரகராதி | – | சென்னை (*1828 - இரண்டாம் பதிப்பு*) |
| வேதியர் ஒழுக்கம் | – | சமய நூல் வெளியீட்டுப் புத்தகச் சங்கம், சென்னை. (*1898*) |
| பரமார்த்த குருகதை | – | கபூகம், சென்னை (*1960*) |
| தேம்பாவணி (மூன்று தொகுதிகள்) | – | வீரமாமுனிவர் ஆய்வுக் கழகம், பாளையங்கோட்டை (*1982*) |
| வேத விளக்கம் | – | பாண்டிச்சேரி (*1936*) |
| கிறிஸ்து மார்க்கம் இந்தியாவில் விருத்தியான சரித்திரம் | – | பௌவர் எச்., எஸ்.பி.சி.கே., சென்னை (*1879*) |
| தேம்பாவணிச் சொற்பொழிவுகள் | – | ஞானப்பிரகாசம் ஆர்., சேவியர் கல்லூரி, பாளையங்கோட்டை (*1960*) |

A Grammar of the Common Dialect of the Tamil Language – Beshi, Joseph. C.
Christian Knowledge Society Press, Madras (1848)

Influence of Hinduism on Christianity – Gnana Robinson (Ed)
The Tamil Nadu Theological Seminary, Madurai (1980)

Christianity and Tamil Culture – Ignatius Hirudayam
University of Madras, Chennai (1977)

Grace in Christianity and Hinduism – Kulendran. S.
Oxford Press, London (1964)

# குணங்குடி மஸ்தான்

## பொருளடக்கம்

# குணங்குடி மஸ்தான்

சுல்தான் அப்துல் காதர் (1792-1838)

## 1. வாழ்க்கை வரலாறு

### பரம்பரை

முஸ்லிம் தமிழ்ப்புலவர் ஞானியர்களுள் தமிழகம் மிக நன்கறிந்த புலவர் ஞானி, குணங்குடி மஸ்தான் ஆவார். இவரது இயற்பெயர் சுல்தான் அப்துல் காதர். இவர் கி.பி.1792 இல் இராமநாதபுர மாவட்டத்தின் தொண்டி பட்டினத்திற்கு அருகில், 16 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள "குணங்குடி" என்னும் சிற்றூரில் பிறந்தார். இவரது மரபின் ஒல்காப் புகழினைக் காயல் பட்டினப் புலவர் நாயகம் என்னும் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் பாடிய தோத்திரப்பா விபரமாக விளக்கும். இவர் முஹம்மது நபிகள் (ஸல்) அவர்களின் பேரர் இமாம் ஹுஸைனின் வழிவழிப் பேரர் முல்லா ஹுஸைனின் வழி வந்தவராவர். தாய்வழியும் அண்ணல் நபிவழியாகும். குணங்குடியாரின் அன்னை பாத்திமா, தந்தையார் நயினார் முஹம்மது சாஹிபு ஆவர். இவர் "பொன்னரிய மாலை" பாடிய சீரிய புலவர் மின்னா நூறுதீன் நாவலர் வழிவந்தவர். இவரின் தந்தையார் பீர் இராவுத்தர். பீர் இராவுத்தரின் தந்தையர் "அருக்கான் மாலைச் சுருக்கம்" பாடிய மீரான் கனி அண்ணாவியார். இவரின் தந்தை செய்கு கனி. செய்கு கனியின் தந்தை பீருகான். இவர் தந்தையார் "கனகாபிசேகமாலை" எனும் முதற் காப்பியம் இயற்றிய செய்கு நயினார்கள் (கனகவிராயர்) ஆவர். குணங்குடியார் வாழையடி வாழையாகவே புலமையும் உயர் குடிமரபும் பெற்றவர் என்பது பெறப்படுகிறது.

## கீழக்கரையில் கல்வி

குணங்குடியார் இளமையிலே ஞானப்பூங்காவாக விளங்கிய கீழக்கரை சென்றார். அங்கே 'தைக்கா சாகிபு' என்றழைக்கப்பட்ட செய்கு அப்துல் காதிறு லெப்பை சாகிபிடம் மார்க்கக் கல்வி கற்றார். "ஆலிம்" என்ற பட்டம் பெற்றார்.

## கல்வித் தோழர்

இவருடன் பயின்ற மாணவத் தோழர் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் (புலவர் நாயகம்) ஆவர். புலவர் நாயகம், குணங்குடியார் கல்வி பெற்று நீங்கும் காலத்து அவரிடம் தமக்கு அவர் சமாதியடையும் இடத்திலேயே தமக்கும் ஒரு இடம் வேண்டினார்; இடமும் பெற்றார். இன்றும் சென்னை இராயபுரத்தில் இருபெரும் புலவர்களின் நினைவிடம் காணலாம். அஃதோடு, ஞான உரையாசிரியர் எனப் புகழ்பெற்ற எம்.ஏ. நெய்னா முகம்மதுப் பாவலரின் நினைவிடமும் இங்கே உள்ளது. முப்பெரும் புலவர்களின் நினைவு விழா, இவண் ஒருங்கே நடைபெறும் நாள் எந்நாளோ!

## ஞானதீட்சை

ஞானசூரியன் குணங்குடியார், திரிசிரபுரம் (திருச்சி) காதிரிய்யா தரீகா கலீபா மௌலவி ஷாம் சாகிபு அவர்களிடம் 1813 இல் சென்று "முரீது" எனும் ஞான தீட்சை பெற்றார். "ஏகாந்தம் மேற்கொண்டு இருவினை ஒருவி மும்மலம் நீங்கி, நாற்குணம் தெரிவுற்று, ஐம்புலன் அடக்கி, உட்பகை ஆறையும் எறிந்து, பாதகம் ஏழையும் பசையறப் பறிந்து, தவத்துறப்பு எட்டையும் மேவி, இரசம் ஒன்பதில் எடுப்பன எடுத்து, விரதம் பத்தென விளங்கிய துறவினை மேற்கொண்டார்" (வாயுறை வாழ்த்து 89-98 தழுவிய கருத்து)

## திருமணம்

குணமெனும் குன்றேறி நின்ற நற்குணங் குடிகொண்ட குணங்குடியார் இறையின்பம் பெறுவதிலேயே இன்புற்றிருந்தார். தாய்மாமன் கட்டை சாஹிபு எனும் முஹம்மது இபுராகீமின் மகள் மைமூன் எனும் முறைப் பெண்ணை மணமுடித்து வைக்க முனைந்தனர். இவர் இசையவில்லை. அவளைத் தம் தம்பி பீர் முஹம்மதுவிற்கு மணமுடித்து வைத்தார்.

குணங்குடியார் தொழுகை யன்ன தவத்தால் 'யான்', 'எனது' எனும் செருக்கறுத்து, அழுக்ககற்றி அரிய தவயோகி யானார்.

## ஞூஃபிப் பயணி

சிக்கந்தர் மலை எனப்படும் திருப்பரங்குன்றம் (40 நாட்கள்); அறந்தாங்கிக்கு அருகில் உள்ள "கலகம்" என்ற ஊரில் (6 மாதங்கள்) தொண்டியில் தம் தாய் மாமன் கட்டை சாகிபு வாழைத் தோப்பில் (4 மாதங்கள்) என இவ்விடங்களில் எல்லாம் "கல்வத்து" எனும் தியான யோக நிட்டைகளில் ஈடுபட்டார். பின் ஞான நடை எனச் சதுரகிரி, நாகமலை, புறாமலை, யானை மலை போன்ற பல இடங்களில் இறையின்பம் பெற, தனிமை நாடித் தேடி, ஓடி, அலைந்து திரிந்தார். தொழுகை, நோன்பு, கடுந்தவம் என யோக நெறியில் நின்றார். சூபியாக்கள் பலரும் பயணிகளாகவே இருந்தனர் என்பதற்குக் குணங்குடியாரின் வாழ்வும் சான்று கூறும். வடநாட்டிற்கும் 'ஞானப்பயணம்' சென்றுவந்ததாக அறியப்படுகிறது. நாகூர் சென்று நாகூர் ஆண்டவர் சாமதியின் முன் "திக்குத் திகந்தமும்" எனும் பாடலைப் பாடிப் புகழ்ந்தார். காரைக்காலுக்குச் சென்றுவந்ததாகவும் அறிகிறோம்.

## மஸ்தான்

சுல்தான் அப்துல் காதர் இறைநாட்டத்திலும் தேட்டத்திலும் நாடியோடிச் சென்ற இவரை 'மஸ்தான்' என்றழைத்தனர். 'மஸ்தான்' எனில் 'மையலாகியவர்' என்பது பொருள். ஓரிறையின் பால் ஒன்றி உண்மையில் மையலாகியவரன்றோ குணங்குடியார்! இறைக் காதலில் 'மஜ்னூன்' ஆகி, அவ்வின்ப நினைவில் 'மஸ்த்து' எனும் மயக்கத்தில் மயங்கித் திகழ்ந்தவராவர். தொழுகை, நோன்பு போன்ற தவங்களில் தம்மை ஈடுபடுத்தி மிகைத்தவராவர். பல சித்துக்களைக் காட்டி, யோக நெறியில் சாதனை புரிந்தவர். ஞானாமிர்தம் எனும் மது உண்டு பரம்பொருளை நாடி மயங்கிய நற்றமிழ்த் தேனீ. பற்றற்றானைப் பற்றிப் பரிபூரணனிடம் பித்தனாகி முற்றும் துறந்த முனிபுங்கவராவர். சமரசத் தேன் பிலிற்றும் அனுபூதிக் கவிஞர்.

## மஸ்தான்-உருவத் தோற்றம்

இவரின் தோற்றக்காட்சியினை, கரிய நிறம், கமலவதனம். கருணை ததும்பும் கண்கள், காலில் பாதுகை, கலைந்து விரிந்த முடிசடை, கக்கத்தில் கட்டிய கம்பளி ஆடை - இவரே குணங்குடியார் எனச் சீடர் மகாவித்துவான் சரவணப் பெருமாள் ஐயரின், நான்மணி மாலை பின்வருமாறு பாடுகிறது.

' நயமேவு கஞ்ச முகமுங் கருணை நயனமுஞ்சீர்ப்
பயமேவு செம்பொ னுறழ்மேனி யும்மெழிற் பாதுகைசேர்
சயமேவு தாளுந் தலைவிரி கோலமுஞ் சார்ந்தன்பரி
தயமேவு மென்றுங் குணங்குடி யானெனுஞ் சற்குருவே'

(அன்பர் இதயம் மேவும்) நான்மணிமாலை.செய்-18

"அழகு பூத்த இனிய முகம், அருள் பூத்த விழிகள், எழில் செவ்வாய்; மாலை பூத்த மணி மார்பு, அடியவரை அரவணைக்கும் கரம், மலரடி" (1) எனச் சீடர் சபாபதி முதலியார் பஞ்சரத்தினத்தில் பாடி அறிமுகப்படுத்துகிறார்.

## சென்னை இராயபுரம்

இறுதிக்காலத்தில் சென்னை இராயபுரத்தில் பாவா லெப்பை என்பவரின் தோட்டத்தில் தங்கினார்; தவயோக நிட்டையில் நின்றார். சென்னை வாழ்க்கையில் சில பகல் வெளிப்படத் திரிந்தும் சில பகல் மறைந்து அடங்கியும் மௌனமாயிருந்தும் சுட்டிக்காட்டியும் எண்ணில் தொகுத்தும் எழுதிக் காட்டியும் தம் கருத்துக்களையும் விருப்பங்களையும் புலப்படுத்திச் சிலநாள் வசித்தார். (வாயுறை வாழ்த்து 159-164) நாடினபேர்க்குக் கருணையும் கூடினபேர்க்கு அருளும் கிடைத்தன. ஞானப்பசியும் வயிற்றுப் பசியும் நீங்கின.

சில நாள் கற்கண்டும் பாலும் மட்டும் அருந்தியும், சில நாள் அதுவும் இல்லாமலும் சில பகல் தெரியும்படி தோன்றியும், சில பகல் தெரியாமல் உலவியும், ஒருவரும் காணாமல் ஒதுங்கி மறைந்தும், ஏகாந்த தியானத்திலிருந்தும் தூங்காது தூங்கி அத்துவித சுகத்தில் திளைத்தார் (வா.வா 181-196)

## குரு சீடர்

குணங்குடியார் புகழ் பெற்ற காதிரிய்யா நெறியைத் தோற்றுவித்த ஜீலானியில் பிறந்து, பாக்தாதில் மறைந்த முகியித்தீன் ஆண்டகை அப்துல் காதிர் ஜீலானியைக் குருவாகக் கொண்டார்.

சென்னையில் அன்பர்களின் அகவிருள் நீக்கினார். ஆற்றல் கண்டு மக்கள் மதித்தனர்; போற்றினர்; தீட்சை பெற்றனர். ஆர்க்காடு நவாபும் குணங்குடியாரின் மேன்மையறிந்து பெருமை செய்தார். இந்துக்களும் பலர் சீடர்கள் ஆனார்கள். பன்னிரண்டு ஆண்டுகள் சென்னையில் வாழ்ந்தார். இவர்பால் கூட்டம் ஞானபோதமும் சமரசக் கூட்டுறவும் கூட்டின; ஞானாமிர்தப் பாக்களாகப் பொங்கின. இவர்

இயற்றிய "பரமுத்த குணங்குடி தெருவில் வரும் பவனி பார்த்து வருவோம் வாருங்கள்" எனும் கீர்த்தனைப்பாடலைப் பாடிக் கொண்டு அங்கப்பநாயக்கன் தெரு(சென்னை) விலுள்ள மஸ்ஜிதே மஃமூர் பள்ளி வாசலுக்கு வந்து சென்றதாகவும் அறியப்படுகிறது.

சென்னையில், தவத்தில் சிறந்து பக்தியில் பயின்று வருஞான்று ஞானம் அமைந்த வெள்ளம் குமிழி எனப் பொங்கி வழிந்தது. மஸ்தானின் செந்நாப்போதில் செந்தமிழ்க் கவிதைத் தேன் ததும்பியது (வா.வா. 209-221)

அவர் பாடிய பாடல்களை முஹம்மது உசைன் புலவர் எழுதிவந்தார். பின் சீயமங்கலம் அருணாசல முதலியாரும் புலவர் நாயகமும் பார்வையிட்டுப் பாதுகாத்துவந்தனர். அதுவே பிற்காலத்தில் அச்சாக்கம் பெற்றது.

## உரைநூல்கள்

1. இராமஸ்வாமி நாயுடு
   பதவுரை (1905, 1916, 1925)
2. மா. வடிவேலு முதலியார் பொழிப்புரை (1928)
3. திருத்தணி ரஷீத் (1979)
4. துரை. இராசாராம் கருத்துரை (1998)

## சித்தர்

குணங்குடி மஸ்தானுக்குச் சித்தர்களோடு அதிகத் தொடர்பு இருந்தது என்பதற்குச் சான்றாகக் கபில முனிவர் என்பவர் குருபர ரிஷியிடம் சென்று, தீட்சை அளிக்குமாறு வேண்டியபோது, அவர் குணங்குடி மஸ்தான் சாகிபுக்கு அறிவுரைத்தது போல் தமக்கும் உரைப்பதாகக் கூறி அவ்வாறே செய்தார் என்பர். இச்செய்தியை அவர் போகரிடம் கூறியதாகக்

"கண்டாரே கபிலமுனி சித்து தாமும்
    காட்ட கத்தே குருபரனார் தம்மைத் தானும்"

-போகர் ஏழாயிரம் 4:701

"வணங்கியதோர் எந்தனுக்குக் குருபரனார் தாமும
    வாக்குடனே அபயகஸ்தம் தான் கொடுத்து
இணங்கவே எந்தனது யாகந் தன்னில்
    எழிலுடனே நீர் இருந்து நடத்தி வந்தால்
குணங்குடியார் மஸ்தான் சாகிப் போலக்
    குவலயத்தில் உந்தனுக்கு வரமும் தந்து

மனமுடனே வாக்களித்து ரிஷியார் தாமும்
வகுப்புடனே உபதேசம் செய்தார் தானே"
-போகர் ஏழாயிரம் *4:702*

என்பதிலிருந்து சித்தர்களோடு குணங்குடியாருக்குத் தொடர்புண்டு என்பதைக் காணலாம். மேலும், குணங்குடியார் பாடலின் பின்வரும் சில தொடர்களையும் ஆதாரமாகக் காட்டலாம்.

1. சித்தர் கணமெல்லாம் எனக்கு அருள் இரங்கவும்
- அகத்தீசர் சதகம் *2:3*
2. சித்தர் கணத்தொடு சேர்ந்திடச் செய்யுமோ?
- கீர்த்தனம் *12:3*
3. சித்தரெல்லாம் வாழி சுத்த சிவமே நந்தீஸ்வரே
- நந்தீஸ்வரக் கண்ணி 50
4. சித்தர் கணம் வாழி சின்மயனும் தான் வாழி
- கண்மணி மாலைக் கண்ணி 98

குணங்குடியார் தாம் பெற்ற சூஃபிசத்தை (இஸ்லாமிய ஞானத்தைச்) சித்தர் தவயோகங்களோடு இணைத்துப் பாடியுள்ளார் என முனைவர் எஸ்.எம்.ஏ. காதர் குறிப்பிடுகின்றார். தமிழ் மக்கள் புரிய, தெரிய, அறிந்துகொள்ளவும், மனிதர் எல்லோரும் ஓர் நிறை, மனித உடல் தத்துவங்கள் எல்லாம் ஒன்றே என்ற அடிப்படையிலும் சித்தர் தத்துவங்களையும் குழைத்துச் சூபிச நெறியில் பாடியுள்ளார். குணங்குடியார் சித்தராகவும் சூபி ஞானியாகவும் விளங்குகிறார்.

குணங்குடியார் "குணங்குடி" என்ற சொல்லை 279க்கு மேற்பட்ட இடங்களில் குறிப்பிடுவதாக முனைவர் சி.நயினார் முகம்மது கூறுவார். எடுத்துக்காட்டாகச் சில *1050, 1048:4; 1041:3; 1030; 1044:6; 1039-2:11*

**குணங்குடி என்ற சொல் பொருள் :**

i) ரூஹு என்ற சீவனைக் குறிக்கின்றது. இதனைக் கீர்த்தனை *9:1; 15:11; 6:3* பாடல்களிலும்
ii) நெற்றிநடுநிலை யாகிய ஆக்ஞேயத்தையும், உண்ணாக்குக்கு மேலே உச்சிக்குக் கீழேயுள்ள பிரம்மரந்திரத்தையும் குறிப்பதாகக் கீர்த்தனைப் (*13:4; 15:5; 4:11*) பாடல்களிலும்,
iii) குணம் என்ற பொருளில் நாகூர் ஆண்டவர் பதிகத்தில் "சற்குணங்குடி கொண்ட ஷாகுல் ஹமீதரசரே!" என்றும்;

iv) குணங்குடி ஊரையும் (மனோன்மணிக் கண்ணி 90) குறிப்பிடுகின்றன.

## மறைவு

கி.பி 1838 ஆம் ஆண்டு அவரது நாற்பத்தேழாம் வயதில் தம் உடலைத் துறந்தார். அவர் தங்கியிருந்த இடத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்.

## தண்டையார்பேட்டை

மஸ்தான் சாகிபு, மஸ்தான் சாமி, குணங்குடியார், தொண்டியார், ஆரிபுல்லா (இறைஞானி), ஒலியுல்லா (இறையன்பர்), பக்கீர், சூஃபி, சுவாமி, தர்வேஷ் என்றெல்லாம் பல சிறப்புப் பெயர்களால் மக்கள் அவரை அழைத்தனர். 'தொண்டியார்' என அழைத்து வந்ததால் அவரிருந்த இடம் 'தொண்டியார் பேட்டை' என ஆயிற்று. அதுவே இன்று 'தண்டையார் பேட்டையாக' மருவி வழங்கி வருகிறது. இங்குள்ள அடக்கத்தலம் 'தர்கா' (இறை ஞானியின் புனித இடம்) வாக விளங்குகிறது.



தர்கா பாவாலெப்பையின் தோட்டத்தை அவரின் பரம்பரையிடமிருந்து முனியப்ப பிள்ளை வாங்கினார். இவருக்குப் பின் இவரின் மகன் கேசவ பிள்ளையிடமிருந்து மஸ்தான் சாகிபின் சீடர் சென்னைப் பஞ்சு வியாபாரி திருத்துறைப் பூண்டி காதர் மஸ்தானின் மனைவி குப்பம்மாள் என்பவர் கி.பி 1860 இல் வாங்கி மஸ்தான் சாகிபின் அடக்கத்தலத்திலுள்ள கட்டடத்தையும் புதுப்பித்தார். இவர்களே தர்கா நிர்வாகிகளாவர்.

## புகழ்ப் பூந்துணர்கள்

குணங்குடியாரைக் குருவாகக் கொண்டவர் பலராவர். அவர்களுள் சிலர் குணங்குடியார்மீது புகழ்ப் பாமாலைகள் - புகழாரம் சூட்டியுள்ளார்கள். அவைகளாவன:

மகாவித்துவான் திருத்தணிகை சரவணப் பெருமாளின் 'நான்மணிமாலை'; சிவயோகி ஐயா சுவாமி முதலியாரின் 'தோத்திரப்பா'; வேங்கடராயப் பிள்ளைக் கவிராயரின் 'தோத்திரப்பா'; அட்டாவதானம் சபாபதி முதலியாரின் 'பஞ்சரத்தினம்'; செய்கு அப்துல் காதர் நயினார் லெப்பை ஆலிம் பாடிய 'ஒருபாவொரு பஃது' , 'தோத்திரப்பா வாயுறை வாழ்த்து' முதலியன ஆகும்.

'வித்தையிற்றோழன்' செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் பாடிய 'வாயுறை வாழ்த்தில்' குணங்குடியாரின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் காணக்கிடைக்கின்றன.

மகாவித்துவான் திருத்தணிகை சரவணப் பெருமாளையர் நான்மணிமாலையில், "பரமயோகியைப் பற்றொன்றிலான்றனைக் கரவிலாத கருணைக் கடலினைக் குரவனாகும் குணங்குடியான் றனைப் பரவினார்க்குப் பவப்பிணி யில்லையே"(35) எனப் பாடிப் புகழுகிறார்.

குணங்குடியாரின் மாணாக்கராகிய சிவயோகி ஐயாசாமி முதலியார், தமது தோத்திரப்பாவில்,

'மாசிலா மணியே முனிவர்கள் இறையே
வள்ளலாய் வந்த கண்மணியே
தேசிகனாகத் திரண்டுரு வெடுத்த
சித்தனே ஒளிர் சிந்தாமணியே
ஈசனே தேசோ மயந்தந்தாட் கொண்ட
என்னுயிர்க்கு உயிராம் துணையே
போசனே வாழி குணங்குடி வாழும்
பூரண மௌன தேசிகனே' (13)

எனப் புகழ்ந்து போற்றுகிறார்

மஸ்தான் சாகிபு அவர்கள்மீது வேங்கடராயப் பிள்ளைக் கவிராயர்,

'நீயே ஈன்ற தாய் தந்தை
நீயே குருவினொடு தெய்வம்

நீயேஅடியார்க்கு உதவு பொருள்
நீயே சமயமறியும் வஸ்து
நீயே ஞான நெறிவிளக்கம்
நீயே விளங்கும் குணக்குன்றம்
நீயே எங்குங் குணங்குடியாய்
நிறைந்திவ் அடியைக் காப்பதுவே' *(11)*

எனப் பாடுகிறார்.

கோவளம் அருணாசல முதலியார் அவர்கள் குமாரர் சபாபதி முதலியார் குணங்குடியார்மீது பாடிய பஞ்சரத்தினத்தில்,

தொல்வினையாந் திரையெறியும் பவக்கடலிற் சுழலுகின்ற துரும்பனேற்குக்
கல்வியினைத் தந்தரிய ஞானவழி காட்டலுன்றன் கடமையையா
பல்வளஞ்சேர் சென்னை நகருறை வாழ்வே பேரின்பப் பரமா நந்தச்
செல்வமே தவப்பேறே குணங்குடியே மெய்ஞ்ஞான தேவதேவே (5)

எனப் புகழ்ந்து இசைத்துள்ளார்

"ஸூபித்துவமும் சிவஞான போதமும் கை கோத்துச் சித்து விளையாடும் பான்மை இவர் பாடல்களில் அதிகம். இவ்விரு ஞானக் கோட்பாடுகளில் தோய்ந்து தேர்ந்தார்க்கே முழுக்க முழுக்க மஸ்தானின் இதயம் புரியும்"

- முனைவர் பேராசிரியர் மு. முகம்மதலி ஜின்னா

"எளிய, ஆனால் கருத்துச் செறிவு மிக்க பாடல்களைப் பாடிப் பட்டி தொட்டிகளில் பாமர மக்களின் நாவுகளிலெல்லாம் நடக்கவிட்ட பெருமை ஞானக் குணங்குடியாருக்கு உண்டு. சித்தராகவும், யோகியாகவும், ஸூஃபி ஞானியாகவும் திகழ்ந்த மஸ்தான் சாகிபவர்களின் பாடல்கள் போதையை ஊட்டிப் போகத்தைத் தரவல்லன. ஏகத்துவத்தை ஊட்டி இறைபோகத்தைத் தரவல்லன. நெஞ்சத்தை நெகிழ்வித்து நேயத்தைத் தரவல்லன. அகந்தையை நீக்கி அருளுள்ளம் தரவல்லன. அறிவைக் கவர்ந்து அனுபவத்தில் ஊறி ஆற்றலைத் தரவல்லன."

- பேராசிரியர் முனைவர் செ. பசலுமுகியித்தின்

"சுல்தான் அப்துல் காதிர் என்னும் முதற்பெயர் கொண்ட குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள், சமரச சன்மார்க்க நன்னெறி நின்று, அமரத்துவம் வாய்ந்த அரிய தத்துவங்களையும், அணிநயம்

சான்ற இலக்கியப் புதையல்களையும் அள்ளிக் கொடுத்த இறைஞானி, தமிழிலக்கியத்துக்கும் தமிழ்ச் சமயச் சிந்தனைகட்கும் புதுநெறி காட்டிய புலமைச் செம்மல், அவர் காட்டிய புதுநெறி, சாதி, சமய இனமொழி பேத மகற்றி மானிடர் அனைவரும் பின்பற்றத்தக்க பொது நெறியாகவும் பொலிதற்கு, அவர்தம் இலக்கியங்களே இனிய சான்றுகளாக நிற்கின்றன."

- டாக்டர் மோசு மைக்கேல் பாரடே

"திருமறையின் நெறிமுறைக்கு அமைந்து, கம்பீரமான நடையும் இசை நயமும் வாய்ந்தது. செம்பொருளும், குறிப்புப் பொருளும் திகழ்ந்து, பழமையிற் புதுமை மலர்ந்து, சமரசத் தேன் சொரிந்து படிக்குந் தோறும் பக்தி கனிந்த உணர்ச்சி பெறச் செய்கின்ற மஸ்தான் சாகிபு பாடல்கள், இஸ்லாமியர்களின் இனிய ஞானக் கருவூலமாகும். இந்து சமயத் தமிழ் மக்களுக்கும் சிறந்த ஆன்மிகச் செல்வமாக அவை விளங்குகின்றன.

"பெரும்பாலும் தாயுமான சுவாமிகளின் நடையில் அமைந்துள்ள இப்பாடல்கள், பலவிடங்களில் அவரின் செய்யுளடிகளையும் பொருள்களையும் அவ்வாறே எடுத்தெடுத்து ஆண்டிருப்பதையும் நாம் காணலாகும். வேதாந்த சித்தாந்த சமரசக் கருத்துகள் மணியில் ஒளிபோலப் பாடல்கள் முழுவதிலும் நன்கு வெளிப்பட்டு நிற்பதும் ஆசிரியரின் துலாக்கோல் போன்ற மனத்தின் நடுநிலையினைப் பிரதிபலித்துக் காட்டுகின்றது. தென்னாட்டுச் சித்தர் பாடல்களின் நடையும், தொனியும் நூலின் பிற்பகுதியை நிறைவு செய்து நிற்கின்றன. இந்நூல் ஒரு சர்வ சமய சமரசக் கலைக்கோயில்.

"இஸ்லாமிய ஞானியென்னும் பொருளமைந்த மஸ்தான் என்னும் பொதுப்பெயரைத் தமக்கே சிறப்பாக உரிமையாக்கப் பெற்ற இம்மகான், ஒரு ஞானக்கவிப் பெருங்கொண்டலாகவும் விளங்குகின்றார். திருமறைப் பொருளிலே திளைத்து, தமிழமுத சாகரத்தைப் பருகி, குணமென்னுங் குன்றின்மேல் ஏறி, தத்துவஞானத்தைத் தனிநிலைச் சிகரத்தின் உச்சியில் நின்று, இந்த உத்தம இஸ்லாமியக் கவிக் கொண்டல் பொழிந்த அற்புத ஞான அமிர்தம் கவிமழை மஸ்தான் சாகிபு பாடல் என்னும் பெயரால் வழங்கிவருகின்றது.

- "பகவத் கீதை வெண்பா" ஸ்ரீலங்கா புலவர் மணி ஏ. பெரிய தம்பிப்பிள்ளை (சாகித்திய மண்டலப் பரிசுபெற்ற தமிழறிஞர்)

"குணங்குடி மஸ்தானின் பாடல்களில் சூபிஞானம் நிறைந்திருக்கும்; என்றும் அவை சமரசப் பார்வை உடையவை. குணங்குடி மஸ்தான் தமிழுக்குக் கிடைத்த மற்றொரு தாயுமானவர்"

- முனைவர் எச். சித்திரபுத்திரன்

"தாயுமானவர் பாடல்கள் மக்களை ஈர்த்து நன்கு பரவியிருப்பதைப் பார்த்து அதைப் போன்றே தம் பாடல்களும் பரவவேண்டும் என்று குணங்குடியார் விரும்பியிருக்கலாம். அதனாலேயே இத்தகைய ஒற்றுமைகள் அமைந்துள்ளன எனலாம். சித்தர் பாடல்களின் நடையும், கருத்தும் பரிபாஷையும் குணங்குடியார் பாடலில் காணமுடிகிறது.

தம் ஞான குருவையும், பரம்பொருளையும், முத்தியு லகத்தையும் 'குணங்குடி' என்றே அழைக்கிறார். அவருடைய பாடல்களெல்லாம் சூஃபி ஞானத்தின் சுடர் ஒளிகள். குணங்குடியாரின் பாடல்களைச் சரியாகப் புரிந்துகொள்வதற்குச் சூஃபித்துவம் பற்றிய சில அடிப்படைக் கருத்துகளை அறிவது இன்றியமையாதது."

- கவிக்கோ டாக்டர் அப்துல் ரகுமான்

"தமிழகத்தில் குணங்குடியாரைத் தெரியாதார், ஒருவரும் இலர். நகரங்களிலும் பட்டி தொட்டிகளிலும் அவரின் பாடல்கள் எந்த முறையிலாவது ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்கமுடிகின்றது.

குணங்குடி மஸ்தான் சாகிபின் பாடல்கள் தத்துவ போதனை கொண்டவை.

அருணகிரிநாதர், பட்டினத்தார் முதலியோர்களுக்குப் பின்னர்த் தோன்றிய குணங்குடியார் அவர்களைப் போன்று தாமும் சித்தராகப் பெற்று அற்புதமான ஞானப்பாடல்களைப் பாடியுள்ளார்."

- முனைவர் சுர. அப்துல் ஜப்பார்



## 2. குணங்குடியார் நூல்கள் - ஒரு பார்வை

I ஆனந்தப்பத்து

II முகியித்தீன் சதகம்-100

III முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்-4

IV அகத்தீசன் சதகம் -100

V மகமூது நபியாண்டவர் துதி

VI தவமே பெற வேண்டுமெனல்

VII குறையிரங்கியுரைத்தல்-7

VIII தவராஜ மகிமை சாற்றல் -1

IX 1. ஆனந்தக் களிப்பு-I -38

2. ஆனந்தக் களிப்பு-II-28

X கண்ணிப் பாடல்கள்

1. நிராமயம்-280
2. பராபரம் -100
3. றகுமான் -100
4. எக்காலம் -17
5. கண்ணிமாலை-100
6. மனோன்மணி-100
7. நந்தீஸ்வரன்-51

XI கீர்த்தனைகள் -22

## 1. ஆனந்தப் பத்து

### குரு

குருவினை "ஷைகு" என்றும் "பீர்" என்றும் கூறுவர். "ஞான வழி நடப்பதற்கு முன் ஒரு தோழரைத் தேடிக்கொள்" என்பது நபிமொழி. குருவில்லா வித்தை பாழ். இறையனுபவம் பெற விரும்பும் அடியான் காமிலான குருவால் ஞானம் உணர்த்தப் பெறல் வேண்டும். அவரிடமே முரீது என்னும் தீட்சை பெற வேண்டும். இஸ்லாமிய மெய்ஞ்ஞான குரு அல்லாஹ்வே. இதனைக் குணங்குடியாரும், "குரல் நெரியவே கதறிக் கூப்பிட்டுக் கதறிக்கூப்பிட்டுக் கருவே குருவே என் கண்ணே ரகுமானே"(98) எனக் குறிப்பிடுதல் காணலாம். பின், நபிகள் நாயகம் ஞானவூற்றாக இருக்கிறார். அவர்களையும் ஞானகுருவாகப் பாடும் மரபும் ஏற்பட்டது. தமிழகத்தில் காதிரிய்யா தரீக்காவின் (நடைமுறை) மூலவர் மெய்ஞ்ஞானி முகையத்தீன் அப்துல் காதற் ஜீலானி (ரஹ்) அவர்களை (கிபி 1078-1168) ஞானகுருவாகக் கொண்ட பாடல்களே மிக அதிகம். குணங்குடியாரும் முகைய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களைக் குருவாகக் கொண்டு,

> 'இணங்கு மெய்ஞ்ஞானப் பேரின்பக் கடலின் இன்னமுதெடுத்து
> எமக்களிப்போன்
> பிணங்கிய கோச பாசமா மாயைப் பின்னலைப்
> பேர்த்தெறிந்திடுவோன்
> வணங்கிய தவத்தினோர்க்கருள் புரிய வள்ளலாய் வந்த
> மாதவத்தேன்
> குணங்குடி வாழு முகியித்தீனாமென் குருபதஞ் சிரத்தின்
> மேற்கொள்வாம்'

எனப் பாடிப் பரவுவார்.

குருவுக்குள்ள சிறப்பு அனைத்தும் வள்ளல் இறசூலின் உம்மத்தால், முகியித்தீன் அவர்கள் பின்னே நிற்கத்தக்கவர் என்பதனையும் முகியித்தீன் சதகத்தில் ஒவ்வொரு பாடலிலும்

> '...நீர் பின் தொடர வள்ளல் இறசூல் வருகவே
> வளமருள் நிறை குணங்குடி வாழும் என்னிருகண்
> மணியே முகியித்தீனே'

எனப்பாடிப் புகழுவார்.

## 2. குணங்குடியார் நூல்கள் – ஒரு பார்வை

I ஆனந்தப்பத்து

II முகியித்தீன் சதகம்-100

III முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்-4

IV அகத்தீசன் சதகம் -100

V மகமுது நபியாண்டவர் துதி

VI தவமே பெற வேண்டுமெனல்

VII குறையிரங்கியுரைத்தல்-7

VIII தவராஜ மகிமை சாற்றல் -1

IX 1. ஆனந்தக் களிப்பு-I -38

2. ஆனந்தக் களிப்பு-II-28

X கண்ணிப் பாடல்கள்

1. நிராமயம்-280
2. பராபரம் -100
3. றகுமான் -100
4. எக்காலம் -17
5. கண்ணிமாலை-100
6. மனோன்மணி-100
7. நந்தீஸ்வரன்-51

XI கீர்த்தனைகள் -22

## 1. ஆனந்தப் பத்து

### குரு

குருவினை "ஷைகு" என்றும் "பீர்" என்றும் கூறுவர். "ஞான வழி நடப்பதற்கு முன் ஒரு தோழரைத் தேடிக்கொள்" என்பது நபிமொழி. குருவில்லா வித்தை பாழ். இறையனுபவம் பெற விரும்பும் அடியான் காமிலான குருவால் ஞானம் உணர்த்தப் பெறல் வேண்டும். அவரிடமே முரீது என்னும் தீட்சை பெற வேண்டும். இஸ்லாமிய மெய்ஞ்ஞான குரு அல்லாஹ்வே. இதனைக் குணங்குடியாரும், "குரல் நெரியவே கதறிக் கூப்பிட்டுக் கதறிக்கூப்டிட்டுக் கருவே குருவே என் கண்ணே ரகுமானே"(98) எனக் குறிப்பிடுதல் காணலாம். பின், நபிகள் நாயகம் ஞானவூற்றாக இருக்கிறார். அவர்களையும் ஞானகுருவாகப் பாடும் மரபும் ஏற்பட்டது. தமிழகத்தில் காதிரிய்யா தரீக்காவின் (நடைமுறை) மூலவர் மெய்ஞ்ஞானி முகையத்தீன் அப்துல் காதற் ஜீலானி (ரஹ்) அவர்களை (கிபி 1078-1168) ஞானகுருவாகக் கொண்ட பாடல்களே மிக அதிகம். குணங்குடியாரும் முகைய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களைக் குருவாகக் கொண்டு,

'இணங்கு மெய்ஞ்ஞானப் பேரின்பக் கடலின் இன்னமுதெடுத்து
எமக்களிப்போன்
பிணங்கிய கோச பாசமா மாயைப் பின்னலைப்
பேர்த்தெறிந்திடுவோன்
வணங்கிய தவத்தினோர்க்கருள் புரிய வள்ளலாய் வந்த
மாதவத்தேன்
குணங்குடி வாழு முகியித்தீனாமென் குருபதஞ் சிரத்தின்
மேற்கொள்வாம்'

எனப் பாடிப் பரவுவார்.

குருவுக்குள்ள சிறப்பு அனைத்தும் வள்ளல் இறசூலின் உம்மத்தால், முகியித்தீன் அவர்கள் பின்னே நிற்கத்தக்கவர் என்பதனையும் முகியித்தீன் சதகத்தில் ஒவ்வொரு பாடலிலும்

'...நீர் பின் தொடர வள்ளல் இறசூல் வருகவே
வளமருள் நிறை குணங்குடி வாழும் என்னிருகண்
மணியே முகியித்தீனே'

எனப்பாடிப் புகழுவார்.

சித்தர் பாடல்களைக் கரைத்துக் குடித்தவர் மட்டுமல்ல. சித்தர்களோடு இணங்கியுறைந்து தம் வழியில் ஈமானுடையவர் என்பதனை

i) வாழுமகு மூதினருள் உள்ள நீர்
ii) வரிசை நபி வரிசை மிகவுள்ள நீர்
iii) திவ்ய கருணாகர முகம்மதரெனும் அருட்செல்வம்
iv) எங்கள் மகமூது
v) குரைஷிகுலக் கொழுந்தான மகுமூது நபி
vi) மக்கநகராளும் முகம்மதிறசூல்
vii) முகில் கவியு நயினார் முகம்மதிறசூல் என்ற முத்தொளி

என நபிகள் நாயகத்தினை நினைவு கூர்ந்து அவர் உம்மத்து எனப் பெருமிதமடைகிறார், தீனின் சித்தத்தில் சித்தம் கலங்காத சித்தர்.

குருவினை நூற்றுக்கதிகமான நுவலரும் தொடர்களால் பொற்சித்திரமாக்குகிறார்.

i) வாக்கு மனமொத்த மரபுள்ள நீர் (1.4)
ii) வார்த்தை தப்பாத நாவுள்ள நீர் (3.5)
iii) வாயிற் சிறந்த மொழியுள்ள நீர் (4.4)
iv) மதலை போற் கொஞ்சு குணமுள்ள நீர் (4.7)
v) மன்னுதவ முத்தி நிலையுள்ள நீர் (4.9)
vi) மதுர வின்பப் பெருக்குள்ள நீர் (5.5)
vii) வருகவலை யேவழியுள்ள நீர் (7.4)
viii) மாசிலுப தேச நிலையுள்ள நீர் (8.4)
ix) வாடிக்கையாய்க் கருணையுள்ள நீர் (9.2)
x) வானினுங் கருணை வானுள்ள நீர் (9.5)
xi) வாசமெவையினும் வாசமுள்ள நீர் (10.5)

எனுந் தொடர்களால் குருவை ஒரு சொற்சித்திரமாகக் காட்டுகிறார்.

குருவின் வழிகாட்டுதல்களை உடன் உணர்ந்துகொள்ள இயலாமல்போனதன் வருத்தத்தையும், குருவின் வழிப்படி நடவாததால் உள்ளம் வீணாகிப்போய்விடுமோ என்ற பயத்தினையும்

'குறி விளக்குங் குருவடியைக் கொள்கையுடன் போற்றாமல்
அறிவு மயங்குகின்றேன் ஐயா பராபரமே'

பராபரக் கண்ணி(74)

'கோலங்குறியில்லாக் குருவடி தொழார்கள் மனம்
காலன் இருப்பிடமோ கண்ணே றகுமானே'

-றகுமான் கண்ணி (55)

என்று பாடுகின்ற பொழுது மஸ்தான் சாகிபின் குருவைப்போற்றும் மனப் பண்பு தெளிவு படுத்தப்படுகிறது.

"குருதுணை கொள்வோம்" என்பதனை

1) ஞான குருநாதன் நற்பதம் நிதம் தொழுது அழுது
நாடுவதும் எக்காலமோ? (முகியித்தீன் சதகம் 9:1)

2) முத்தி தரும் வேதம் மொழிந்த வழி நடக்கப்
பெற்ற குரு என்பிணை காண் நிராமயமே - நிராமயக்கண்ணி (22)

3) கோலம் குறியில்லார் குருவடி தொழார்கள் மனம்
காலன் இருப்பிடமோ கண்ணே றகுமானே -றகுமான்கண்ணி (55)

4) தேசிகன் நான் என்னும் திருட்டுக் குருக்கள் சொல் ஓர்
காசாய் மதியேன் என் கண்ணே றகுமானே -றகுமான்கண்ணி (95)

எனக் காணலாம்.

## போலி குருமார்களைச் சாடுதல்

போலிக்குருமார்களைக் குணங்குடியார்,

"சந்நியாச மென்ற பொய் வேடந்தரித்தவர்"

-முகியித்தீன் சதகம் (6:1)

"செபமாலை கைக்கொண்டு வாய் முணுமுணுத்து உபதேசி
நான் என்ற வம்பன்"
"பீரு நானென்னு முபதேசங்கள் கூறிவிலை பேசித்திரிந்த வம்பன்"
"பதமற்ற பாவி பக்கீறு தறுதலை மொட்டைப் பரதேசியான பாவி"

என்ற தொடர்களால் தொட்டுக் காட்டுவார்.

## தக்கலை பீரப்பா

'தக்கலை மெய்ஞ்ஞானி பீர் முஹம்மதப்பா,
அரிய உபதேசஞ் செய்யுமருள் குருமார் தன்னில்

அதிலும் இரண்டு விதமுண்டு அறியவகை செய்வேன்
பீரான பீர் பெரிய பீர் ஜாதா உண்டும்
பீருஜாதா வேஷம் பூண்ட ஹறாம் ஜாதாவுண்டும்

-பிஸ்மில் குறம் 108-109

என்று குறிப்பிடுகின்றார்.

ஆனந்தப் பத்து எனும் பகுதியில் 'குருபரனை'ஒரு பரனாகக் கொண்டாடித் தோத்திரஞ் செய்தலாகக் குருவணக்கம் (1) என ஆரம்பித்து - பின்வரும் தலைப்புகளில் பத்துப்பாடல்களை அருளிச் செய்துள்ளார். (1+10) :

1. வஸ்து உதயத்தின் ஆநந்தம் - பாடல் முழுவதும் அரபுச் சொற்களால் அமைந்தது,2.வஸ்து உதய நிலத்தினா நந்தம் (பாதிப்பாடல் அரபிச் சொற்கள்), 3. விளையாட்டினா நந்தம் (குருவின் அருள் விளையாட்டுகள்), 4. தன்னியலினா நந்தம் (தன்னைப் பாவியாக - மாபாவியாகப் பாடுதல்), 5. மகிமையி னாநந்தம், 6. வலிமையினாநந்தம், 7. இரக்கத்தினாநந்தம், 8. பெருமையினாநந்தம், 9. தன்னிலையினாநந்தம், 10. காரணத்தி னாநந்தம் (குருவின் அற்புதங்கள்).

### வஸ்து உதயத்தின் ஆனந்தம்

வஸ்து + உதய நிலத்தினானந்தம் = குணங்குடி மஸ்தான்; ஆனந்தப்பத்தின் முதலிரண்டு பாடல்களிலும் பரம்பொருளின் எங்குமிருத்தல் கோட்பாட்டை ஒரு ஆலிமாக நின்று மிகத் தெளிவாக வெளிப்படுத்துகிறார்.

### முதற்பாடல் கருத்தாவது

"பிரபஞ்சக் கலப்பற்ற தூய்மையான பரம்பொருளானது சத்து மயமான பெருமை பொருந்திய நிலையில் எல்லையற்றுத் தன்னில் தானாய் மனம் வாக்குக்கு எட்டாத மறைபொருளாய் இருந்தது சொல்லொணாததும் பூர்வீகமானதும் ஏகாந்தமானதுமான பனிமுட்டம் போல் படைப்புகளை யெல்லாம் தன்னுள் வெளிப்பாடின்றி மறைத்து வைத்திருக்கும், தூய்மையான அந்நிலையில், எவ்வகையிலும் விளக்கிக் கூற இயலாத குணங்களற்ற தூய சத்தாய் அனாதியாய், மறைபொருளாய் "அஹதியத்" : என்னும் ஒருமையாய் இருந்த பரம்பொருள், பன்மையான குணங்குறிகளை அறிவுமயமாக வைத்து அவைகளை வெளிப்படுத்தும் "வாஹிதிய்யத்"என்னும் நிலையாகி,

ஆத்மலோகமாகி, மாதிரியுலகமாகி, சடவுலகமாகி, மானுடவுலகமாகி, அதன் பின் அழிவில்லாத புகழ்மிகு அழகும், வியப்பு மிகு பரிபூரணமுமாகி, முன்பின் என்றில்லாத தெய்வீகமும் அனைத்து வல்லமையும் எங்குமிருக்கும், என்றும் நிலையான அவன் "மை" இடத்திலும் இருப்புக் கொண்டிருக்கும் இறைவா! துன்பம் நிறைந்த அடிமையாகிய நான் உனை மறந்தால் ஈடேறுவனோ (இல்லை). முன்னிலைக் குருவாகிய நற்குணங்களுக்கு இருப்பிடமான தலைவராகிய குருநாதர் முகியித்தீனே".

இத்தத்துவங்கள் அப்துல் கரீம் ஜீலி (ரஹ்) கி.பி. 1365 அவர்களின் "அல்-இன்ஸானுல் காமில் ஃபிமஃரி ஃபாத்தில் அவாகில் வல் அவாகிர்" என்னும் நூலில் விரித்துரைக்கப்பட்டு ஆராய்ந்துள்ள தத்துவ கருத்துக்களாகும் என்பர்.

மனிதன் இயற்கையின் சக்தியாகமட்டுமன்றி ஒரு கண்ணாடி போல இவ்வண்டத்திலே பரந்து விரிந்திருக்கும் இறைப் புகழையும் உயர்ந்த ஒருமைப்பாட்டையும் தன்னுள் பிரதிபலிக்கின்றான். பரம்பொருள் ஒன்று, பன்மையான படைப்புகளில் எல்லாம் இறைவனே எங்குமிருக்கின்றான்.

பரம்பொருளுக்கும் உலகத்துக்கும் இடையில் உள்ள வேறுபாடு உறவு மாத்திரமே. ஐஸ் கட்டியையும் தண்ணீரையும் போன்றது. சத்து என்பதில் இரண்டும் ஒன்றே.

இறைவன் மறைபொருளான 'புதையல்' போல ஆரம்பத்தில் இருந்தான், இருக்கின்றான். இதுவே ஒருமைநிலை; பரம்பொருளின் நிர்க்குண துரியாதீதத் தன்மை. பரம் பொருள் படைப்புகளை வெளிப்படுத்துமுன், குணங்குறியற்ற தூய சத்தாய் எவ்வாறும் விளக்கிக் கூற இயலாத அனாதியாய், மறைபொருளாய் ஒருமை நிலையில் இருந்தது. அல்லாஹ்வே இவ்வண்டத்தின் முதலாகும்; அந்நிலையில் அனைத்துப் படைப்புகளிலும் எங்கும் நிறையும் முன் தனித்துவமான ஒருமை நிலையில் இருந்தான். அந்நிலைதான் 'இருள்நிலை' எனச் சுட்டப்படுகிறது. அந்நிலையில் மேலும் படைப்புகள் வெளிப்படையான இருப்பின்றி மறைந்த புதையல் போல் இறைவன் சிந்தனையில் கருத்து மயமாக மட்டும் இருந்தன, இது இலை, வேர்கள், கிளைகள் எல்லாம் ஒரு வித்தில் அடங்கியிருப்பது போலாகும். இறைவன் 'அஹதிய்யத்' என்ற தூய ஒருமை நிலையில் இருந்து பலவகைப்பட்ட படைப்புகளைத் தன்னிலிருந்து பிறக்கச் செய்தான். பல படைப்புகளும் 'வாஹிதிய்யத்'என்னும் பன்மை நிலை அடைந்தன. ஆனால்,

இறைவனே 'வாஹிதிய்யத்'என்னும் பன்மை நிலைக்கு அப்பாற்பட்ட 'அஹதிய்யத்'என்னும் ஒருமை நிலையில் இருக்கிறான். தானே தானாக இருப்பவன், 'அது', 'அவை'எனும் இரண்டாம் நிலையை அடைந்து, உட்புறமாகிய ஒருமை நிலையைக் காலி பண்ணி வெளியரங்கமான பிரபஞ்சத்தைப் படைத்து ஆளுகின்றான். குணங்களற்ற ஒருமை நிலையில் இருந்து, குணங்கள் நிரம்பிய பன்மை நிலையில், பலவகைப்பட்ட உலகங்களை அவன் படைத்தான். அவைகளாவன; உயிருலகு, சடவுலகு, மூலமாதிரி வுலகு, சூக்கும வுலகு, மானுட உலகு எனும் வேறுபட்ட இருப்பு நிலைகள் பரம்பொருளின் வேறுபட்ட படித்தரங்களாகினாலும், இறைவனைத் தவிர உண்மைப் பொருள் எதுவும் இல்லை. எல்லாமே இறுதியில் ஒருமையாகின்றன. எல்லா இருப்புகளிலும் உண்மைத்துவமான இறைச்சிந்தனைகளையே அண்டம் பிரதிபலிக்கின்றது. மிக முக்கியமான ஜலால் (மாட்சிமை); ஜமால் (அழகு); கமால் (பரிபூரணம்) எனும் இறைப் பெருமைகள் படைப்புகளிலெல்லாம் எங்கும் நிறைந்துள்ளன. ஒரு மிகவுயர்ந்த தனியனாக - லாஹீத்து, அறிவு, ஆற்றல், நோக்கம், கேட்டல், காணல், பேசுதல் என்னும் இன்றியமையாத தெய்விகத் தன்மையையும் 'ஜபறூத்து' என்னும் அனைத்து வல்லமையையும் அல்லாஹ் நிரந்தரமாகக் கொண்டிருக்கின்றான்.

'தாத்' என்பது குணங்களற்ற இறைமை நிலை. இந்நிலையில் தூய்மையான இருப்பு, தெய்விக சிந்தனையாக இருக்கின்றது. அது 'அத்-தாத்' 'அல்-வுஜீத்', 'அல்-முத்லக்'என்னும் தூய்மையான படைப்புகள் கலப்பற்ற ஒருமையாக இருக்கின்றது. 'வாஹிதிய்யத்' என்னும் பன்மை நிலையை மூடுபனி (அல்-அமா) போல் தன்னுள் அமிழ்த்தி மறைத்து வைத்திருக்கின்றது. அந்நிலையில் பன்மை நிறைந்த படைப்புகள், வெளிப்பாடின்றி இறைச் சிந்தனையில் சத்துமயமாக இருந்து வாஹிதிய்யத் என்னும் உலக இயல்புகள் அடங்கிய பன்மை நிலையில் வெளிப்பாடாகின்றன."[1]

அப்துல் கரீம் ஜீலி (ரஹ்) அவர்களும் (கி.பி. 1365) இதன் விளக்கங்களை தம் தத்துவ நூலில் விவரித்துள்ளார்.

### இரண்டாவது பாடலின் கருத்தாவது

"ஒருமையான தனிமை நிலையிலோ, புகழுக்குரிய பன்மையான பிரபஞ்ச நிலையிலோ - பலவகைப்பட்ட

1. R.A. Nicholson, 'Studies in Islamic Mysticism - p. 97

படைப்புகளை அறிந்திருக்கும் இறைச்சிந்தனை நிலையிலோ எல்லா வரையறைகளுக்கும் அப்பாற்பட்ட ஏகாந்த நிலையிலோ - சொல்லுக் கடங்காச் சத்து; மயமான நிலையிலோ முதன்மை நிலையைக் குறியீடு செய்யும் 'அலிபு'க்கு முந்திய 'நுகத்தாவிலோ' (=புள்ளி) - மேன்மையான 'ஆலம் மலக்கூத்'என்னும் ஆன்ம உலகிலோ, குணங்கடந்த யோக நிலையின் எட்டாவது இடத்திலோ,[2] நான்கனுள் ஒன்றான சிவராச யோகத்திலோ, உனது கருணை மழை குறையாப் பெருங்கடலிலோ, கடலை ஒப்புடைய அளவற்ற அருளாளனே! நீ இருப்பதை இந்த நாயாகிய அடியேனுக்குத் தெரியச் செய்வாயாக".

குறிகுணங்களுக்கு அப்பாற்பட்ட இறைவனின் தனித்துவ நிலைக்கும் குறிகுணங்கள் அடங்கிய பலவகைப்பட்ட படைப்புகளில் பன்மையாக எங்குமிருக்கும் நிலைகளுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டைக் காணவேண்டியதாகிறது.

சத்துமயமான 'தாத்' என்னும் இறைவனின் இருப்பு பிரபஞ்ச பொருட்களில் பரிணமிக்கும் இரண்டாம் நிலையில் இருந்தும் உயர்ந்ததாக இருக்கின்றது. இறைவன் பல உலகங்களில் பலதரப்பட்டு எங்கும் நிறைந்துள்ளான். 'ஆலம் அஸ்பல்'(கீழ்தரப்பட்ட உலகிலும்), 'ஆலமுல் மலக்கூத்'(உயரிய வானவர் உலகிலும்) மேலும் படைப்புகள் அடங்கிய, 'ஆலமுல்கல்க' என்னும் உலகத்திலும் மறுமைக்குரிய 'ஆலமுல் பாக்கி' என்னும் உலகத்திலும் 'ஆலமுல் அஸ்மா' என்னும் மிக உயர்ந்த விண்ணகத்திலும் 'ஆலமுஷ்ஷஹாதா' என்னும் பார்வைக்கு எட்டும் உலகத்திலும், 'ஆலமுல்கைப்' என்னும் பார்வைக்கு எட்டாத மறைவான உலகத்திலும் 'ஆலமுல் மாகுல்' என்னும் அறிவு மயமான உலகத்திலும் இறைவன் தன் சிறப்பினை வெளிப்படுத்துகின்றான். மேலும் நான்கு உலகங்களாக சூஃபி ஞானிகள் 'ஆலமுல் நாஸூத்' எனப்படும் மானிட உலகம், 'ஆலமுல் மலக்கூத்' என்னும் விண்ணவர் உலகம், ஆலமுல் ஜபறூத் என்னும் இறைசக்தி மயமான உலகம், 'ஆலல்லாஹூத்' இறைவனுடன் இரண்டறக் கலந்து தஞ்சமடையும் உலகு என்பனவாகும் என ஆனந்தப்பத்தின் முதலிரு பாடல்களும் இறைக்கோட்பாட்டினை இனிது விளக்குகின்றன.

---

2. யோக நிலை எட்டு; அட்டாங்க யோகம் - இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரனை:, தியானம், சமாதி கோடானு கோடி வேதங்களாலும் சொல்லுவதற்கரிய யோக வகை

அதன்பின் தொடரும் பாடல்களில் ஞானகுரு இருக்கும் உயர்ந்த மேலான நிலைகளையும் குருநாதரின் அருள் விளையாட்டுக்களையும் கூறுவார்.

சூஃபி ஞான நிலையில் பாவமன்னிப்புக் கேட்கும் நிலையில் தம்மை 'மாபாவி' என்று இகழ்ந்து பாடுவார். முகியித்தீன் சதகத்திலும் (61-70) பத்துப் பாடல்களில் தம்மைப் பாவியாகப் பாடும் பாங்கு காணலாம். மாதவர்க்கரசன் மன்னர்க்கு மன்னனாக வந்த மகராஜன் நீ!, வேதம் நீ!, வேதாந்தம் நீ! மெய்ஞ்ஞான வீடு நீ! வீட்டின் விளக்கு நீ! விரிகதிர் சுடர் நீ என்றெல்லாம் கூறி,

'அருள் தந்த குரு நீ! மாதா பிதா நீ! மட்டறு பவக்கடல் தொலைக்கும் ஒரு கவிழா மரக்கலமும் நீயல்லவோ' என்று கூறி இகபரம் இரண்டிலும் சுகதுக்கமற்று ஈடேறவும் அருள் வேண்டுகிறார். ஞானச்சுகக் கடலை உண்டு சும்மா இருக்க அருள் வேண்டுகிறார்.

பல்லாயிரங்கோடி அண்ட பகிரண்டம் உன் பாதபங்கயமாகும். பரிபூரணானந்தமே உன் முடியாகும். வல்லான் எனும் பெயர் உனக்கே உரியது. வானவர்கள் தினம் பணியும் மகிமை சொல்ல முடியுமோ என்கிறார்.

"நித்திரையில் செத்த பொய்யுடல் நிலையற்றது என்பது அறிகிலேன். கற்பினும் கேட்பினும் என் மனம் இணங்குவதில்லை; என் வலிய வினையை அகற்றி அருள்க"என இரங்குகிறார்.

பின் ஞான குரு ஆற்றிய அற்புதங்களைக் கூறி, அருள் வேண்டுகிறார். இங்ஙனமாக ஆனந்தப் பத்து அமைகிறது.

## 2. முகியித்தீன் சதகம்

நூறுபாடல்களைக் கொண்ட சிற்றிலக்கியம் சதகம். முகியித்தீன் சதகம் 100 பாடல்களைப் பெற்று விளங்குகிறது. வள்ளல் இறசூலைத் தொடர்ந்து அவரருளைப் பெறுவதற்காக முன்னிலைக் குருவாகிய முகியித்தீன் ஆண்டகையைத் தோத்திரஞ் செய்து, குறையிரந்து பாடிய சதகம். இதில் குரு வணக்கப் பாடல்கள் மூன்று எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் காணப்படுகின்றன. இவை மூன்றும் "குணங்குடி வாழும் முகியித்துனாமென் குருபதம் சிரத்தின் மேற்கொள்வோம்" என ஈற்றடிகளுடன் இனிது முடிகின்றன.

### முதல் பத்தில் - "முன்னிற்கவே" என

ஆதி முன்னிற்கவே, அகது, உகது, வாகிதிய்யத் (ஒருமையின் மும்மை நிலை) முன்னிற்க, அத்துவிதம் முன்னிற்க, பூரணம் முன்

நிற்க, நீக்கமற எங்கெங்கும் நின்று நிறைகின்ற பொருள் நேரில் என் முன் நிற்க, வானாதி பூத முத்தானாகி நின்ற பெருமான் எனது முன்னிற்க, நோக்கு நோக்கொண்ணாத நோக்கு, நோக்கா நின்ற நோக்கு எனது முன்னிற்க, நீக்கமற அங்கு இங்கு, எனாது எங்கு எங்கும் ஒரு நிறைவு எனது முன்னிற்க, எற்றாத (அழிக்க முடியாத) மாயைதனை எற்று பேரெற்று பேர் இன்பம் என் முன் நிற்க. ஊரற்று நாமருபத்துடன் பற்றற்று உயர்ந்ததென் முன்னிற்க - ஒன்றற்றிரண்டற்று வாக்கற்று மனமற்று உதித்தது என் முன் நிற்க, குறியற்று அறிவற்று நிறை குறைவற்றுங் குலாவியது என் முன் நிற்க - என இங்ஙனமாகப் பத்துப் பாடல்களில் கொடிக்குக் கொழுகொம்பான இறைமுன் மஸ்தான் நிற்கிறார். இரண்டாவது பத்தில் பரம்பொருள் எல்லாப் பொருள்களின் பண்புகளைப் பொருந்தியும் பொருந்தாமலும் இருக்கும் தன்மையைக் காணக் கருணை கூர்ந்து அருள்க என வேண்டுகிறார். பத்துப் பாடல்களிலும் அரும் பொருளை அரும் மணியை, கருணை முகிலை, பெரு துரியை, பெருக்கை, காரணத்தை, சோமயத்தை, ஞானோதயத்தை, ஞானகுருவைக் காரணமாகவும் (17) பாடும் பாடல்கள் மனத்தில் உறைவன.

“ஊனாகி, ஊனில் உயிராகி, எவ்வுலகுமாகி, ஒன்றாகி, இரண்டாகி ஊருடன் பேருமாகி, கானாகி, மலையாகி, கடலுமாகி, விலங்குமாகி, கங்குல் பகலாகி, மதியாகி, இரவியாகி, எல்லாப் பொருளுமாகி, தானாகி, நீயாகி அவனாகி அவளாகி நாதமும் பஞ்சபூதங்களுமாகி இலங்குகிறது. எவ்விடத்திலும் உறைந்த படைப்பாளனாகிய இறைவன் அடியேனுக்கு நன்மை செய்து ஆளுதற்கு உம்மை நம்பினேன்” (22) எனும் இப்பாடல் கருத்தோடு, திருமூலரின் i) புகுந்தது... ii) தானே... iii) உடலாய் எனும் மூன்று பாடல்களும் ஒப்பு நோக்கி அறிதற்குரியன “இயற்கையானது இறையின் பெருமையின் வெளிப்பாடு”என்பதும் உணர்த்தப்படுகிறது. அதில் மணியாகப் பாடும் ஒரு பாடலில்

“ முத்தை நவமணியை ஒளி பத்தி பாயும் மணியை
மோனமணி ஞானமணியை
மொய்த்த கதிர் மாசிலா மணியை வானாதியாம்
மூவுலகுமான் மணியைச்
சித்தி மணியைச்சித்தி தருமுத்தி மணியையென்
சிந்தை குடிகொண்ட மணியைத்
திவ்விய குருமணியால் இழைத்த சிங்காசனச்
சிகரத்தினுச்சி மணியைப்

பத்தர்கட்கு எய்து சூடாமணியை நிறை பார்த்த
பரமார்த்த மணியைப்
பணிபூண்டு பார்க்க அடியேனும் உமை நம்பினேன்
பணிபூட்டி ஆளுதற்கே"

......*(13)*

என இறைப்பெருமைகளைப் பல வகைப்பட்ட மணிகளாக ஒப்பிட்டுள்ளார். இறைவனின் ஒவ்வொரு வல்லமையும் ஒப்பிட இயலா அழகு வாய்ந்தது என இறைலயத்தின் கற்பனையில் மிதக்கிறார். கருணை மேகம் அருள் மேகம், என்றெல்லாம் மேகமாகவும் *(14)* பல்வேறு கடலாகவும் *(15)* அன்புப் பெருக்கு நல்லறிவுப் பெருக்கு, மெய்ஞ்ஞான அமிழ்தப்பெருக் *(16)* காகவும் காட்டுகின்றார்.

சமாதி-அட்டாங்க யோகத்துள் ஒன்று. யோகப்பயிற்சியின் உச்சநிலை ஆகிய மாபெரும் நிலையைக் குறிக்கிறது. அது உயிரும் இறைவனும் புணர்ந்த நிலை. இதனைத் தண்ணீரில் உப்புக் கலந்தவாறு என்றும் அப்பினில் உப்பு என்றும், ஐக்கிய போத ஆனந்தம் என்றும் பேரின்பநிலை என்றும் பற்பல முறைகளில் அழைப்பர். எட்டாவது நிலையாகிய இந்தச் சமாதி என்னும் ஞானப் பெருநிலைக்கு ஒப்பற்ற இடமுண்டு. எது சமாதி நிலை ஏன்பதனை விளக்குமுகமாக 41 முதல் 50 வரை பத்துப் பாடல்களில் வரைவிலக்கணத்தினைப் பகர்கிறார். ஒவ்வொரு பாடலிலும் தெளிவுபடுத்தி அடுக்கி அடுக்கி நிரல்படுத்தி விளக்கமளிப்பார்.

"பாயும் ஈராறு கலை பாயாது பக்குவம் பண்ணிவைப்பது சமாதி", "ஈராறுகால்"களையும் எட்டுக் கயிற்றால் இறுக்கி அறிவது சமாதி; "நாலிரண்டெட்டும் எட்டெட்டாகி அழியுமுன் நாலாக்குவது சமாதி" எனச் சரக்கலை தத்துவத்தை நுழைத்து விளக்குவார்.(2 X 6 =12) கால் =மூச்சு; மனித சுவாசம் வெளியே 12 அங்குலம் ஓடி 4 அங்குலம் கழித்து 8 அங்குலம்தான் நின்ற இடத்தில் நோக்கும் இதை 4 அங்குலமாக்குவது (சமாதி).

"ஓவியம் போலிருந்து உள்ளுருகு நல்லமிர்தம் ஒழுக உண்பது சமாதி"

(சுழுமுனை = நடுமூச்சின் மேல் பாகத்தில் நடுவிலிருந்து ஒழுகும் சோம அமிர்தம்)

"சாதி பேதத்தையும் மாதர் போகத்தையும் தள்ளி நிற்பது சமாதி"

"செத்த சவமது போலிருந்து செபதபமுஞ் செயத்தனிப்பது சமாதி"

"நிலையாது காயம் என்றெண்ணம் ஒன்று என்று நிச்சயிப்பது சமாதி"

"எல்லையு மறந்து பலதொல்லையும் இறந்ததோர் இடத்திலிருப்பது சமாதி"
"எனது யான் என்பதை இடம் பொருளோடு ஏவல் முதல் ஈடழிப்பது சமாதி"
"இல்லாளும் மைந்தரும் சுற்றமுஞ் சுற்றமாய் இல்லை என்பது சமாதி"
"ஆரிருந்தென் ஆர் போயென்ன என்று மனம் ஆற்றியிருப்பது சமாதி"
"வேத வேதாந்தமும் விட்டு நாதாந்த நடு வீடு செல்வது சமாதி"

என இங்ஙனமாக எது "சமாதி" நிலை எனத் தொடுத்துத் தொடுத்து அடுத்து அடுத்து ஒவ்வொரு பாடலிலும் விளக்கியுள்ளார்.

காந்தமும் இரும்பும் இணைவது போலக் கலந்து மாயையில் மாய்ந்த மனத்தை மாயாதபடி ஈர்த்தருள்க என வேண்டுதலாகிய பத்தில் (51-60) ஒவ்வொரு பாடலிலும் வம்பன், வம்பன் எனக் குறிப்பிட்டுப் பாடுவார். அதிலொரு பாடல் கருத்தாவது :-

" கல்லாதவன், அறிவில்லாதவன், ஒன்றுக்கும் உதவாதவன், நஞ்சினைவிடக் கொடியன், வெறிநாயாக விளங்குபவன், பொல்லாதவன், உறவில்லாதவன், பொறாமை கொண்டவன், புன்மைக் குணங் கொண்ட போக்கிரி போன்றவன், தலைவன் போல இருக்க ஆசைப்படுபவன், போர்புரிய எண்ணங்கொண்டவன், விருப்பம் பல உடையவன், மடையர் நடைஉடையவன் - இத்தகைய வம்புகள் எல்லாம் அகல அடியேன் உனையே நம்பினேன்"எனும் (53) பாடல் கருத்து நாமும் சேர்த்து அவ்வாறே கேட்கத் தூண்டுகின்ற தல்லவா!

மெய்ப்பொருளுக்கு வேறான "நான்" எனும் மயக்கத்திலிருந்து நீக்கி ஆட்கொள்ள வேண்டுகிறார். ஒவ்வொரு பாடலும் பாவி பாவி என முடிதல் (61-70) காணலாம்.

"அழியக்கூடிய உடலை நான், எனது என்று உளறக் கூடியவன், தன்னிகரற்ற பாவம் செய்பவன், நற்றவம் இல்லதவன், தீச்செயல்களைச் செய்யக் கூசாதவன், உண்மைகளைப் பேசாதவன்; சினமிக்கவன், கொடிய கொலைஞன், வேசியர்கள்மேல் ஆசை கொண்டவன் - இத்தகைய பாவியாகிய என்னை ஆட்கொள்ளுதற்கு உன்னையே நம்பினேன்" (63) எனும் பாடல் கருத்துப் போன்று மீதி ஒன்பது பாடலிலும் தம்மைப் பாவியாகப் பாடும் பாங்கு நம்மைப் பாவத்திலிருந்து நீங்க, தொலைக்க வழிகோலுகின்றதன்றோ!

மாயை, வினை எனும் இடையூறு இரண்டினாலும் அஞ்சும் பாவியுள்ளத்திற்கு அருள்புரியும்படி (71-80) வேண்டுகிறார். பத்துப் பாடல்களிலும் அழுது அழுது ஏங்கும் நிலை காணலாம்.

மஸ்தான் எதற்கு அழுகின்றார் எனப் பார்ப்போம்:

"மோகவலை வீசிப் பிடிக்கின்ற பெண்களுக்காக அழுவேனா? தந்தை, தாய், சுற்றத்தால் வந்த பல்வினைகளுக்கு அழுவேனா? ஆசைப் பெருக்கைப் பெருக்குகின்ற இந்த உலகிற்கு அழுவேனா? உலக வாழ்வு என்னும் நெருப்புகள் சுடுவதற்கு அழுவேனா? இந்த உடல் சதம் என்று நினைத்து அதைப் போற்றுதற்கு அழுவேனா? என் கொள்கையை ஏற்காது அடித்துத் துரத்தும் செயலுக்கு அழுவேனா? பேயன் நான். இனி என் செய்வேன்? பிழை பொறுத்து என்னை ஆளுதற்கு உன்னையே நம்பினேன்" (74).

இன்னும் பலவாறாக ஒவ்வொரு பாடலிலும் அழுதழுது கரையும் காட்சிகள் காணலாம்.

இறந்து ஒழிதற்கே உலகம் இருக்கின்றது உண்மையானால், மறைந்து ஒழியாது என்றும் இருப்பதற்கே, எல்லாம் ஒன்றே என்னும் அத்துவித ஞானம் பெற என்னை ஈடேற்றி அருள் புரிக என்றும் வேண்டுகிறார். இப்பாடல்களில் 'எக்காலமோ' என ஏங்கித் தொடர்ந்து ஏங்கி ஏங்கி இறைஞ்சும் நிலை காண்போம்:

இழிந்த புழுப்போன்ற இந்த உடல் உயிரை விடுவது எக்காலமோ?

இன்று இருப்போர் நாளைக்கு இருப்பது பொய் என்ற நிலையாமையை உணர்வது எக்காலமோ?

இளமை முறுக்கேறிய உடல் தளர்ச்சியடையும் என்ற யாக்கை நிலையாமையை உணர்வது எக்காலமோ?

பேரானந்தப் பொருளிற்கு அடிமையாவது எக்காலமோ? நான் நானாக ஆகும் அத்துவித ஞானம் பெறுவது எக்காலமோ? இறக்கப் பிறந்த அடியேன் உன்னையே நம்பினேன்" (85)

என ஒவ்வொரு பாடலிலும் பலவாறாகக் கூறி 'எக்காலமோ?' எனக் கேட்டு ஏங்குகிறார்.

அளவிடற்கரிய காட்சிகளைக் கொண்டு உன் பெருமையை ஓதும் பல கோடி சீடருள் அடியேனையும் ஒருவனாகக் கொண்டு இருந்து பாடி (91-100) கோடி, கோடி எனக் கோடிட்டுக் காட்டும் ஞானம் கேட்கலாம்.

'அவனன்றி ஓரணுவும் அசையாது என்று அறிந்து அசையாது தொழுது நிட்டையில் இருப்பவர் பல கோடி.'

கோடிகள் அனைத்திலும் நொடிப்பொழுதில் விளையாடி வருபவர் பல கோடி! சித்தியும் முத்தியும் பெற நற்றவம் செய்தவர் பல கோடி! உமது பாதாரவிந்தங்களே அடைக்கலம் என்பர் பல கோடி! சிவஞானம் எய்திய அருளாளர்கள் பல கோடி! அறிவுரையாளர்கள் அனந்த கோடி! தீட்சை தந்து அருளுவதற்கு உன்னையே நம்பினேன் எனக் கோடி கோடியாக அடுக்கிக் கொட்டுகிறார்.

இங்ஙனமாக முகியித்தீன் சதகம் i) முன்னிற்கவே (1-10), ii) பொது (11-20), iii) பொது (21-30), iv) பொது (31-40), v) சமாதி (41-50), vi) வம்பன் (51-60), vii) பாவி (61-70), viii) அழுகின்ற நிலை (71-80), ix) எக்காலமோ (81-90), x) கோடி (91-100), என 100 பாடல்களாக இனிது இலங்குகிறது.

## 3. முகியித்தீன் ஆண்டவர் கொச்சகம்

இது கொச்சகக் கலிப்பாக்கள் நான்கு பெற்றது. ஞான குருவான முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானியைக் குருபரனாக முன்னிறுத்தி வழிகாட்டி யருளும்படி வேண்டுவதாயுள்ளது.

ஆன்மப் பயணம் செல்ல உளத் தூய்மை வேண்டும், உளத்தைக் கழுவித் தூய்மை செய்து நன்னெறியில் வைத்த பொழுதும் புழுக்கைக் குணம் போகவில்லை என்றும், குணங்குடி கொள்ள வீணரை விட்டொழிய வேண்டும் என்றும் குறிப்பாய்க் குணங்குடியிலுள்ள மெய்ஞ்ஞான வீடு சென்று ஜபருத் எனும் நாலாம்படி ஏறி இருக்கவும் அங்கு மவுன மலரணைமேல் ஞான குருவைக் கூடவும் ஆசையுற்று அறையலுற்றார்.'

1. முகியித்தீனே! என் குற்றங்களை நீக்கி, அணைத்து அருள் புரிந்தாலும் என் கீழ்த்தரக் குணங்கள் போவதில்லை. ஆகையால், குணங்குடித் தந்தையே! உன்னிடமே வருகின்றேன்! பழிக்காமல் ஏழையாகிய என் முகம் பார்த்து அருள் புரிக!

2. முகியித்தீனே! துயர்கள் பல அடைந்தேன்! வாழ்க்கையில் கேடுகள் செய்து கெட்டுப் போனதும், பாய்முடைந்து விற்றதுவும், வெட்டவெளியாய் விடிந்தது. பயனற்றுப் போனது. நான் ஆடிய ஆட்டமெல்லாம், விட்டு நீங்கி, குணங்குடியானாகிய இறைவனை ஏற்றுக்கொள்ளாத வீணர்களின் நட்பு என்னை விட்டு நீங்கவில்லை. எனவே, எனக்கருள் புரிவாயாக.

3. முகியித்தீனே! உரிமை கொண்டாடும் என் உறவுகள் என்னை அழித்து, ஒட்டாண்டி ஆக்கின. ஆனாலும் என்னை அவை விட்டு விடவில்லை. குணங்குடிக்கு வருகின்றவர்களை ஒட்டாமல் வீணர்களைத் துரத்தி, எனக்கு அருள் புரிக.

4. முகியித்தீனே! பெருமை பொருந்திய குணங்குடியின் மெய்ஞ்ஞான வீடு சென்று, நாலாம்படியேறி நான் ஒளிந்திருப்பவன் பழக்க வழக்கமாக அங்கே வந்து மௌனமாகிய மலர்ப் படுக்கையில் விருப்பமுற என்னை அணைத்துக்கொள்ள வருக!

இங்ஙனமாக நான்கு பாக்களின் கருத்துக்கள் அணி செய்கின்றன.

## 4. அகத்தீசன் சதகம்

இதுவும் சிற்றிலக்கிய வகையில் 100 பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியின் முன், பாடு பொருளை விளக்கும் ஆசிரியப்பாவும், ஒவ்வொரு பாடலின் முன் அப்பாடலின் நோக்கம் பற்றிய தொடரும் காணப்படுகின்றன. இங்ஙனமாக நூறு பாடல்களும் நூறு தொடரும் இந்நூலில் அமைந்துள்ளன.

அகத்தில் ஈசன் எனப் பொருள் விரித்துரைப்பர். அகத்தின் ஈசனாகிய குருபரனை நோக்கி மனம் அடங்கவும், பரம்பொருளின் நினைவு நிரம்பவும் அருள் வேண்டுவதாக இச்சதகம் அமைந்துள்ளது.

இது 1) குருவருள் நிலை, 2) தவ நிலை, 3) துறவின் நிலை, 4) நியம நிலை, 5) வளி நிலை, 6) தொகை நிலை, 7) பொறை நிலை, 8) காட்சி நிலை, 9) தியான நிலை, 10) சமாதி நிலை எனப் பத்துத் தலைப்புக்களில் ஒவ்வொரு பகுதியிலும் பத்துப் பாடல் கொண்டு விளங்குகிறது. யோகம் எட்டு வகைப்படும். அவைகளாவன இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகை நிலை, பொறை நிலை, நினைதல், சமாதி என்பனவாகும். இவ்வெட்டு நிலைகளையும் குணங்குடியார் ஆறுநிலைகளில் அமைத்துள்ளார். ஆசனம் பற்றிப் பாடவில்லை. இயமம், நியமம் ஆகிய இரண்டினையும் நியமம் என்றார். வளி, தொகை, பொறை, நினைதல், சமாதி ஆகிய ஐந்தினையும் அவ்வாறே பாடியுள்ளார். சூபிச நோக்கும் போக்கில் குருவருள், தவம், துறவின் நிலை, காட்சி நிலை என இணைத்துள்ளார்.

## இரத்தின சுருக்கத் தலைப்புகள்

### குருவருள் நிலை

மனத்தைத்தழுவித் தற்காத்துச் சீராடச் செல்வப்பால் கொடுத்துப்
படுக்கவைக்க வரவேண்டும்.
மனமிடையாம லெண்ணாமற் பதைத்திடாது மனமுவந்த
வருஷிக்க வரவேண்டும்.
மனந்தானாகச் சகாவென்ற நாடோறும் நகைத்திடாது தொழும்பு
கொண்ட துரையே வரவேண்டும்.
மனமிடையா தின்ப முறைந்திட ஓய்ந்திடாது குன்று
குகையருள வரவேண்டும்.
மனத்தில் மார்க்க வகை வாழ்வித்துச் சுடர்சூக்ஷ்மமளித்து அகமுவந்
தாதரித்தருள வரவேண்டும்.
மனத்தினியற்கை யெந்நாளும் வாய்த்திட மாறாமற் போதுமெனப்
பொங்கவர வேண்டும்.
மனம்முன்னின்று முத்தமிடத் தேசோன்மய சின்மயம்
அடிமைகொண்டாடி நின்றருள வரவேண்டும்.
மனத்தை யிரட்சித்துத் தினந்தினங் கடாக்ஷித்துக் கதிதந்து தூக்கித்
தொழுதிட வரவேண்டும்.
மனங்கைகாட்டித் தகுந்த சதாநந்த வறிவொன்று
அறிந்திட வரவேண்டும்.
மனக்கலிதீர்த்துக் கவிகையிட வாட்கொண்டறிந்து முறையாக
மூர்த்திகரமருள வரவேண்டும்?

### தவ நிலை

மனம் போதித்துப் போதுமெனக் கறந்து கைகொடுத்துப் பந்தாடப்
பரப்பி வரவேண்டும்.
மழைப் பாழின் முச்சுடர் சேவிக்கத் திறம்படத் தத்துவஞ்
சலியாமலருள வரவேண்டும்.
மனச்சித்திதந்து சித்தம் வைத்துப் பறந்தோடப்பண்ணி நடனமிட
நழுவிடாதருள வரவேண்டும்.
இயல்பிருந்து மெலிந்து மெய்ஞ்ஞானஞ் சிற்சுகம்
சாகாது செய்திட வரவேண்டும்.
மனத்தைக் குவித்துக் கொடுங்கைதந் தருகணைத்து அவல
மாகாமற்பார்த்துப் பாதமருள வரவேண்டும்.
மனத்தொழும்பு துலங்கிக் கசப்பாகக் கழன்றிட வெல்லா
மெண்ணாமல் வரவேண்டும்.

மனம் புகழ்ந்திட பொருள் தந்து நிராகரித்து நெஞ்சுற
வேதாந்தமிருந்திட வரவேண்டும்.
மனத்தைக் கரையேற்றிக் கைக்கொண்டு சமூகந்தன் மயம்
போனின்ற பூரணாஅருள வரவேண்டும்.
மனந்தனைக் கொண்டு தாற்பரியம் பாய்ந்து பருவமென்று
தொலைந்து தொடக்கமற வரவேண்டும்.
மனதுக்குச் செல்வந்திறந்து முகுர்த்த முடிசூட்டி ஜெயந்தந்து
ஜெயமாக வரவேண்டும்.

## துறவின் நிலை

மனங்களைக்கண் டாண்டகல வொதுக்கியுறைந்திட
வரவேண்டும்.
மனந்தீய்ந்து சேர்ந்து பக்குவம் பத்தியக்காடுறை
கனல் மூட்ட வரவேண்டும்.
மனத்தின் வேர்பிடுங்கி நலம்பெற நாளுமஞ்ஞானத்தீ நீற
சிந்தித்திட வரவேண்டும்.
மனம் நிலையாநிறுத்திப் பாழாகப்பருவம்
அறைந்தானந்தமருள வரவேண்டும்.
மனமெய்தி யெண்ணம் மண்ணாக மடியாமல் தள்ளென்று
தள்ளாது வரவேண்டும்.
மனத்தின் வல்லபம் வஞ்சமற வுட் குளிர வூடாடிப்
போகாமற் போக வரவேண்டும்.
மனஞ்சலியாது தள்ளாதுட்குளிர்ந் தொட்டாது நேயம் வைத்து
நில்லாது வரவேண்டும்.
மனம்போகாது போகவென்றெண்ண வெளிதிற்கைப் பிடித்துக்
காப்பாற்றியருள வரவேண்டும்.
மனம்பொதும்பூசி வியாபியாது வீழ்ந்தெடுத்து
ஈடேற வரவேண்டும்.
மனத்தைப்பார்த்துப் பதமளித்துக் கலிதீர்த்துக் கடாக்ஷித்துப்
பொருள் தந்து பொன்னடியருள வரவேண்டும்.

## நியம நிலை

மனத்தைப்பார்த்துப் பலனினையாம னில்லாமல் அணைத்
தன்புகூர்ந்தருள வரவேண்டும்.
மனத்தைக் கடாக்ஷித்துக் கரங்கொடுத்தணைத் தடுக்கவைத்துக்
குறைதீர்த்துக் குணமேற்ற வரவேண்டும்.
மனங்கதறுதற்குங் கலுழுதற்கு மாறாது மாதவமே நெஞ்சிடையாம
லேற்க வரவேண்டும்.

மனமுய்ய நிஷ்டை மோக்கமுதிர்ந்துகந்துங்
கருணை கூர வரவேண்டும்.
மனங்கொள்ளாமற் கொள்ளிவைத் திதயமலர்ந்து சதாநந்தக்
காட்சிக்கண்ணே யருளவரவேண்டும்.
மனத்தின் சமர்த்துச்சார்ந்திட வழிவிட்டு மண்ணா குருவே
குறைதீர வரவேண்டும்.
மனங்கருதாது கைச்சரச நையாது நம்பிக் கிருபை
கேட்குமுன் வரவேண்டும்.
மனநின்று நீந்தாது நாட்டநாடாமற் கட்டவிழக்
காடுறைய வரவேண்டும்.
மனத்திற்குலாவாக் கொள்ளா வக்கரை ஆளாகச் சிறப்புச்
சீராட வரவேண்டும்.
மனமேகி யெட்டுதற்கு மனமுவந்து மருவி
ஓராதுரை செய வரவேண்டும்.

## வளி நிலை

மனம் விவரித்து வெட்டிவிட்டேன் காலினால் இருள்தீரப்
பண்புதந்து பறந்தாட வரவேண்டும்.
மனப்பசுவைப் படுக்கவைத்துப் பண்பாகக் கட்டுதற்கும்
கருணைவைத்து மேன்மேலும் வெருளாமல் வரவேண்டும்.
மனமெட்டொன்றை யேறாமல் வட்டமுறை
வைத்தாட்டி யடக்கி வரவேண்டும்.
மனமனை யுறைந்திடற் குச்சரித்துமாட்டிவைத்தடைத்துச்
சார்ந்திடற்குச் சற்றேனும் வரவேண்டும்.
மனமுன்னேற மூட்டிவிளையாட வீடுபுக
ஏற்றியேகாம லருள வரவேண்டும்.
மனமிடையாம லென்னை யேற்குமாளாக அயர்ந்து நடனமிட
நயனமிட வரவேண்டும்.
மனத்திற்குக் கொடுத்துக் கொளுத்தாமலூட்டி உட்புகத்
தயைபுரிந்து சார்பொன்ற வரவேண்டும்.
மனமுளவுகாட்டிக் கட்டியொட்டி லொத்தூதத்
தேயாமற் றிறப்பட வரவேண்டும்.
மனத்தைக் காட்டிக் காப்பாற்றிப் பீறாமற் பெலப்பாடு
நெருங்க நேரிட வரவேண்டும்.
மனந்துள்ளச் சுற்றக்கட்டிக் காத்துக்கூட்டிக்
கொடிபோட வரவேண்டும்.

## தொகை நிலை

மனமிணக்கியேற்றி யடங்கியடைந்த
சார்ந்தொன்றாக வரவேண்டும்.
மனமுழங்கமூட்டி மேலேற்றி மேலுமெற்குச் சந்தானஞ் சதாநிட்டை
சார்ந்திட வரவேண்டும்.
மனத்தைத் திறந்து திறவாமல் கட்டிக்கலிரென்ன ஆட்டி
யாளாக்கியருள வரவேண்டும்.
மனந் தம்பிக்கத் தம்பனம் பஞ்சாகப் பாழ்தந்து கருணைக்
கதியளிக்க வரவேண்டும்.
மனத்தகயானாகச் சுத்திசெயச்சொக்கிவிட மாறிட
வற்றாறருள வரவேண்டும்.
மனம் வரம் வசியமடர்ந்தடங்கிச் சோர்ந்து
சுருண்டிட வரவேண்டும்.
மனங்குதித்துக் கூத்தாடக் கிட்டுதற்குக் கிருபை
புகுந் தெப்போது மருள வரவேண்டும்.
மனத்தின் தாரணை தம்பிக்கக் கசிந்துகருக்கிப்
பதவிபால் தரவர வேண்டும்.
மனம் வெல்லுதல் விலாசஞ்சுமாறுபடச் சூக்ஷங் கொள்ளாது
குலைந்திட வரவேண்டும்.
மனமதுகொள்ள வாநந்தங் கடைத்தேறக் கட்டி நான்புகற்கு நயந்து
தந்து வரவேண்டும்.

## பொறை நிலை

மனங் கனலை மூட்டிவைத்து முன்னேற்றிச் சீர்பாததீக்ஷை
வைத்துச் சரணமிடச் சரணமிட வரவேண்டும்.
மனந்தனைச் சமர்ப்பொருதக் குதித்தேறக் கொடிபோட வாடம்பர
மாட்ட வரவேண்டும்.
மனத்திற்குச் சாயுச்யஞ்சாதித்துக் கைக்களித்துக் காட்டிப்
போதித்துப் பொருந்தி வைத்தருள வரவேண்டும்.
மனச்சூதுசுருண்டு போதனை போகங் காதல்
கட்டவிழ வரவேண்டும்.
மனஞ்சுத்திசெயத் துலங்க நின்றிலங்க விறைஞ்சவீட்டில் விட்டு
விளக்குவைக்க வரவேண்டும்.
மனத்தைப் பிடித்துப்பிரானே தியங்காமற் சித்திக்க விழித்
திடையறாது வரவேண்டும்.
மனத்தைக் கனாவென விணக்கிப் பிரிந்து பேரின்பஞ் சிந்தாது
தேவனே யருள்புரிய வரவேண்டும்.

மனங்கடாட்சித்துக் கரைந்திடப் பதித்துப் பக்குவ
மேகாந்த மேறிட வரவேண்டும்.
மனமண்ணலே யாநந்தஞ் சோதிசுடரிருந்திட எந்நாளு
மருள வரவேண்டும்.
மனத்திற் கடாக்ஷங்கதி நிறைந்திட நிறுத்தி முதிர்ந்து
முறையாக வரவேண்டும்.

காட்சி நிலை

மனமணைந் தர்ச்சிக்கப்பணிந்து வசம் பண்ணிச் சென்றாடச்
சிறியவெற்கருள வரவேண்டும்.
மனம்பதம் பணிந்து சேவிக்கச் சிறப்பிடு சரண்புகத்
தடையற வரவேண்டும்.
மனமுயற்சி மோகங்கடத்திக் காட்டி சூக்ஷ்ம வகை
தொகையாக வரவேண்டும்.
மனத்தைக் கட்டிக்கண்ணைத்தயைபுரிந்து பிரசாதமொன்று
பார்த்துப் பரிகரித்தருள வரவேண்டும்.
மனமுத்த முத்திரைத் தண்ணீரைத் தள்ளாமற்றெளித்துச்
சேவிக்க வரவேண்டும்.
மனத்தின் பேரின்பம் பெண்ணாசை ஆதரிப்பு நாசமாய்
நானாக வரவேண்டும்.
மனத்தை யாசையபயந் தடாரித்துத் தாடந்து பாசம் வைத்துப்
பழக்கிவரவேண்டும்.
மனங்களித்துக் கனாவென்று நானாண நற்றவந் தூணாக்கத்
துறையருள வரவேண்டும்.
மனத்தை யடிமைகொண் டனுபூதி முழுத்திடிமூடித் தாண்டித்
தந்தருள வரவேண்டும்.
மனத்திற்குச் சுகந்துணை தழுவித்தரித்து ஆட்கொண்டு
ஆளாக்கியருள வரவேண்டும்.

தியான நிலை

மனமோகமதை நாளும் நாட்டிவைத்து விழாமல்வீழ்ந்துந்
தேனோமுகச் சிறப்பிட வரவேண்டும்.
மனம் பெரும்பாதை யொன்றில் நிர்த்தூளி பண்ணிக்கடந்து
கையூன்றி யொன்றுக்கு ஒன்றாக வரவேண்டும்.
மனமுட்புக வொடுங்கிடத் தூங்கிடச் சோபிக்கத் தகைதுர்ந்திடத்
தேற்றிட வரவேண்டும்.
மனமக்கங்கென்றுள்ளடங்கிப் பக்குவம் பண்ணி அமிர்தபானந்
திருத்தித் தீரமருள வரவேண்டும்.

மனம் வழிமருவச் சமர்செய்யத் தம்பனம் அடைத்துச்
சரணடைய வரவேண்டும்.
மனத்தீரஞ் சின்மயமெய்தாம லென்னுள் சுடர்சொந்தத்
தொடரருள வரவேண்டும்.
மனத்திட்டம் வைத்தென்னை யெற்காராய்ந்து அறிவதற்குச்
சித்தம் வைத்துச் செய்யு நல்லருள் புரியவர வேண்டும்.
மனத்தைத்தூக்கித் துணிந்திருந்திருக்கும் நிலையம்
நெக்குருக வரவேண்டும்.
மனக்கருத்துக் கற்பித்தொழிந் தொதுங்கி நடந்து
நானென வரவேண்டும்.
மனத்தி னடனஞ் சந்நிதியிற் சென்று திறந்து வசம்
வளர்ந்தேற வரவேண்டும்.

## சமாதி நிலை

மனங்கூடுகொள்ளாம லடங்கியஞ்சி ஒடுங்கி
யொழிதற்கு வரவேண்டும்.
மனந்திகழ்ந்து தீயிற்சரிப்படச் சமத்தமும்
ஆட்கொண்டடக்கி வரவேண்டும்.
மனந்தின்றத்துவந் தான்சாவ நான்சாவ நாள்வருமுன் சித்தி
சீக்கிரமருள வரவேண்டும்.
மனங்கரைதத்தக்கவிந்துவிளையாட வீடுபுக
எண்ணமின்புற வரவேண்டும்.
மனவெண்ண மிரங்கித் தீட்சைசெய்வித்
தொடுங்கியுறைந்திட வரவேண்டும்.
மனமுனையே தொழ வுண்ணின்று மறந்திடாது வாய்த்திட நானாக
நானறிய வரவேண்டும்.
மனமடர்ந்து பகர்ந்தீ தென்றிருந்திட மதமண்ணாக வரவேண்டும்.
மனமைய மணைகால் பாயக்காத்துப் பாரிசப்
பம்பரமாட வரவேண்டும்.
மனமன்பறிவு வீறுவீடுபதம் பரமடைய வரவேண்டும்.
மனம்போகாமற் புணருதற்குச் செழுஞ்சாரல் தினந்தந்து நான்சார
நானாக வரவேண்டும்.

அகத்தீசர் சதகத்தில் நூறுபாடல்களின், ஒவ்வொரு பாடலிலும், ஒவ்வொரு சுருக்க ரசத்தினைப் பிழிவாகத் தந்துள்ளதைக் கண்டோம். அகத்தீசர் சதகத்தில் சில பாடல்களின் நயங்காண்போம்.

*1)* தாய்போல இன்பந் தந்து அருள்புரியவும், தாய், தந்தையாக இருந்து என்னைப் பாதுகாக்கவும், குழந்தை என இரங்கி என்பால் பசுவின் கன்றுபோல அருள்புரியவும், மழலை மொழிபேசும் சிறு குழந்தை போல நின்னைக் கொஞ்சிச் செல்வமிட அருள்புரியவும், மடை திறந்த வெள்ளமென அறிவுப்பால் கொடுத்தருள்புரியவும், கெட்ட வாயுக்களைக் கட்டவும் தவராஜசிங்கம் குணங்குடி வாழும் அகத்தீசனே! மௌன தேசிகனே! எனது அருளே! நீ வரவேண்டும் என அழைப்பதைக் கேட்போம்.

தாயனைய இன்பந்தனைத் தந்து தந்துகை
　　தழுவி நின்றருள் புரியவுந்
தந்தை தாயுந்தானே யாகவு மிருந்தெனைத்
　　தற்காத்து னருள்புரியவுஞ்
சேயென்றிரங்கியணை காலியின் கன்றெனச்
　　சீராட அருள்புரியவும்
செங்கீரையாடு சிறுமதலை போற் கொஞ்சி நான்
　　செல்வமிட அருள்புரியவும்
பாயுமடைகால் கண்டு கரை புரள வருமதிப்
　　பால் கொடுத்தருள் புரியவும்
பக்குவத்தோடு மவுனத்தொட்டிலுக்குட்
　　படுக்க வைத்தருள் புரியவும்
வாயுவைக் கட்டவுந் தவராஜ சிங்கமே
　　வரவேண்டும் என்றன் அருகே
மாகுணங்குடி வாழு என்ன கத்தீசனே
　　மவுனதேசிக நாதனே　　　　(குருவருள் நிலை -*1*)

எனக்குருவருள் நிலையில் பாடுகிறார்.

*2)* அடைக்கலம் என்று அடைந்த என் தொழுகையினைக் கொண்டு அருள்புரியவும், பிரம்மத்துள் பரவி நிற்பதோர் இறைவனின் உட்பொருளை அறிய அருள்புரியவும், ஐந்து வண்ணமாகிய பரஞ்சுடரின் மீது பக்தி பாய்வதற்கு அருள்புரியவும், தன் உந்துதலினால் பரவும்படியான தன்மைக்கு அருள்புரியவும், ஒளி கொஞ்சவும் நெஞ்சத்தில் வஞ்சகம் அழியவும் ஆக இவற்றிற்கு அருள்புரியவும், துக்க வலையாகிய பெண்கள் வலையில் அகப்படாமல் இருக்க அருள்புரியவும் தவராஜ சிங்கமே! அகத்தீசனே! மௌன தேசிக நாதனே! என்றன் அருகே அமர வரவேண்டும்.

என்ற கருத்தமைந்த

தஞ்சமே தஞ்சமென்றடையும் என் அஞ்சலி
தனைக் கொண்டு னருள் புரியவுந்
தற்பரஞ் சிற்பரத்துட் பரவி நிற்பதோர்
தாற்பரிய மருள் புரியவும்
பஞ்சவர்ணப் பரஞ்சோதி கிளரிப்பத்தி
பாய்ந்திடற் கருள் புரியவும்
பன்மயத்துட் பரவு தன் மயத்துட்பரவு
பருவமொன்றருள் புரியவுந்
துஞ்சுமொளி கொஞ்சவும் நெஞ்சமும் வஞ்சத்
தொலைத்திடற் கருள் புரியவும்
துக்கவலை வீசுமுலை மின்னார் களாசைத்
தொடக்கறற் கருள் புரியவும்
வஞ்சியரும் எஞ்சவுந்தவராஜ சிங்கமே
வரவேண்டும் என்றன் அருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுன தேசிக நாதனே (தவநிலை -10)

எனப் பாடியுள்ளார்.

வெட்ட வெளியே ஆய்ந்ததுவும், அதில் பாய்ந்ததுவும் விவரித்து உன் அருள் புரியவும், முன் விட்ட குறை எல்லாம் என் அருகே வர அவற்றை வெட்டி விட அருள் புரியவும், எட்டொன்றும் எட்டவும், ஈராறு (12 சரங்கள்) கட்டவும் எண்ணமாகிய வாயுவில் இருக்க அருள்புரியவும், இரவி சந்திரனாகவும் இரவு பகலாகவும் விளங்கும்படி அருள் புரியவும், காற்றிலே பறந்தாடுகின்ற சூத்திரம் போல அனைத்தையும் ஆட்டி வைக்கின்ற பண்பு தந்து அருள்புரியவும், அண்டப்பரப்பெல்லாம் யான் பறந்தாட அருள் புரியவும், தவராஜ சிங்கமே! அகத்தீசனே! மவுன தேசிக நாதனே! என்றன் அருகே வரவேண்டும் எனுங்கருத்தை

வெட்டவெளி யாய்ந்ததும் விட்டு வெளி பாய்ந்ததும்
விவரித்துனருள் புரியவும்
விட்டகுறை தொட்டகுறையெட்டியென் கிட்டவர
வெட்டிவிட்டருள் புரியவும்
எட்டொன்று மெட்டவும் ஈராறு கட்டவும்
எண் காலினருள் புரியவும்
இரவிமதியேகவும் இரவும் பகலாகவும்
இருள் தீர அருள் புரியவும்

பட்ட மது காற்றாற் பறந்தாடு சூத்திரப்
பண்பு தந்தருள் புரியவும்
பாராதி அண்டப் பரப்பெல்லாம் யானும்
பறந்தாட அருள்புரியவும்
வட்டந் துதிக்கு மெய்த்தவராஜ சிங்கமே
வரவேண்டும் என்றனருகே
மாகுணங்குடி வாழு மென்ன கத்தீசனே
மவுன தேசிக நாதனே (வளி நிலை - *41*)

எனப்பாடுகிறார்.

வளி நிலை

மனத்திற்குக் கொடுத்துக் கொளுத்தாமலூட்டி உட்புகத் தயை புரிந்து சார்பொன்ற வரவேண்டும் வெள்ளம் வருமுன் அணையிட்டுத் தடுத்து நல்லருள் புரிக!

கும்பித்துப் பிராண வாயுவைச் சமப்படுத்தி, மூலாக்கினியானது கொளுத்தாமல் அருள் புரிக! மனத்திற்குக் கொடுத்துக் கொளுத்தாமல் ஊட்டி உட்புக அன்பு கூர்ந்து சார்பொன்ற வரவேண்டும். உள்ளே முளைத்தெழுந்த சந்திரமண்டலத்து அமிர்தத்தினை ஊட்டிவைத்து அருள்புரியவும், ஓடுமோர் வட்டமும் ஓங்கார சாரமும் உட்புகுதற்கு அருள்க! கீழே விழாதபடி என்னைத் தாங்கி அடிமை கொள்க! தாயென அன்புடன் அருள்புரிக. தற்காத்து இரட்சித்து உனது சார்பு ஒன்றுதற்கு அருள்புரிக! தவராஜ சிங்கமே! அகத்தீசனே! மவுன தேசிகநாதனே! எனது அருகே வரவேண்டும்! எனுங்கருத்தமைந்த பாடல் :

கொள்ளாது வெள்ளம்வரும் முன்னணை கோலிக்
கொடுத்து நல்லருள்பு ரியவும்
கும்பத்தி ரேசித்த லொடுகொல்ல னுலையிற்
கொளுத்தாம லருள்பு ரியவும்
உள்ளே முளைத்தெழுந்துயர் பனையில் ஊறுகள்
ஊட்டி வைத்தருள்பு ரியவும்
ஓடுமோர் கடகமும் ஓங்கார சாரமும்
உட்புகற்கருள் புரியவும்
தள்ளாத படியடிமை பொள்ளவுந்த தாயெனத்
தயை புரிந்தருள் புரியவும்
தானென்று நின்றுதற் காத்திரட்சித்துனது
சார்பொன்ற வருள்புரியவும்

வள்ளலாய் நின்றுமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மௌனதே சிகநா தனே - 47

## தொகை நிலை

மனத்தின் தாரணை தம்பிக்கக் கசிந்துகருக்கிப் பதவிப் பால் தரவேண்டும் எனும் தலைப்பில் ஒரு பாடல் கருத்து

சோற்றாலாகிய பிண்டமாகிய இந்த உடலைத் தூய்மை செய்வதற்கு அருள்புரிக!

என் சூக்கும உடலானது காரண உடலோடும், மகாகாரண உடலோடு நன்கு விளங்குவதற்கு அருள்புரிக! என் ஆன்ம வடிவு என் முகத்தெதிர் நின்று பொலிந்து விளங்கும்படி அருள்புரிக!

இறையாகிய உன்னைத் தொழுது வணங்குவதற்கு அருள்புரிக! மற்றெவரும் காணமுடியாத வேதாந்த வீட்டில் என்னை நெருங்க அருள்புரிக! மாயையாகிய இருள் நீக்கி, முச்சுடர் மணிவிளக்கை அருள்க! எவரும் மாற்றுக் கருத்துக் கொள்ளாமல் போற்றும்படியான தவராஜ சிங்கமே! குணங்குடி வாழும் என் அகத்தீசனே! மவுன தேசிக நாதனே! அருள்க! எனப் பாடும் பாடல் இதோ :

தசநாடி யும்மூல நாடியு ளொடுங்குநல்
தாரணைக ளருள்பு ரியவுந்
தாதுமுந் நான்குமிரு நான்காக வொருநான்கு
தம்பிக்க அருள்பு ரியவுங்
கசியாது சோம வட்டத்துறையு மமிர்தங்
கசிந்திடற் கருள்புரியவுங்
கனலினால் தத்துவக் குப்பையைச் சுட்டுக்
கருக்கிவுட அருள்பு ரியவும்
பசிதாக மற்றவமு தூற்றவுஞ் சாயுச்சிய
பதவியொன் றருள்பு ரியவும்
பசுவினைப் பதியினிற் கட்டவுங் கற்பகப்
பால்தரற் கருள்பு ரியவும்
வசவிர்த்தி யாகமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே (58)

காட்சி நிலை

"மனத்தையாசைய பயத் தடாரித்துத் தாடந்து பாசம் வைத்து பழக்கி வரவேண்டும்" எனும் தலைப்பில் ஒரு பாடல் கருத்தாவது :

அம்பிகை தன்னைப் பூசை செய்து, உய்யும் ஆசை ஒன்றினைப் பெற அருள்புரிக! அறங்கள்பல செய்யும் மனஉறுதி கொள்ளவும், உன்னுடைய அபயம் பெற அருள்புரிக! தாய் இறந்த பிள்ளை என எண்ணிக் கைவிட்டு விடாமல் கண்டித்து அருள்புரிக! தடையின்றி ஒளிரும் உன் மெய்த்தாள்கள் தந்து அருள்புரிக!

பாசக்கயிற்றை வீசும் எமனுக்கு ஆட்படாமல் வைத்து, என் மீது பாசம் கொண்டு, அருள்புரியவும், ஐந்தெழுத்தை (அல்லாஹூ) துஞ்சாமல் முறையாகச் சொல்லப் பழக்கி வைத்து அருள்புரிக. (உட்கொள்ளும் பூரகத்தில் அல்லா என்றும், வெளியிடும் இரேசகத்தில் ஹூ என்றும் கூறுதல் - சரநூல் தத்துவம்) தவராச சிங்கமே! குணங்குடி வாழும் என் அகத்தீசனே! மவுனதேசிக நாதனே! என் அருகே வருக எனுங்கருத்தமைந்த பாடல்:

ஆசரித் தம்பிகை தனைப்பூசை செய்துய்யும்
ஆசையொன் றருள்பு ரியவும்
அறமியற் றவுமனத் திறமியற் றவுமெனக்கு
அபயநின் றருள்பு ரியவும்
தாய்செத்த பிள்ளையென ஏசற் றிராமல்
தடாரித்து னருள்பு ரியவும்
தடையினில் தடைபடா நின்றொளிரு மெய்த்திருத்
தாள்தந்து னருள்பு ரியவும்
பாசத்தை வீசும்எம னுக்குட் படாதுநின்
பாசம்வைத் தருள்பு ரியவும்
பஞ்சாட் சரத்தையுந் துஞ்சாச் சரத்தொடு
பழக்கிவைத் தருள்பு ரியவும்
வாசற்க டந்துமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. - 77

தியான நிலை

"மனத்தைத் தூக்கித் துணிந்திருக்கும் நிலையும் நெக்குருக வரவேண்டும்" எனும் தலைப்பில் ஒரு பாடல் கருத்து இதோ :

நீங்காத பவக்கடலைத் தொலைத்து, கரையேற்ற அருள்புரிக! துன்பமான இந்த பூவுலகை வெல்ல துறவு நிலையை ஏற்க அருள்புரிக! இலைகளும் சருகுகளும் தீய்ந்து போகாமல் தழைக்க அருள்புரிக! இடகலை, பிங்கலை ஆகிய இருசரக் கலைகளை ஊடுருவி சுழிமுனைக்கு அப்பால் இருக்க அருள்புரிக! தடுமாறுகின்ற இதயத்தை நிலைத்திருக்க அருள்புரிக! நிற்கும் நிலையாகிய உலக மாயையில் சிக்காது நிற்க, உள்ளம் நெக்குருக அருள்புரிக! அறியாமை எல்லாம் அழிக்கவும், தவராஜ சிங்கமே! குணங்குடி வாழும் என் அகத்தீசனே! மவுன தேசிக நாதனே! என்றன் அருகே வரவேண்டும்.

தொலையாப் பவக்கடல் தொலைத்துமக் கரையிலே
　　தூக்கிவிட் டருள்பு ரியவுந்
தொல்லைதரு தொல்லுலகை வெல்லவுந் துறவில்
　　துணிந்திடற் கருள்பு ரியவும்
இலையும் புலர்ந்தசரு குங்கும்பு யெரியற்று
　　இருந்திடற் கருள்பு ரியவும்
இருகலையி னூடுருவி முக்கலைக் கப்பால்
　　இருக்குமுன் னருள்பு ரியவும்
நிலையற்ற இதயத்தை நிலையத் திருத்துநன்
　　நிலையமொன் றருள்பு ரியவும்
நிற்குநிலை சொக்கியா னிற்காது நிற்கவும்
　　நெக்குருக அருள்புரியவும்
மலைவெலாந் தீர்க்கவுந் தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுனதே சிகநா தனே - 88

## சமாதி நிலை

“மனத்தின் தத்துவம் தான் சாவ நான் சாவ தான் வருமுன் சித்தி சீக்கிரம் அருளவேண்டும்” எனும் தலைப்பில் இதோ ஒரு பாடல் கருத்து:

‘தான்’ என்னும் செருக்கு அழிந்து உலக முழுதும் ஆள ஒரு தத்துவம் ஒன்றினை எனக்கருள்! ‘தான்’ என்னும் செருக்கு அழிய மருந்து உண்பார் அனைவரிடத்தும் யான் தான் என்பன அழிதற்கு அருள்புரிக! ‘நான்’ சாவதற்கு முன் ‘நான்’ என்னும் செருக்கு அழிய

விரும்பினேன். ஆதலின் நான் சாவதற்கு முன் நான் என்னும் ஆணவம் அழிதற்கு அருள்புரிக! இறுதிநாள் வருமுன் 'நான்' என்னும் செருக்கும், இறப்பு எனும் இறுதிநாள் வந்த பின் நான் என்னும் செருக்கு, இறப்பு ஆகிய இரண்டில் இறுதிநாள் வருவதற்கு முன் 'நான்' என்னும் செருக்கு ஒழிதற்கு அருள்புரிக! தீய்ந்து சாம்பலாகிப் போனாலும் 'நான்', நான் ஆன சித்தி ஆவதற்கு அருள்புரிக.

தேகநிலையைக் காணாது திருவருள் புரிந்து விரைந்து அருள்புரிக.

விருப்பமே வடிவான தவராஜ சிங்கமே! குணங்குடி வாழும் என் அகத்தீசனே! மவுன தேசிக நாதனே! என்அருகே வரவேண்டும் என்பதனை,

தான்செத் திருந்துலக முழுதுமர சாளுமோர்
தத்துவ மருள்பு ரியவுந்
தான்சாக வும்மருந்து உண்பாரி யாரியான்
தான்சாக அருள்பு ரியவும்
நான்சாமுன் நான்சாக நாடினேன் நான்சாமுன்
நான்சாக அருள்பு ரியவும்
நாள்வருமுன் நான்சாக நாள்வந்து நான்சாக
நாள்வருமு னருள்பு ரியவுந்
தீஞ்சஉதிரு பிடிசாம்பாலகவுந் தானான
சித்தியெற் கருள் புரியவுந்
தேகநிலை யல்லவே திருவரு ளிரங்கிமாச்
சீக்கிர மருள்பு ரியவும்
வாஞ்சனை யானமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே -93

என 'நான்' அழிந்து "அவனில்"வாழ விழைகிறார்.

இங்ஙனமாக அகத்தீசன் சதகம் நூறு பாடல்களால், நூறு தலைப்புத் தொடர்களில் குணங்குடியார் அகத்தீசரை அருகில் வரவேண்டுவதாக அழைத்துப் பாடுவதாகும்.

## 5. மகமூது நபி அவர்களைச் சுகானுபவமுறத் துதித்தல்

### நபிகள் நாயகம் -உருவகம்

குணங்குடி மஸ்தான் பாடல்களின் நடுநாயகமாக இலங்குவது. இது அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தமாக 112 சீர்கள் கொண்ட நீண்ட நெடிய உருவாக அமைந்தது. இப்பாடலில் 50க்கு மேற்பட்ட உருவகங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்து இனிமை அளிப்பதாகும். இது உருவக ஓவியச் சாலை எனில் மிகையன்று. இது தத்துவ ஞானக் களஞ்சியமாக மிளிருகின்றது. மனத்திற்கும் அறிவிற்கும் உயிருக்கும் நல்விருந்தாக இனிது அமைகின்றது. நபிகள் நாயகத்தின் ஞான வாழ்க்கையை ஒரு வேளாண்மை வாழ்க்கையாக உருவகித்துள்ளார். அவ்வேளாண்மை வாழ்க்கைக்குரிய சாதனங்களாக எல்லாத் தத்துவப் பொருள்களையும் இயைபு உருவகஞ் செய்து வருணிக்கிறார் குணங்குடியார்.

கருத்துச் சுருக்கம் பின்வருமாறு காண்க :

"நபிகள் நாயகம் ஆகிய விவசாயி, மனமாகிய நிலத்தில் அடர்த்தியாக இருண்டு வளர்ந்து நின்ற பந்தபாசங்களை வெட்ட, வெட்ட தளிர்விட்டுப் படர்ந்து வரும். அகப்பற்றுக்களாகிய காட்டில் வினை என்ற பெருமரங்களை வெட்டி, கோபமாகிய முட்புதர்களை வேரோடு பிடுங்கி, கருணை எனும் வீர கண்டாமணி அணிந்து,. துணிவு என்னும் வீரவாள் ஏந்தி, அகங்காரமாகிய வேங்கைப் புலியை வீழ்த்தி, ஆசைகளாகிய விலங்குகளை அடித்து ஓட்டி, மாயை என்னும் மலைப் பாம்பினை விவேகம் என்னும் கோடரியால் பிளந்து, கருவி கரணங்கள் என்னும் வேர்களை ஆய்வு என்னும் மண்வெட்டி கொண்டு பிடுங்கித் தவக்கனலால் சுட்டெரித்துச் சுத்தமாக்கியப் பின்பு, அகந்தை என்னும் கற்பாறையை சுழிமுனை எனும் உளியால் வெட்டி எறிந்து, இட, பிங்கலை வண்டியில் ஏற்றி, அந்த மனமென்னும் நிலத்தை உழுது பயிர் செய்வதற்குரிய கார்காலம் வருவதை எதிர்பார்த்து நிற்கின்றார்".

இந்நிலையில் கலிமா என்னும் பிரணவம், கருணை முகில் கொண்டு ஆனந்தம் என்னும் மழையைப் பொழிகின்றது. நாயகம் ஆகிய விவசாயி, காலத்தைப் பயன்படுத்திக்கொண்டு நெஞ்சம் எனும் நிலத்தை தாமதிக்காமல் அறிவாகிய கலப்பையிலே இன்பதுன்பங்களாகிய மாடுகளால் மிதித்துத் தூளாக்கிச் சமன் செய்து துறவறம் எனும் கிடைமறுத்து சமவெளி ஆக்கி நான்கு

வேதங்களை நான்கு வரப்புகளாக்கி சித்தாகிய வித்துக்களை விதைத்துப் பயிராக்கிப் பக்தி வைராக்கியமாகிய நீர் பாய்ச்சி வளர்த்து, 96 தத்துவங்களாகிய களைகளைப்பிடுங்கிப் பாதுகாத்து முக்தியாகிய விளைவுகளை ஆன்ம கோடிகளுக்கு ஆக்குகின்றார் நாயகம் எனும்கருத்தமைந்த பாடல் உருவகச் செய்யுளாகப் படிக்க படிக்க இனித்து, இன்பமூட்டி, மீண்டும், மீண்டும் படிக்கத் தூண்டி அறிவுபெறச் செய்கிறது.

## 6. தவமே பெற வேண்டு மெனல்

இத்தலைப்பில் பதினான்கு கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் காணப்படுகின்றன. பொன்னாசை, பெண்ணாசை, நிலையற்ற செல்வ ஆட்சி இவற்றை நீக்கின் குணங்குடி வாய்த்திடும் (1,2,3) என்கிறார்.

முதற்பாடலில், "வாழுங் காலத்தே அறஞ்செய்க " என்பதனை வற்புறுத்துகிறார்.

அதனை, 'ஓடி அலைந்து இவ்வையகம் முழுவதும் உழன்று உழன்றுத் தேடியெடுத்த திரவியத்'திலிருந்து, அச்செல்வம் இருக்கும்பொழுதே அறஞ்செய்க (1) என அறிவுறுத்துகிறார்.

பெண்ணாசைப் பேயிலிருந்தும், எண்ணாத பாவங்களி லிருந்தும் இப்பேருடம்பு மண்ணிலிருந்து மாய்வதற்கு முன் நல்ல தவங்களைச் செய்வாயாக (2) என்கிறார்.

நிலையற்ற செல்வத்தின் மாயத்திலிருந்து விடுபடு மனமே! அப்போழுதே குணங்குடி வாய்த்திடுமே (3) என்கிறார்.

"குணங்குடியார்" எனக் குறிப்பிடுவது ஒன்றினையே ஆகும்.

எல்லாப்படைப்பும் படைத்து அவைகளுக்குரிய இரணங்கள் (உணவுப்பொருட்கள் அனைத்தும்) கொடுத்து அல்லாஹ் ஒருவனே வாழவைக்கும் இறை. அவனன்றி வேறில்லை. ஆகவே, சொல்லாமற் சொல்லுஞ் சுருதி முடிவில் சொல் கடந்த வல்லவன். அத்தகு குணங்குடியானிடம் சென்று அவனுடன் வாழ்ந்திருப்போம் வாருங்கள்! என அழைக்கிறார்.

இந்த உலகத்தில் அழியாத வரம் பெற்றவர் யாருமில்லை. உனக்கு என்மேல் அன்பு ஏன் ஏற்பட்டது? என்று கேட்டு, பொய்யான வாழ்க்கையினை உடையவருக்கும் அற்பர்களுக்கும் குணங்குடியார் உறவு இல்லை (6) என்கிறார்.

உறவினர்கள் இருந்து என்ன? பெற்றோர் இருந்து என்ன? எந்த ஒரு சிறிய பலனுமில்லை. இது உண்மை. இறைத் தேட்டத்திலும் நாட்டத்திலும் அழிய நேரிடினும் வைத்த அடி பின்வாங்காது உறுதியாக இருந்தால் வெற்றிபெறலாம் குணங்குடி அருள்பெறலாம். (7) என்கிறார்.

எண்சாண் உயரத்தில் இருக்கும் பனையிலிருந்து பஞ்சாட்சரம் என்னும் பெரிய அமுதத்தினைப் பாய்ந்தெடுத்து, தஞ்சாவூர் ஆளும் அரசன் பாதம் (இறை தொழுதால்) பணிந்தால் குணங்குடி அருள் பெறலாம். (8) (உடல்பெற்ற ஊனிலிருந்து உயிர் உள்ளபோதே இறையமுதம் தேட/பெற வேண்டுகிறார்)

முற்றிய துறவுநெறியே குணங்குடி வழிசேர்க்கும் என்பதை உணர்த்துகிறார். (9)

யாருக்கோ வந்த விருந்து என்று கருதாமல் உனக்கே வந்த விருந்து என்பது போலக் குணங்குடியானை அடைக்கலம் புகுக (10) என்கிறார்.

"நாளைக்கு இருப்போம் என்று நம்பாதே" இன்றைக்கே குணங்குடியோடு இணைந்திரு, பிணைந்திரு. (12)

நாட்டம் குணங்குடி மீது, கால் ஓட்டம் அவன்பால் என்றிரு, இறை ஆட்டம் ஒன்றெனக் கண்டு இரு. அலிபு (அல்லாஹ்) என்ற ஒன்றான இறை என்றிரு. (13)

நாடு உண்டு, நகர் உண்டு, நல்லோர் உண்டு இறையுண்டு. எனக்குக் கையில் ஒடு உண்டு. பசித்தால் ஒரு கையளவு உணவு பெற்றுப் புசித்து 'அவன்' புகழ்பாடுவேன்! குணங்குடி வாழ்க! அதுவே பரமானந்தம் (14)

இவை "தவமே பெறவேண்டுமெனல்" தலைப்பின் கீழ் அமைந்த பாடல்கள் தரும் கருத்துக்களாக உள்ளன.

### மாண்புகழ் முகம்மது போற்றல்

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் மாண் புகழினை:

ஆதிமுகம்மது அருளா முகம்மது அருள் விரிந்த
சோதி முகம்மது தோற்றமுகம்மது தூயவுளத்
தோதுமுகம்மது என்றுண்மை கண்டாலிவ் வுலகினுக்கு
ஆதிமுகம்மதினோடு குணங்குடி வாய்த்திடுமே

(4) என்றும்

மூலம் முகம்மது முப்பால் முகம்மது மோனமுள்ள
பாலம் முகம்மது பக்தியுள்ளோர்களும் பாய்ந்தெடுக்கும்
மேலும் முகம்மது வேதாந்த மூலவிளக்குடைய
கோலம் முகம்மது குன்றாக் குணங்குடி கொண்டவர்க்கே

*(11)*

என்றும், 'குறைஷிக்குலக் கொழுந்தமை மகுமூதுநபி' 'வானாதி பூதமதிலுள்ள வள்ளல் றசூல் நபி'; 'வட்டமிடு முகில் கவிகை யுள்ள நபி'; 'வானமெல்லா மகிமையுள்ள நபி'; 'வல்லிருளை வெல்லுமொளியுள்ள நபி'; 'வடுவேதுமற்ற வடிவுள்ள நபி'; 'வானோர் வணங்குநெறி நபி' என்றும் பலவாறு புகழ்ந்தேத்தும் பாக்கள் படித்துணர்வதற்குரியவை.

எல்லா உயிர்களையும் படைத்து அவற்றிற்குரிய உணவினையும் கொடுத்து வாழவைக்கும் இறைத் தன்மையினையும் (5); கூறி இந்தப் பொய்யான வாழ்க்கையை நம்பாதே (6); உற்றார் இருந்தென்ன பெற்றவர்கள் இருந்தென்ன உனக்குதவும் இறையிடத்தில் உறுதியாயிரு (7); உடலில் உத்தமனைத் தேடு (8); முற்றிய துறவு நெறியில் வாழ் (9); நாளைக்கு என நம்பாதே. இன்று வாழ்; இன்றே தேடு நாட்டம் ஓட்டம் குணங்குடி வாய்க்கும் (10) என்றெல்லாம் பாடும் வரிகள் கருத்துப் பெட்டகம்.

## 7. குறையிரங்கி உரைத்தல்

இது 7 நேரிசை வெண்பாக்களால் ஆகியது. பொய், கள் நீக்குக; சுற்றம் பெற்றோர் என்றில்லாமல் எங்கும் நிறைந்த குணங்குடியணானைப் பற்று, "புருவநடுவில்" உணர்க, பெண்ணாசை நீக்கி உன்னாசையில் மனங்கரைய நின்னருள் பொழிக, நெடிய பனைபோலவும் நெற்கதிரைப் போலவும் பயனில்லாத படைத்த இந்த உடல் பயன்பெற மூலமந்திரமாகிய கைத்தடியால் அடித்து குணங்குடி சித்திக்க வை போன்ற கருத்துக்களை காணலாம். மெத்தத் துணி போர்த்தினால் மெத்தக் குளிர் உண்டாகும், குறைவாகத் துணி போர்ததினால் கொஞ்சமே குளிரும். துணியே போர்த்தவில்லை என்றால் குளிரே இல்லை. அதுபோலவே உள்ளமும். பற்றும் முற்றும் துறக்க வேண்டும். முற்றும் துறந்தால் உற்ற துன்பம் இல்லை. அப்பொழுதே குணங்குடி பெறமுடியும் என்ற கருத்தினை

மெத்தத் துணி போர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்
சற்று துணி போர்த்து வரச் சுற்று குளிர் - இற்ற துணி
இல்லைக் குளிருமிலை, இல்லை இது தானுளமே
செல்லக் குணங்குடியார் சீர்.

எனும் பாடல் பன்முறை கற்று அனுபவித்து அறிதற்குரியது. அனுபவ உரைகளன்றோ!

1. கள்ளுண்டு பேசும் அறிவற்றவர்கள் என்ன சொன்னாலும் உன் இதயத்தில் சிறிதளவும் சேராது. உள்ளத்தோடு பொருந்தாத அறிவற்ற மக்கள் எக்கேடு கெட்டாலும் குணங்குடியார்க்கு எந்தக் குறையுமில்லை.
2. உறவினர் அழாமல், உறவின் முறையார்கள் திட்டாமல் - பெற்றோர், உடன்பிறந்தார் எனப் பிதற்றாமல் - எவ்வகையாலும் அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருக்கும் பெருவெளியில் தங்கியிருக்கும் குணங்குடியானையே பற்றுக.
3. புருவ நடுவில் ஆடும் நடனத்தினை நாசியின் வாசியினால் கண்டுணர். குணங்குடியின்பால் சேர்வாய்.
4. பெண்ணாசையினால் மனங்கரையாது, உன் ஆசைகாட்டிக் குணங்குடிக்கு அருள்வாயாக!
5. 'விடம் உண்ணுவது போல' இறை அருள் பெற எண்ணாதே! அதனைப் புண்ணாக நினையாது முத்தனாகியப் பரம்பொருள் நம் உள்ளத்திலிருக்கிறது என அக்குணங்குடியானோடு எப்பொழுதும் ஒன்றியிரு.
6. என் அரசே! நெட்டைப் பனைபோல (இந்த உடல் எடுத்து)வும், நெற்பதரைப் போல (வீணாகவா படைத்தாய்). இந்த அறிவற்ற பனைபோன்ற உடலை உன் கைத்தடியாகிய ஞானத்தால் மோதினால் குணங்குடி அருள் சித்திக்கும்.

இங்ஙனமாக, குணங்குடியார் குறையிரங்கியுரைக்கின்றார்.

## 8. தவராஜ மகிமை சாற்றல்
## நாகூர் மீரா சாகிபு அவர்கள்மீது பாடியது

### இரட்டை ஆசிரிய விருத்தம்

வட இந்தியாவில் மாணிக்கப்பூரில் பிறந்து, இசுலாமியச் சுடரொளி பரப்பி நாகூரில் மறைந்தும் மங்காச்சுடரொளி வீசும்

இறைநேசச் செல்வர் மீரா சாகிபு மீது பாடப்பெற்றது இது. இரட்டை ஆசிரிய விருத்தப் பாடல் ஒன்றால் ஆகியது.

கருத்து

கோடிக்கணக்கான மக்கள், எட்டுத் திசைகளிலிருந்தும் பரந்து விரிந்து வந்து உன்னுடைய சிறப்புகளைக் கூறி நிற்பர். அரசர்கள் வெற்றி வெற்றி எனப் போற்றி நிற்பர். இறைவன் அருள்பெற்ற ஒலிமார்கள் அணி அணியாகக் கோடிக்கணக்கில் நிற்பர். அஞ்ஞானத்தை வேரறுத்து அறுத்திட்ட மெய்ஞ்ஞானிகள் அனந்தகோடி அண்மையில் நிற்பர். மக்க நகராளும் முகம்மது இறசூல் தந்த மன்னரே எனப் போற்றுவர் சில கோடிப்பேர். இவர்களெல்லாம் புகழ்ந்து நிற்க, கொலுவீற்றிருக்கின்ற உன்னுடைய பெருமையைச் சொல்ல வாயுண்டோ! இல்லை. தக்க ஞானியின் நல்லருள் தாங்கி நிற்கின்ற தவராஜ செம்மேருவே! கருணை வைத்து என்னை ஆட்கொண்ட நற்குணங்குடிகொண்ட சாகுல் அமீது அரசரே, உம்மைப் போற்றுகிறேன் என நாகூர் மீரா சாகிபினையும் புகழ்ந்து பாடியுள்ளார்.

## 9. மெய்ஞ்ஞான ஆனந்தக் களிப்பு - 1

### ஆனந்தக் களிப்பு - பொருள் விளக்கம்

ஆனந்தம் எனில் மகிழ்ச்சி. களிப்பு என்றாலும் அதே பொருளாய், பேருவகை, பெருமகிழ்ச்சி எனப் பொருள்படும். ஆனந்தக் களிப்பு, பெருமகிழ்ச்சி, பேரானந்தம், எல்லையில்லா மகிழ்ச்சி எனப்படும். மெய்ஞ்ஞான ஆனந்தக் களிப்பு - பேரின்பப் பெருமகிழ்ச்சி. ஆனந்தக் களிப்பு, ஒரு பொருள் இரு சொல்லாகிப் பேரின்ப அனுபவத்தைக் குறித்தது. " to express their ecstatic joy at the realisation of their aims having gone through the long and arduous mystic way beset with difficulties" என்பர்.

இசுலாமிய மெய்ஞ்ஞானத் தமிழிலக்கியங்களின் இவ்வானந்தக் களிப்பு சூபிப் புலவர்களின் மெய்ந்நிலைகண்ட பேரானந்தப் பேரின்ப நிலையாகும். the ecstatic joy என்பர். கடுவெளிச் சித்தர், தாயுமானவர், மாதவச் சிவஞான யோகிகள் போன்றோரும் ஆனந்தக் களிப்புப் பாடியுள்ளனர்.

### ஞான ஆனந்தக் களிப்பு

இறை ஞானம் கிடைத்தற் கரிய பேரின்பம். இதனைப் பத்தரும் சித்தரும் முத்தரும் ஞானியரும் பெறுவதற்குப் பாடுபடுவர். இறைச்

சோதியினைச் சுகிக்கக் கண்டுணர நாடுவர். 'என்று காண்குவேனோ' என ஏங்குவர். 'கண்டுகொண்டேனே' எனத் தங்கள் தங்கள் ஞானானுபவத்தினை எடுத்து இயம்புவர். ஆண்டவனுடன் இரண்டறக் கலக்கத் தாம் அடைந்த ஞானானுபவங்களைக் கூறிக்கொண்டு ஆனந்தக் களிப்பு அடைவர். பரவசித்துப் பாடுவர். இவ்வனுபவத்தின் ஊற்றுப் பெருக்கு - ஆனந்தப் பெருவெள்ளம். இறைக் காதலின் 'இஷ்க்' - பேரின்பப் பெருவெள்ளம். முத்த கீன்களின் முக்தி வெளிப்பாடு ஞான ஆனந்தக் களிப்பு. ஞானிகளின் பூரிப்புப் பாமாலையே இவ்வானந்தக் களிப்பு. இங்ஙனமாக ஞானமிகு எழிலார் தத்துவங்களை அமுதத் தமிழில் பாடி ஆனந்தக் கூத்தாடும் சூபிப் புலவர்கள் (1) தக்கலை பீர் முகம்மது சாகிப் ஒலி, 2) குணங்குடி மஸ்தான், 3) கோட்டாறு சேகு தம்பி ஞானியர், 4) முத்துப்பேட்டை பீர் முகம்மது மஸ்தான், 5) அய்யம்பேட்டை அப்துல் கனி, 6) கல்லிடைக்குறிச்சி கலிபத் செய்கு சாகுல் அமீது, 7) தொண்டி மோனகுரு செய்கு மஸ்தான் சாகிபு, 8) செய்கு முகம்மது மௌலானா, 9) இளையான்குடி பூ.மு.முகம்மது மஸ்தான் (அச்சேறாதது) ஆவர்.

"ஒரு ஞானி தமது பெருமகிழ்ச்சியைக் குறித்துப் பாடும் பாடலை ஆனந்தக் களிப்பு என்பர். சித்தர் கணத்தில் வைத்துக் கருதக் கூடியவர் பாடிய ஆனந்தக்களிப்பு தனிச்சிறப்புப் பெற்றது. அந்த ஞானி ஆண்டவனை அறிந்து அவருடன் இரண்டறக் கலக்கவே எப்பொழுதும் உழைப்பார். தமது உழைப்பில் சற்றேனும் சலியார். அவ்வாறு தமது இறுதிப் பேராசையை நிறைவேற்றப் பலவற்றை அனுபவிப்பர். அத்தகைய அனுபவங்களையே ஆனந்தக் களிப்பில் கூறுவர்" என்பார் டாக்டர் ம.மு.உவைசு

"குணங்குடியாரின் ஆனந்தக் களிப்பினை ஆயும்பொழுது 'இறைவனைத் தேடிப் பேரின்பத்தைச் செருக்குற்றுப் பக்திப் பரவசத்தால் பாடுவதாகும்'. ஆன்மீகப் பயண முயற்சியில் பல படிகளையும் கடந்து இறைக்காட்சி பெற்று. இன்புற்று மீண்டும் அனுபவத்தைப் பெற விழையும் உணர்ச்சிப் பாடலாகும்" என்பார் முனைவர் பேராசிரியர் நெயினார் முகம்மது.

"திருவருள் அனுபவத்தில் உண்டாகும் பெரு மகிழ்ச்சிப் பொருளாக அமைவதால் அதனைச் சுட்டி, இவ்விலக்கிய வகை ஆனந்தக் களிப்பு எனப்படுகின்றது" என்பார் முனைவர் ச.வே.சுப்பிரமணியம்.

## தனித் தன்மைபெறும் சில ஆனந்தக் களிப்புகள்

பீர் முகம்மது மஸ்தான் பாடிய ஞான ஆனந்தக் களிப்புகளோடு "ஞானமயிற் களிப்பு" என்ற அனுபவப் பகுதியும் ஒரு மாற்றுப் போக்காகக் குறிப்பிடத் தக்கது.

புலவர் ஞானி அப்துல் கனி பாடிய ஆனந்தக் களிப்பில், அறிவுரைகளும் உள. சாதி வேற்றுமை, வேதியர் சூது, அது விட்டுப் பொது நிலையில் ஆனந்தம் கொள்(69) என்று கூறுவதும் காணலாம்.

காயல் உமறொலியின் குருவான முகம்மது லெப்பை இயற்றிய செய்கு முகம்மது புகாரித் தங்கள் புகழ்மாலை ஆனந்தக் களிப்பு அரபுத் தமிழால் ஆனது.

## பஷீரொலியின் ஆனந்தக் களிப்பு

மேலப்பாளைய மெய்ஞ்ஞானி பஷீரொலி தம் மெய்ஞ்ஞான ஆனந்தக் களிப்பினைக் 'தவ்ஹீ'தானந்தக் களிப்பு (பாடல் 4) என்பர். இது ஐம்பத்து மூன்று பாடல்களால் ஆனது.

## முதல் ஆனந்தக் களிப்பு

இசுலாமிய (சூஃபி) ஞானத் தமிழிலக்கிய ஆனந்தக் களிப்புகளில் முதன்மையானது, முன்னோடி பீரப்பாவின் ஞான ஆனந்தக் களிப்பு ஆகும்.

## காப்பு

பிற ஆனந்தக் களிப்புக்களில் பஷீரொலி வேண்டும் காப்பு முறைமை இல்லை எனலாம். புலவர் ஞானி பஷீரொலி "ஞானக் கருவுக்குக் குருவாமூன்றன் ஆனந்தக்களிப்பைப் பாடப் பொருளுக்குப் பொருளிடம்"(1) காப்பு வேண்டுகிறார்.

நபிகளின் மிகுராசுப் பேற்றினை "வானந்தரம் போய் மீண்டோர் வான்படி வித்தகத்தை சேர்ந்த நபி சரண்" எனப் பகர்ந்து (2) காப்பு வேண்டுகிறார்.

'வேந்தபூபக்கர்', மிக்கவிறல் உமர், உதுமான், அலி, ஹுஸைன் குரு ஆகியோர்களைப் போற்றுகிறார்.

## ஆரம்பப் பல்லவி

பீரப்பா 'தீன் தீன் முகம்மது தீனே - எங்கள் தனெங்கள் தினெங்கள் தீனெங்கள் தீனே; தீன் தீன் முகம்மது தீனே' எனப் ப்தினாறு பாடல்களில் ஆனந்தக் கூத்தாடுகிறார்.

எல்லா ஆனந்தக் களிப்புகளும் 'பல்லவிகளைப் பெற்றுப் பாடப்படுகின்றன். பஷீரொலி 'ஆமினல் லாஹு-ம்ம ஆமீன் - எந்தன் அகப்படி நீ கபூலாக்கவும் வேணும்' என அமைத்துப் பாடியுள்ளார். நெஞ்சினை மனத்தினை அழைத்தும், இறைத் தோழி, இறைப் பெண்ணே என அழைத்தும் பாடுவதாக அமைவது மாற்றுப் போக்காகும்.

குணங்குடி மஸ்தானின் ஆனந்தக் களிப்பில் முதற் பகுதி 38 முடிப்புகளால் ஆனது (தொடுப்பு இரக்கத்துணிந்து... என்று ஆரம்பிக்கின்றது).

'சும்மா இருக்கும் சுகமதே மோனம்' (2) அதனைப் பெறவும், வஞ்சியராசை விடுதற்கும் (3); காமக் குரோதங்களையும் கருவி கரணங்களையும் கைவிட்டு நற்கதி கிடைக்கும்படி நடக்கவும் (8) ஆனந்தக் களிப்பாடுகிறார்.

ஐந்து பொறிகளாகிய இந்த உடல் அது ஒன்பது துவாரங்களால் ஆகியது. இந்த உடல் அழியுமுன் பேரின்ப வீட்டை ஆசையுடன் தேடி ஓடு எனக் கூத்தாடுவதை

"அஞ்சு தூண் நாட்டிய மாடி - அது
அஞ்சோடு நாலோட்டை அடையாமல் ஓடி
பிஞ்சழிந்திடு மென்று நாடி - யானும்
பேரின்ப வீட்டினைப் பிரியமாய்த் தேடி"(இரக்)

எனப் பொறி, புலன்களை அடக்கினால் பரிபூரணனைக் கண்டு கொள்ளலாம். ஆனந்தம் எய்தலாம். களிப்புறலாம் என்பதனைப்

பொறிபுலனடங்கிக் காலே - பரி
பூரணப் பொருள் வந்து வாய்க்குமப்பாலே
அறிஞரும் அறியாது போலே - காணும்
ஆனந்த வெள்ளத்தினாடினதாலே (இரக்)

"இந்தக் கட்டுப்பாட்டிற்கு அடங்குகின்ற கர்மக் கட்டையாகிய உடல். காலன் (எமன்) என்ற தச்சன் கையினால் உயிர் வெட்டப்படும், பறிக்கப்படும். இந்த உடல் துட்டத்தனம் படைத்த கட்டை. இந்தச் சரீரம் என்று நினைத்துக் குரு அருள்பெற்றுக் குறை கண்டுகொள்ள இரக்கத்துணிந்து கொண்டேனே-எனக்கு இருக்கும் குறை முழுவதும் நிகழ்த்திக் கொண்டேன்" என ஆனந்தக் களிப்பால் ஆடுவதனை

கட்டுப்படுங்கன்மக் குட்டை - வருங்
காலத்தச்சன் கையால் வெட்டுங் கட்டை
துட்டத் தொழில் படைத்த மட்டை - இந்தத்
தூலமென்றெண்ணிக் குருவருள் போற்றி (இரக்)

எனப் பாடிக் களிப்பெய்துகிறார்.

நரம்பு, தசை, தோல், எலும்பு இவைகளைக் கொண்டு நாட்டுகின்ற உடல். இது இருவினைகளால் ஆடுகின்ற துரும்பு. அது துன்பங்கள் நிறைந்திருக்கின்ற ஒழியாத உடல். இது நிலையற்றது என்று எண்ணி இல்லல்லாஹு (லாயிலாஹ இல்லல்லாஹு) என்ற திக்ராடி திளைக்கச் சொல்லுகிறார்.

நரம்பு தசை தோல் எலும்புகொண்டும்
நாட்டும் வினைகளுக்கு ஆட்டுந் துரும்பு
நிரம்புந் துயர்கோளுடம்பு - என்று
நில்லாதென்றெண்ணி இல்லாஹ்வைப் போற்றி (இரக்)

என ஆனந்தக் களிப்பை எய்துகின்றார்.

நிலையாமையைக் கூறியும், மாளிகை கட்டிய மனை வாழ்வும் வீண் (6) என்றும்; இந்த உடல் வாழ்க்கையை வீசி எறியவும் தன்னை அறிந்து தலைவனை அறியவும் கூத்தாடுகிறார். ஆழித்துரும்பென அலைந்து அஞ்ஞானத்தில் அமிழ்ந்து கெடாமல் மதியமிர்த்தை அருந்தவும் (13) நினைவையும் கனவையும் மறந்து இருந்த நிலைமையையும் மறந்து இனத்தையும் மனத்தையும் மறந்து பிறகு இதில் உள்ள எல்லாவற்றினையும் மறந்து நிற்கின்ற நிலையினைப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

இங்ஙனமாக இறைவனின் நினைப்பில் தன் வாழ்வளிக்கிறார்.

## ஆனந்தக் களிப்பு- 2

ஆனந்தக் களிப்பு இரண்டில் 28 முடிப்புகள் அமைந்துள்ளன.

“ எங்கள் குணங்குடியானே - நமக்கு இன்னும் அருள் புரிவானடி மானே” எனத் தொடுப்பு அமைகிறது.

வாசியின் யோகத்தினால் (3,4,5,7,8,27) ஆனந்தக் களிப்புப் படரும் எனக் களிப்பு எய்துகிறார். அதனைத் தேனாகவும், மதிப்பால் என்றும், பட்சம் என்றும்; மோட்சவீடு (முத்தியின் வீடு) என்றும் சந்திராமிர்தம் என்றும் கூறுகிறார். திருநடனம் கண்டு ஆனந்தக் களிப்பினை அடைவதாகவும் கூறுகிறார். பெண்ணாசை நீங்கி (15) உலகப் பற்று நீங்கிக் (17) குணத்தை அருள வேண்டுகிறார்.

சரக்கலையின் கும்பித்தல், ரேசித்தல் போன்ற பயிற்சிகளைப் பூசைகளாகக் கூறி, குணங்குடியானிடம் (19) அருள் புரிய கேட்கிறார்.

சோம்பலும் தூக்கமும் நீக்கும் போது
சுகமது கொள்ளவும் போகாமலாக்கும்
பாம்பான பெண்ணாசை போக்கும் - என்று
பாவிமுகத்தையும் பார்த்தருளித்தான் (22) (எங்கள்)

என இறைதேட்டத்திற்குச் சோம்பலும் தூக்கமும் பகை எனவும் பெண்ணாசை நீக்கவும் வேண்டுகிறார்.

இறைதேடுதலில் மனத்தைப் பக்குவப்படுத்தி, வைராக்கியத்தோடு, மனப்பூட்டை உடைத்து, ஒன்றிலே ஒன்ற வேண்டும் (25) என்கிறார். இங்ஙனமாக குணங்குடியாரின் ஞான ஆனந்தக் களிப்பு இறையனுபவ வாதப் புலம்பல்களாக இனிது இசையோடு இசைந் துள்ளன.

## 10. கண்ணிப் பாடல்கள்

### நிராமயக் கண்ணி

i) இறைவன்பெருமைகளைக்கூறி ஆட்கொள்ள வேண்டுதல்

ii) நிலையாமை, மனிதத் துயர்களைக் கூறி உலகவாழ்வி லிருந்து விடுபட வேண்டுதல்

எனும் நிலையில் நிராமயக் கண்ணிகள் அமைந்துள்ளன. நிராமயம் எனில் நோயற்றது எனப் பொருள்படும். ஒவ்வொரு கண்ணியின் இறுதியில் நிராமயமே என முடிவுறும். மொத்தம் 280 கண்ணிகள் உடையது. தாயுமானவரின் கண்ணிகள் போன்று கருத்துச் செறிவுடையன. எச் சமயத்தவருக்கும் பொதுநிலையில் அமைந்துள்ளவை. அருவ உருவத் தோற்றம், உடலின் அழியாமை, உலகப் பொருள்களின் நிலையாமை, துறவு, யோகநிலை மன ஒருமைப்பாடு, ஐம்புலனின் ஒருமை, இறைவனின் எங்கும் நிறைந்த தன்மை ஆகியவற்றைக் கூறி இறையருள் வேண்டிப் பாடப்படுபவை. இறைவனின் எங்கும் நிறைந்த தன்மை, சிறப்புகளைக் கூறி ஆட்கொள்ள வேண்டிப் பாடப்பட்டுள்ளன்.

இறையின் அருள் கிடைக்க, இறைவனைத் தந்தையாகக் குருவாகப் பாவித்து முறையிடும் பக்திஇலக்கிய உத்தியையும் நிராமயக் கண்ணியில் காணலாம்.

**சில கண்ணிகள் விளக்கம்**

மனத்திற்கும், வாக்கிற்கும் எட்டமுடியாத மறைந்திருக்கின்ற பெரிய ஒளி மயமான சுடரே! உற்றாரும் சுற்றமும் இனவேறுபாடற்ற நிராமயப்பொருளே! என்பதினை

மனவாக்கணுகா மறைந்தவான் செஞ்சுடரே!
இனமாதி யற்ற இறையே நிராமயமே (13) என்றும்;

பார்க்கின்ற இடங்கள் தோறும் பரிபூரணமாக நிறைவாக நன்மையுடன் நிற்கின்ற இறைவனை

பார்க்குமிடமெல்லாம் பரிபூரணமாக
ஏற்கையுடனின்ற இயல்பே நிராமயமே (14) என்றும்;

அவன் அந்தம், ஆதி, நடு, பக்கம், முன், பின் இவைகள் அற்ற நாத வடிவமே என்பதினை:

பாதமுடிநடுவும் பக்க முன்னும் பின்னுமற்ற
நாதவடிமே நவமே நிராமயமே (78) என்றும் ;

பல வகையான உத்திகளை எடுத்தெடுத்து ஆக்கப்பட்ட இந்த் உடலானது சுற்றத்தார் அருகிலிருக்கும் போதே மரணித்துவிடும் தன்மை உடையது என நிலையாமையை

எத்தனையோ உத்தி யெடுத்தெடுத்துச் செய்யுமுடல்
உற்றாரிருக்க உடையும் நிராமயமே (62) என்றும்;

தாயானவள் இருக்கக் குழந்தை ஒருநாளும் மனத்தளர்ச்சி அடையாது. அதுபோல உற்ற துணை நீ இருக்க நான் தளர்ச்சி யடைவனோ எனும் தனது இறை உறுதிப்பாட்டினை,

தாயிருக்கப் பிள்ளை தளராதொருபோதும்
நீயிருக்க நான் தளர நேரோ நிராமயமே (64) என்றும்;

தன்னையறிந்தவன் தன் தலைவனை அறிவான் அந்தவிதமாக நன்மை பெறுவான் என்றும் சூபிச அடிநாதத்தினை

தன்னை அறிந்தால் தலைவன் தனையறிந்து
என்னும்மொழியே இதங்காணிராமயமே (70) என்றும்;

என் நினைப்பும் தோன்றுதலும் எல்லாம் உன்னுடைய திருவருள் செயலே என்றும் அடியவர் தம் மனத்தை தினையளவு கூட விட்டுத் திரும்பார் என்பதை,

நினைப்பு முதிப்பு மெல்லாம் நின் செயலென்று அன்பருளம்
தினைப் போதும் விட்டுத் திரும்பார் நிராமயமே (89) என்றும்;

இறையாகிய நீ தயிர்க்குள் வெண்ணையைப் போல உயிர்க்கு உயிராய் என்னுடைய உள்ளத்திலும் உலவி நிற்கின்றாய் என்பதையும் (104)

" கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்" இந்த அண்ட பகிரண்டங்களை அகண்ட பரிபூரணமாய்க் கொண்ட உன்னை யார் அறிந்துகொண்டவர்? (யாருமிலர் என்ற வினாவைப் பின்வருமாறு அண்ட பகிரண்டம் ஆண்ட பரிபூரணமாய்க் கொண்ட நின்னை யாரறிந்து கொண்டார் நிராமயமே) (112) என்றும்;

ஒன்றாகியும், பலவாகியும், உருவமாகியும், அருவமாகியும், உயிராகவும் (ஆன்மா) இருந்த உன்னை அறிய வல்லவர் யார்? என்பதை

ஒன்றாய்ப் பலவாய் உருஅருவாயும் உயிராய்
நின்ற உனை யாரறிய நின்றாய் நிராமயமே (130) என்றும்;

ஒரு நாழி உப்பும் ஒரு நாழி நீரும் கலந்த பின்பும் ஒரு நாழியளவே இருப்பது போல், பரம்பொருளோடு ஒன்றினோர் ஒன்றி இருப்பர் என்பதனை

நாழிஉப்பும் நாழி அப்பும் நாழியாந்தன்மை முப்
பாழெய்தினார்க்கோ பகராய் நிராமயமே (155)

எனப் பாடியுள்ளார். விளக்கும் சுடரும் வேறுவேறு என்று எண்ணாதார் உழக்கில் இருக்கும் தண்ணீரும் அதில் கலந்துள்ள உப்பினையும் ஒன்றே என எண்ணுவர் (337).

வேக வைத்தவைகளைத் தின்று, இருப்பவைகளை உடுத்தி, இருவினைகளைப் பூண்டு, திரிந்திருக்கும் பாவியேன் மனம் சண்டித்தனம் செய்வது சரியோ என நாடோறுமுள்ள வாழ்வியலை எண்ணுவதைத் 'தின்று உடுத்திப் பூண்டு திரியவெனப் பாவிமனச் சண்டி புரளச் சரியோ நிராமயமே' (167) என்ற கண்ணியில் நம் முன் காட்டுகிறார்.

" சும்மா இருத்தலே சுகம்" தரும் என (168) தத்துவம் வித்தகம் கூறுவார். பற்றறுத்து மெய்ஞ்ஞானமாகிய கூரிய வாளினை வீசினால் இறையருளாகிய ஒளி ஒளிரும் (169) என்கிறார்.

அலைபாயும் மனத்தினை ஒருமைப்படுத்தினால் உள்ளம் உலையில் இடும் மெழுகுக்கு ஒப்பாகும் (175) என்றும், அறிவு ஒருவழிப்படும் சித்தர்களுக்கு இரவு பகல் இல்லை (180) என்றும்;

'கோணல் கரும்பில் இனிமையான சாறு இருப்பதுபோல' ஆணவம் உள்ள என்னிடமும் உன்னைப் பற்றிய அறிவு இருக்கிறது (186) என்பதும்; கானல் நீரைப் போன்று இந்தப் பொய்யான உடலை கல்போன்று நிலைத்து நிற்கும் என்று எண்ணுகின்றவர்களின் உள்ளத்தில் அடங்காமை குடிகொள்ளும்(187).

நான்கு திசைகளிலும் சென்று வெற்றிக் கொடி நாட்டிய அரசர்களின் கோட்டை மாளிகைகள் எல்லாம், சிறுவர்கள் மண்ணில் கட்டுகின்ற மணற் சோற்றைப் போல பயனற்றது. விரைந்து அழியும் எனும் கண்ணியில் நிலையாமையினை (200) இங்ஙனமாகப் பாடுவார்.

பாடல்களைப் பொருள் தெரியாமல் மனப்பாடம் செய்து விட்டதால் ஒருவனை ஞானவான் என்று கூறுவது ஏட்டுச்சுரைக்காய் போன்று பயனற்றது(201) என்கிறார்.

காமம், குரோதம், பொறாமை முதலியன உடையவர்களிடம் இறைவனில் திருக்கருணை உண்டாகாது (249) என்றும்

எந்தக் கவலைகளுக்கும் மயங்காது இயங்குவது பரம்பொருள். உன்னைத் தொழுதல் என்பதே எல்லாக் கவலைகளையும் நீக்குவதற்குரிய நிலையான முடிவாகும் என்கிறார் (252).

### உடல்

இறை அருள் பெறத் தடையாயிருக்கும் உடலை வெறுத்து அதன் இழிவை, அழிவை-நிராமயக் கண்ணிகளில் காற்றடைத்த துருத்தி, ஊத்தைப்பிணம், இடிசுவர், பொய்யுடல், புழுக்குடல், புலைக்குடில், நாற்ற உடல், பொய்யுடல் என்றெல்லாம் கூறிப் புலம்புவார்.

### தன்னை இகழல்

மஸ்தான், தம்மை நீசன் (45); பாவி (56); அறியாச்சிறியேன்(720); தொழும்பன்(73); புலையன்(188); முட்டாள் (213); வட்டன்(259); சுற்குணத்தான்(73) என்றெல்லாமாகக் கூறி வெறுத்துரைக்கிறார்.

### முத்தம் தா!

புலவர் ஞானியருள் எப்புலவரும் எண்ணுவதற்கு அரியநிலையில், இறைவனிடம் தனக்கொரு முத்தம் தருமாறு "தகைப்பறவோர் முத்தம் தருவாய்" என கேட்கும் நிலையும் காணலாம்.

### பராபரக் கண்ணி

பரம்பொருளைப் பணிந்து வேண்டும் 100 கண்ணிகளைக் கொண்டது. உடலுக்கு உயிரான (10) மந்திரத்துக்கு எட்டாத மறைப்பொருளை(11) தான் ஓடியாடி இறையைத் தேடிய அனுபவத்தினை, பராபரமே நான் பல இடங்களில் எல்லாம் ஓடியோடித்திரிந்து அலைந்தேன். உன்னுடைய திருவடிகளைக் காணாமல் மனம் வாடினேன் கலங்குகின்றேன். எனவே, என் முன் எழுந்தருளி வரவேண்டும் என்பதனை,

> ஓடித்திரிந்து அலைந்தும் உன் பாதங்காணாமல்
> வாடிக் கலங்குகிறேன் வாராய் பராபரமே (13) என்றும்;

தேடக் கிடையாத திரவியத்தினை (15) அரியபொருளை (16) வார்த்தைக்குள் அடங்காத சூத்திரப் பொருளை(24) நாற்றமான உடல் இது நிலையற்றது என்று நம்பாதவர்களுக்கும் பூத்து மலர்ந்திருக்கும் மணமுள்ள பூவே என பராபரக் கண்ணியில் காட்டுகின்றார்.

> நாற்றச் சடலமதை நம்பார் முகர்ந்திருக்கப்
> பூத்து மலர்ந்திருக்கும் பூவே பராபரமே (24)என்கிறார்.

இறைவனை, எந்த மந்திரங்களும் எட்டாத மறைபொருளே! நிலையான உயிரே! சேர்ந்த ஏழுவகைப் பிறப்புகளான i) உயிரணு, ii) தாவரம், iii) நீர் வாழ்வன, iv) ஊர்வன, v) பறப்பன, vi) விலங்கு, vii) மனிதன்-ஆகியவற்றிற்கு சித்தாக இருக்கும் பரம்பொருளே! என அழைக்கிறார். பரம்பொருளின் ஏழுவகைத் தோற்ற நிலைகளையும் விளக்கும்

> மந்திரத்துக்கு எட்டா மறைபொருளே! மன்னுயிரே!
> சேர்ந்த எழு தோற்றத்தின் சித்தே பராபரமே (11) என்கிறார்.

துன்பம் தரும் செயல்களால், அறிவு கெட்ட ஆன்மாவாகி நெல்லாக இருக்க வேண்டிய நான் பதராக உள்ளேன் என்பதை

அல்லல் வினையால் அறிவுகெட்ட ஆன்மாவாய்
நெல்லும் பதரு மென நின்றேன்பராபரமே -(31) என்றும்,

ஊனாகி, அந்த ஊனில் உள்ள உயிரில் ஒட்டாத கருவாகி, தானாகி நின்ற உடலே பராபரமே! எனுங்கருத்தை

ஊனாகி உள்ளுயிரில் ஒட்டாத அக்கருவாய்த்
தானாகி நின்ற தனுவே பராபரமே (44) என்றும்,

சூஃபியாக்கள் பயணிகள் என்பதையும் உலகம் முழுவதும் உன்னைத் தேடிச் சுற்றி உன் திருப்பாதங்களைக் காணாமல் திகைத்து, அழுதேன், நீயும் இதனை அறிவாய் எனப் பாடும் கண்ணி இதோ :

செகமுழுதுஞ் சுற்றியுமுன் சீர்பாதங் காணாமல்
திகைத்தழுதேன் நீயுந்தெரிவாய் பராபரமே (77)

இறைவனைக் 'கரை சேரவைக்கும் தெப்பமாகக் கூறுகிறார்(38). இறைமீது நீங்காத பற்றினை நீக்கி, மனக்கறைகளைப் போக்கி என்னைத் தழுவி உன் ஆளாக்கிக் கொள்ள அருள்புரிவாய் கண்ணே பராபரமே (98) என வேண்டுகிறார்.

## றகுமான் கண்ணி

அர்-ரஹ்மான் என்பதற்கு அளவற்ற அருளாளன் என்பது பொருள்.

"அஸ்மா உல் ஹூஸ்னா" எனப்படும் 96 திருப்பெயர்களால், அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோனாகிய அல்லாஹ்வினைத் தொழுது, தியானித்து இத்திருப்பெயர்களால் உச்சாடனம் செய்து உய்ய யா ரஹ்மானு = அளவற்ற அருளாளனே! என அழைத்துக் குறையிரந்து விளித்துப்பாடுவது. இது 100 கண்ணிகளால் ஆனது. 96 பெயர்களின் மாண்புகழுக்கும் அப்பாற்பட்டவன் இறைவன், என்றும் நிலைத்தவன் அப்பரம்பொருள் என்பதும் கருதத் தக்கது. றகுமான் கண்ணிகளில் சில:

குணங்குடியார் இறையைத் தேடி நாடி ஒடும் பாதையில் தனித்த பெருவெளியில் இருட்கடலில் உட்காருவதற்குக் கப்பல் கம்பமும் இல்லாத காகம் போல வழி தெரியாமல் தத்தளித்துக் கொண்டிருக்கின்றேன் கருணை புரிவாயாக! என வேண்டுகின்ற தன்மையினைப் பின்வருமாறு பாடியுள்ளார்.

ஏகப்பெருவெளியில் இருட்கடலிற் கம்பமற்ற
காகமது வானேன் கண்ணே றகுமானே (7)

சொல்லுதற்குரிய மெய்ஞ்ஞானச் சுடரொளியாகிய இறைவனைக் கண்டால் தன் மனக் கல்லும் கரைந்தும் உருகும்; அதுவும் முழுவதுமாகக் கரைந்திடும் என்பதை,

சொல்லுறு மெய்ஞ்ஞானச் சுடரொளி கண்டாலென் மனக்
கல்லுங் கரைந்திடும் என் கண்ணே றகுமானே (26)

எனப் பாடுகின்றார்.

தூங்காமல் தூங்கி யோகத்துயில் கொண்டு உன்னைத் தொழுது தொழுது உன்னைக் காண எனக்கு அருள் செய்வாயாக கண்ணே! றகுமானே! எனுங்கருத்தமைந்த கண்ணி :

தூங்காமல் தூங்கித் தொழுது தொழுது உன்னருளைக்
காண்க எனக்கு அருள் செய் கண்ணே றகுமானே (36)

இறைவன், ஞானியர்களுக்கு காந்த மலை போன்றவன் என்பதை (45) விளக்குகிறார்.

குரங்காக ஆட்டுவிக்கின்ற பகுத்தறிவில்லாத அறிவால் என்னைத் தடுத்து, ஆறாவது அறிவைத் தந்தருள:

ஆவி தனைக் குரங்கா ஆட்டுகின்ற ஐயறிவைக்
காவலிட அருள் செய் கண்ணே! றகுமானே! (47)

என வேண்டுகிறார்.

இறைவனை எட்டிப் பிடிக்கும் விதத்தை நான் அறிந்திருந்தால் உடனே உன் பதத்தினைக் கட்டிப்பிடித்து நழுவவிடாது செய்திடுவேன் என்பதை

எட்டிப்பிடிக்கும் இதம் அறிந்தாலுன் பதத்தைக்
கட்டிப்பிடித்திடுவேன் கண்ணே றகுமானே (49) என்கிறார்.

என் எண்ணம், என் நினைவு, என் சிந்தனை எல்லாமே உன்னையே எண்ணியிருக்கும். என் மனக் கண்ணாடிக்குள் விளங்கும் முகம், உன் முகம் போலத் தெளிந்த அறிவுடையது கண்ணே! றகுமானே! எனுங் கருத்தமைந்த கண்ணி

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணாதிருக்கு மனக்
கண்ணாடிக்குள் முகமாங் கண்ணே றகுமானே (59)

இறைவனை,

பூரணமே! அற்புதமே! பொங்கு கருணைக்கடலே
காரணமே என்றன் அருட் கண்ணே (68)

நற்பவளக் கொம்பே! நவமணிக்கும் அற்புதமே!
கைப்பொருட்கும் மெய்ப்பொருளே! கண்ணே! றகுமானே (80)

என வியத்தலும் காணலாம்.

மயக்கத்தை நீக்கும் தவத்தினால் இறைவனின் நினைப்பிலிருப்பவருக்குக் குணங்குடியாரின் கருணை கிடைக்கும். (99)

## எக்காலக் கண்ணி

தாயுமானவரின் எந்நாட் கண்ணிகளைப் பின்பற்றிக் குணங்குடி மஸ்தானும் எக்காலக் கண்ணியைப் பாடியுள்ளார் என்ப. எக்காலக் கண்ணி, எந்நாட் கண்ணி எனப் புலவர் ஞானிகளின் பா மரபைப் பின்பற்றிப் பாடியுள்ளமை காணலாம். மஸ்தான் சாகிபு பரம்பொருளின் அருளுக்கு ஏங்குவதைக் குறிக்கும் 17 கண்ணிகள் காணக்கிடைக்கின்றன. 7,8,9 கண்ணிகளில் வாசியின்-சர நூல் தத்துவத்தை மறைபொருளாகப் பாடியுள்ளார்.

3,5,6,10 ஆகிய கண்ணிகளில் பெண்ணாசை கடிந்து, அவ்வாசைகள் அழிவது எக்காலம் என ஏங்குகிறார்.

கஞ்சா அபின் போன்றவற்றை நீக்கி, சித்தர் காயகல்பம் உண்ணுவது எக்காலம் என வினவுகிறார் (11).

பொய் நீக்கி, குற்றங்கள் களைந்து, அழுது அழுது உன் திருவடிகளைப் பணிந்து தொழுது ஒழுகுவது எக்காலம் என (13) ஏங்குகிறார்.

சுவாசப்பயிற்சியின் முயற்சியில் அமுதுண்ணும் காலம் எக்காலமோ (17) என ஏங்குகிறார்.

## கண்மணிமாலைக் கண்ணி

உறுப்புக்களில் தலைசிறந்தது கண். அக்கண்ணில் மிக முக்கிய உறுப்பு 'மணி'. கண்மணிமாலையாக இறைவனின் அருளையும் அன்பையும் வியப்புறப் போற்றிப் புகழுகிறார். கண்ணே பராபரமே என ஒவ்வொரு கண்ணியிலும் பாடி முடிக்கிறார். இது 100 கண்ணிகளால் ஆனது.

இறையினை, தற்பரமே! சிற்பரமே! கற்பகமே! அற்புதமே(2); என்றும் உடலே! உயிரே! உள்ளத்தைக் குளிரச் செய்யும் செந்தேனே! பரந்த கடலே அமிழ்தமே! (3); என்றும், செல்வப் பெருக்கே! திரண்ட மணிப் பொக்கிஷமே! கல்விக்களஞ்சியமே (6) கொட்டிவைத்த முத்தே! குவித்த நவரத்தினமே! கட்டிப்பசும் பொன்னே! (4) என்றும், இன்னமுதே! கற்கண்டே! முக்கனியே! கன்னலரும்பாகே! (7) என்றும், இனிய அமிழ்தே! பிரியாப் பெருவாழ்வே செம்பொன்னே! (8) என்றும் நற்பவளக் கொம்பே! நவமணிப் பெட்டகமே! உண்மைப் பொருளே (9) என்றும்; பனை வெல்லக்கட்டியே! பானை நிரம்பிய சர்க்கரையே! கட்டிக் கரும்பே (10) என்றெல்லாமாகக் கண்மணி மாலையில் கண்ணிகள் தோறும் அழைத்து, விளித்து இன்புறுகிறார்.

ஏடுகளில் எழுதமுடியாத இறைவனே! என் கண்ணே! பராபரமே! உன் வடிவைக் காட்டி அருள்வாய் எனப்பாடும் கண்ணி:

> ஏட்டில் எழுதவொண்ணா இறையே உன்றன் வடிவைக்
> காட்டிக் கொடுத்தருள்வாய் கண்ணே பராபரமே (35)

"நாதவித்தாய் நின்றதும் நானேதான்" என்ற அறிவுரையை என் காதில் தந்தருள்வாய் என் கண்ணே பராபரமே(38) வேண்டுகிறார்.

காபகௌளசைனி எனும் விற்புருவ மத்தி எனும் சூபிச மறைபொருள் நெற்றி நடுஇடையில் ஒளிக்கதிர் தோற்றுவித்துப் பந்தாடுவதற்குரிய யோக முறைகளை எனக்குக் கற்பித்து அருள்க! என வேண்டுவது இக்கண்ணி :

> விற்புருவத்தூடு விளங்குமொளி பந்தாடக்
> கற்பித்து அருள்வாய் என் கண்ணே பராபரமே (44)

யோக நெறியில், எட்டுமோர் எட்டையும் எட்டுக் கயிற்றால் கட்டுகின்ற வழியதனைக் காட்டி, நல்விருப்பம் போல் துலங்க (56) அருள் வேண்டுகிறார்.

ஆறு ஆதாரங்களான மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய அடுக்கடுக்குகளிலிருந்து கடத்தி என் கண்ணே பராபரமே மேல்நிலையில் ஆக்கிவைப்பாயாக (57) என வேண்டுகிறார்.

சோமப்பால், வாமப்பால், காமப்பால் என சித்தர் சொல்லாட்சியில் சந்திர அமிர்தத்தை ஊட்டி, சுரந்த வாமயோகப்

பயனையும் அத்துவித இன்பத்தையும் கொடுத்தருள்க! எனப்பாடும் கண்ணி

> சோமப்பாலூட்டிச் சுரந்த வாமப்பாலுங்
> காமப்பாலுங் கொடுத்தாள் கண்ணே பராபரமே! (61)

என்றும், மேலும், சித்தர் நெறியின் நின்று அமுதகலை உண்டிட

> மண்டை நடு மண்டலத்துள் மண்டியமுதுண்டிட வுங்
> கண்டங் கடத்தி வைத்தாள் கண்ணே பராபரமே! (62)

என்கிறார்.

இடகலை, பிங்கலை ஆகிய சுவாசக்கலைகளை அடக்கி என்று உடல் நிலைத்திருக்க வைத்து ஆள்வாயாக எனப்பாடும் கண்ணி சரநூல் தத்துவவித்தகம் (64) பேசுகிறது.

## மனோன்மணிக் கண்ணிகள் – கருத்துச் சுருக்கம்

குணங்குடி மஸ்தான், "பிரியா மணம் புனரக் கண்கள் உறங்காக் கனவு கண்டேன்" எனக் கண்கள் உறங்காது விழித்திருக்கும் உணர்வுபூர்வமான நித்தியக் கனவைக் கண்டதாக ஆரம்பித்துப் பாடுவார். பத்துக் கண்ணிகளில் கனவுலகில் சஞ்சரிப்பார். ஆனந்தக்களிப்பால் எக்களிப்படைவார், காமப்பால் எனும் பேரின்ப அமுதம் உண்ணக் கனவு கண்டதாகக் கூறுவார். மனோன்மணியை அறியாமையின் திரட்சியாகவும் சுவர்க்கத்தின் திரட்சியாகவும் காண்கிறார். அழகு அனைத்தையும் திரட்டித் தம் கண்களிலிருந்து நீங்காத தன்மையை வேண்டுகிறார். சீராட்டிச் சங்காரித்து அலங்கரித்து அகங்களிப்பதைக் காணலாம். இது தன் காதற் கிழத்திக்கு அன்பு கணவன் செய்ய விரும்புகின்ற அலங்காரமாகக் காணலாம். அது உண்மையான உளக்கருத்தாக வெளிப்படுகின்றது. மாபெரும் தவசீலர்களுக்குக் குலக்கொழுந்து என்பதும் காட்டப்படுகின்றது.

பரம்பொருளான இறைக்குக் குணங்குடிக்குள்-குணங்கள் குடி கொண்டிருக்கும் மன மாளிகையை இதயமாம் இல்லத்தில் கட்டிக் கொடுக்க விருப்பந்தருகிறார். அது கல்லோ! மண்ணோ! கருங்கல்லோ அல்ல! அடிக்கு ஆயிரம் பொன்விலையானாலும் ஈந்து கட்டவிருக்கும் இதயமாளிகை மாற்றுக்குறையாத மாணிக்க விளக்குடைய ஆணிப்பொன், அரண்மனை, அது சொர்க்கம் எனவும் இலங்காது இலங்கும் அலங்காரம் செய்வேன். அதில் "இரவைப் பகலாக்கும் இரத்தினங்கள் வைத்து இழைப்பேன்.

சித்திரங்கள் வகைவகையாய் செய்வேன்" அது மண் மாளிகை அல்ல. மன மாளிகையே அது கண்ணாடியாகவே இருக்கக் காண்பேன் எனக் கண்ணாடியை உருவகமாகக் கொண்டு, மனமது தூய்மையாக இருந்தால் அது பிரதிபலிப்பதும் தூய்மையாக இருக்கும் என்ற தத்துவ வித்தகத்தைப் பெய்துள்ளார். மனம் முழுவதும் கண்ணாடியாக இருந்தால் சிந்திக்கும் அனைத்தும் அழகாயிக்கும் அன்றோ! குணங்குடியாக இருக்கும் மனம் - அது களிபரப்பும் மணியால் ஆகிய ஒரு சிங்காசன மேடையில் அமர்ந்திருப்பவர் ஒப்பற்ற இறை. அந்நிலையினை அனுபவிக்க மவுனமணி. அது பேசாத நிலை - 'சும்மாயிரு'க்கின்ற உயர்நிலை வேண்டும். இந்த நிலையே மன ஒருமை ஏற்படுத்தும். மவுனத்தால் சித்திபெறும் ஒளிபரவும் ஐக்கியம் ஏற்படும். இறையிடம் தன்னையே தருகின்ற நிலையில் தன்னின் உயர் நிலைகளைப் பெறலாம். அரசன் முதல் ஆண்டி வரை, புலவர் முதல் ஞானியர்கள் வரை முன்நிற்கும் சந்நிதானம். எல்லாப் பொருட்களையும் அர்ப்பணித்த பின்பு எல்லாம் துறந்து பரதேசியாகிய என்னைத் தேர்வு செய்க. இறையாகிய பெண் ஒன்று. பக்தர்களாகிய மாப்பிள்ளைமார் பலர். ஆனால் உன்னை அடையும் மாப்பிள்ளை நான் என ஒன்றில் ஒன்றி அடைக்கலமாகத் தம்மை அர்ப்பணித்தலை,

> சன்னிதானத்தில் சரணம் சரணம் என்று
> சொன்ன மலர் தூவித் தொழுவேன் மனோன்மணியே

எனக் காணலாம்.

அடைக்கலம் தேடித் துதிப்பதில் உளத்தூய்மை; எக்காலமும் பொங்கல் இடுவேன் எனப் பொங்கல் இடுகின்ற முறைகளைக் கூறுதல், உணவு வகைகள் பற்றி விவரித்தல், தன்னை இழந்த நிலையில் பக்தன் தான்பெற்ற மகிழ்ச்சியையும் பெற்ற பேறுகளையும் தனது இறையையும் அடைய ஆசைப்படுதல், அதுவே பக்தனின் பித்தநிலை - மஸ்து ஆகிய நிலை - இறைப்பித்தும் காதல்பித்தும் ஒரே நிலையில் பேரின்பப் பிணைப்பில் ஆனந்தத்தைத் தருகிறது என்பவை இப்பகுதியில் பாடுபொருள்களாம்.

> அடிக்கு ஆயிரம் பொன் விலையானாலும் ஈந்த குணங்
> குடிக்குள் மாளிகை கட்டிக் கொடுப்பேன் மனோன் மணியே

என விலைமதிப்பற்ற இறையைத் தமக்குள்ளாக்கிக்கொள்ள விலை பேசுகின்ற நிலையையும் காணலாம். காதலன் அல்லது

கணவனாகிய அடியான் இறையைக் காதலியாக சேயாக - தாயாக - தந்தையாகவும் காண்கின்ற நிலை - அன்பின் முதிர்ந்த நிலை. தன்னை "நாயினும் கடையேன்" என்று பணிந்து கூறுவது, மாணிக்க வாசகர் திருவாசத்தில் பல இடங்களில் கூறுவதோடு ஒப்பக்காணலாம். இறைவனிடம் உன்னுடைய அடியார்க்கு அடியானாக என்னை ஆக்கிக்கொள் எனப் பிரார்த்திப்பதையும் காணலாம்.

பக்த மீராபாய், உலகில் உள்ள உயிரனைத்தும் பெண்கள் என்றும் பகவான் ஆண் என்றும் பாவித்து பக்தி கொண்டுள்ளார்.

இராமகிருட்டின பரமஹம்சரும், நாயகி அனுபவத்தைப்பெற ஆசையால் சேலை அணிந்து இராதை பாவத்தில் கண்ணனை வழிபட்டார்.

மாணிக்கவாசகர், ஆண்டாள் காரைக்கால் அம்மையார் போன்றோரும் இப்பாவத்தில் பாடியுள்ளனார்.

தாயுமானவரும் இராமலிங்க அடிகளும் பாரதியாரும் பரம்பொருளைக் காதலியாகவும் தன்னைக் காதலனாகவும் பாவித்துப்பாடியுள்ளனர்.

## மனோன்மணிக் கண்ணி

ஒன்றிறைவனை நுகரப்படு பொருளாகிய தலைவியாகவும் தான் (பக்தன்/சித்தன்/முக்தன்/ஞானி) நுகர்வோனாகிய தலைமகனாகவும் இருந்து அனுபவிக்கும் பக்திப் பரவச நிலை, அது பேரின்பப் பேறு நல்கும் இன்பப் பேறு.

இறைவன் ஆண்டான், பக்தன் அடியான் என்ற அனுபவத்தில் எழுந்த போக்கு முதிர்ந்து, இறைவன் என் தோழன்/இறைவன் என்தாய், இறைவன் என் தந்தை/என்ற உறவின் முறையில் வைத்து, அனுபவிக்கும் பக்தி அனுபவங்களாகவும் அமைந்து பனுவல்களைத் தந்தன; பின் இந்நிலையும் முதிர்ந்து இறைவனை நாயகியாகவும் அடியாரை நாயகனாகவும் கொண்டு பாடும் நிலை "நாயகி நாயக பாவம்" (Bridal Mysticism or Erotic Mysticism) என மலர்ந்தது'

இறைக் காதலில் மூழ்கிய ஞானியர்கள் இதனை ஒரு பாவமாக - முறையாக நெறியாகக் கொண்டனர், பாடினர், ஆனந்தக் கூத்தாடினர்.

ஞானிகளின் பேரன்பு இறையனுபவம் காதற் பாடல் வடிவில் வெளி வந்தது. ஆனால் பேரின்பத் தேன் பிலிற்றுவனவாக உள்ளுறைந்தன.

பரம்பொருள் நாயகி, ஆன்மா-நாயகன் எனும் உள்ளுறையில் ஒளிந்திருப்பன இப்பாடல்கள்.

வைணவர்கள், கடவுட் காமத்தினை "பகவத் காமம்" என்றும், உலகியற் காமத்தினை "விஷயகாமம்" என்றும் கூறுவர். சைவர்கள் இதனை "சீவக்காமம், சிவக்காமம்" என்பர். கண்ணனிடம் அளவு கடந்து ஆண்டாள் காட்டிய காதல் வேட்கையை, கிரேக்கக் கவியரசி "சாப்போ" அம்மையின் காதற் பித்துக்கு ஒப்பிடலாம்.

மனித வாழ்விலும், உண்மைக்காதல், பொய்க்காதல் எனும் இருவகைக் காதல் வாழ்வு உண்டு. அகவாழ்வில் தெய்வீகக் காதல் இது மானிடக்காதலின் வரம்புகளைக் கடந்தது ஆகும்; இதுவே உண்மைக் காதல்; இதுவே சத்ய-சத்தான சக்திக் காதல், உலகியல் காதலின் தலைவி தம்மவரைத் துறந்து காதலனை அடையும் காதல்-பேரின்ப நிலையில் ஆன்மா ஆண்டவனை அடைவிக்கும் தெய்வீகக் காதல் திறமும் சீவன் சிவனோடு தண்டலை.... போல கலந்து நிற்கும் சித்தாந்த நுட்பமும் களி நடம் புரிகின்றன.

புது உலகில் தனக்குப் பிரியமான அனைத்தையும் உதறி, துறந்து உண்மையுடன் இறைவனிடம் காதல் கொள்பவன் மீது இறைவன் எல்லையில்லாக் காதலைச் சொரிகின்றான் என்னுந் தத்துவமே தெய்வீகக் காதலைப் பெரும் தாகமாக, ஸூஃபித்துவ அடிப்படையாக அமைகிறது. இறைவனோடு ஐக்கியமாக வேண்டுமென்ற கரைகாணாத் தெய்விகக் காதல் - சித்தனின் முக்திக் காதல் - இத்தகு காதல் உள்ளுறைக் கவிதைகளின் ஆத்மீக ராகம் மீட்டப்படும் அடிநாதச்சுருதி - ஸூஃபி ஞானிகளின் கவிதைகள் இறைமறை அடிப்படையில் இழைக்கப்பட்டன எனலாம்.

மஹ்பூபாவைத் தேடும் காதல் மனிதக் காதல் அன்று; மகோன்னத மனத்தில் உள்மணியாக இருக்கும் கன்னியைத் தேடும் காதல் அது. அல்லாஹ்விடம் பூரணமாகும் மஹப்பத் காதல். ஸூஃபியாக்களின் காதல் ஹபீப் மஹ்பூபின் தத்துவமே, திருமறையின் அடிநாதச் சுருதி. ஆவி போகுமுன் காயத்தினை பெற்றதன் மூலம் இறைக்காதலியினை நாடி ஓடும் தேட்டம் அது.

ஸூஃபிக் கவிஞர்களான ராபி ஆ. தல்நூன் ஆகியோர்களின் உணர்ச்சி வெளியீடுகளும் இக்காதல் தன்மையனவே. இப்னு

அல்ஃபரீத் பாடிய பாடல்களும் காதல் பேசுவன. ஜாமியின் (ஹிஜ்ரி 817-898, கி.பி. 1414 - 1492) உலகப் புகழ் "யூசுப் - ஜுலைகா" விலும் நிரந்தரமான மெய்க்காதல் எது? மறைந்து போகும் பொய்க் காதல் எது? என்பதனை இப்பெருங் காப்பியத்தில் நுண்மையுடன் நுழைத்துள்ளார்கள்.

"லைலா மஜ்னூன்" " யூசு - ஜுலைகா" போன்ற பாரசீகக் காப்பியங்கள் சிற்றின்பம் பகருவன போலத் தோன்றினாலும் பேரின்பத் தத்துவத்தில் இழைந்தனவாம்.

பாரசீகக் கவி "சாலம் வ அஃப்சல்" தெய்வீகத் தத்துவத்தை மீட்டும் கவிதையாம். உமர்கய்யாமின் "ருபாயாத்" துக்களில் இறைவனைக் காதலியாகப் பாடும் சூக்குமம் காணலாம். "மது-பக்தி" மதுக்கடை-வணக்கம், காதலி-இறைவன், மதுச்சாடி-ஆத்மிக வழிகாட்டி எனும் பரிபாஷை மறைபொருள் உள்ளுறைப் பொருளாக உணர்த்துகின்றன. இவ்வாறே உமர்கய்யாமின் பாடல்கள் பாடப்படுகின்றன என ஆய்வாளர்களும் உரைத்துள்ளனர்.

பஞ்சாபி சூஃபியாக்களுள் அலி ஹைதரின் ஹுர் ராஜா, ஹாஷிம் ஷாஹ்வின், ஸாஸ் புன்னா ஸோகினி மாஸிவால் காதல் கதைப் பாடல்கள் தத்துவப் பொருள் கொண்ட தெய்வீகத் தன்மையன.

இறைவன்மீது காதல் கொண்டு மையலாகி 'மஸ்தான்' என அழைக்கப் பெற்ற செல்வர் குணங்குடியாரின் மனோன்மணிக் கண்ணி (100 கண்ணிகள்) இப்பாவ நிலையிலேயே அழகுறப்பாடிச் செல்கின்றார். இறைக் காதலில் மூழ்கிய முழு ஞானியாகிய அவர் இறை எனும் காதலின்பத்தில் இன்பப் பெருநிலையில் மிசைத்து மயக்கத்தில் திகழ்ந்தவரன்றோ.

அகத்தீசர், நந்தீஸ்வரக் கண்ணி, மனோன்மணிக் கண்ணி ஆகிய மூன்றிலும் மனோன்மணி, குண்டலித்தாய், உமையாள் அம்பிகை, அம்பாள், பராசக்தி ராஜராஜேஸ்வரி, சாம்பவி, வாலை, சிவகாமி எனப் பத்து பெண்பால் பெயர்கள் காணப்படுகின்றன. மனோன்மணிக் கண்ணிகள், காதலன் - காதலி பாவனையில் பாடிய பாவனை. இது பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்களில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் இறைவனைக் காதலனாகவும் அடியானாகிய தன்னைக் காதலியாகவும் பாவனை செய்து பாடியுள்ளார்கள். ஆனால் மரபு மாற்றமாக குணங்குடியார் தன்னைக் காதலனாகவும் இறைவனைக் காதலியாகவும் பாவனை

செய்து பாடியுள்ளார் என்று இன்று வரை கூறப்பட்டு வருகிறது. ஆனால், அறிஞர் பா. கமலக்கண்ணன் "மனோன்மணி என்பது குண்டலி சக்திக்கு பெயர். ஏனெனில் மனமானது அடங்கி வச்சிராயுதம் போன்று அசையாத நிலைக்கு வந்துவிடுவதால் அது நவரத்தினங்களுக்கு மேலான மணியாகும் என்ற பெயர் அமைந்ததாக இப்பாடல் உணர்த்துகிறது என்று விளக்கியுள்ளார். குண்டலி சக்தியைக் கன்னி என்றும்; தேவி என்றும் குறிப்பிடுவது சித்தர்கள் மரபு. யோக மார்க்கத்தில் துரியம், துரியாதீதம் என்ற நிலைகளைக் கடந்து குண்டலி சக்தி மேலோங்கி வந்து அமர்ந்த நிலையில் அதற்கு சங்கரி, சாம்பவி, அம்பாள், அம்பிகை, பராசக்தி, ராஜராஜேஸ்வரி என்ற பல பெயர்கள் உண்டு என்பது சித்தர்கள் வாக்காகும் என்கிறார்.

அடியவர்கள் மனத்தில் இறைவன் மனோன்மணி போன்றவன் எனப் பொருள் கொள்வர்(மனம்+உள் +மணி=மன+உன்மணி=மனோன்மணி=மனம் உன்னும் நினைக்கும், எண்ணிக் கொண்டிருக்கும் மணி போன்ற இறை என்பர். 'மனத்துக்கு உகந்த மணி' என்றும் கொள்வர். மனோன்மணியை இறைக்கு குறியீடாகக் கொண்டு பேரின்பக் காதலைப் பாடுகிறார் எனலாம்.

குணங்குடியாரின் மனோன்மணிக்கு கண்ணிகள் மேலெழுந்த வாரியாகப் படிப்போருக்குச் சிற்றின்பச் சுவைகாட்டும் போதையூட்டும் - பாதை நீக்கும். ஆனால் இறைக்காதல் கிட்ட பேரின்பச் சோதி தட்ட சிற்றின்ப பாவத்திலே ஆன்மா துடிதுடிப்பவை. ஒரு நூறுகண்ணிகளில் ஓராயிரம் சிற்றின்பம் பேசும் குணங்குடியின் காதல் போதுமா? பேதமா? இல்லை. அது பேரின்பப் பெருக்கெடுத்து ஓடும் இறைக் காதல் வேகம், தாகம், காதலிக்குத் தர இருக்கும் அணிகலன்களின் அடுக்குகளை அணி அணியாகப் பாடுகிறார். உணவு பரிமாறுதல் உரைக்கிறார். மனோன்மணிக் கண்ணிக்கு 35,36,37 பாடல்களில் தத்துவ விளக்கங்கள் தரப்படுகின்றன. (அல்ஹாஜ் எஸ்.எம்.சுலைமான் இஸ்லாமியப் பண்பாடும் தமிழ்ப் பண்பாடும்: பக். 63,64,65) குணங்குடியாரின் காதல் வேகக்களியாட்டத்தில்.

என்னை விட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ உன்றனக்கே
உன்னை விட்டால் பெண் எனக்கும் உண்டோ மனோன்மணியே (73)

எனும் கண்ணி இறைக் காதலின் அடித்தளமான ஒன்றிலே ஒன்றுதலாக வஹ்தானிய அஹ்தானியத்தில் நின்று நிலைக்கும் சூஃபித்துவ-சூஃபியாக்களின் சுத்த தத்துவமாகத் திகழுகிறது.

## இறைக்காதலின் அடித்தளம்

ஒரே இறைக்குப் பக்தர்கள் கோடி கோடி. அடியார்கள் எண்ணற்றோர். ஆனால் இந்தக் காதல் திருமகளோ ஒரே ஒருத்தி; அவளுக்குக் காதலர்கள் அனந்தம். அனந்தம். குணங்குடியார் இந்த ஒரே காதலியினை மணப்பெண்ணாக அடைவதற்கு ஏங்குகிறார். 'இவள்' அன்றி வேறு பெண் எனக்கு இல்லை என்கிறார். அக்காதலுக்கு இவள் ஒருத்தி தானே எல்லோருக்கும் மணப்பெண். இக்கன்னிப்பெண்ணை அடைபவர்கள் அடைந்த பின்பும் கன்னித்தன்மை மாறாது மிளிரும் கற்புப் பெண். பத்தினித் தன்மைமிகு பெண் எனக் கற்புத்தன்மையும் சுட்டப்படுகிறது. இவ்வடிகள் பக்தருக்கெல்லாம் முக்திப் பொருளன்றோ! இதனையே புலவர் ஞானி அய்யம்பேட்டை அப்துல் கனி பாவா "உத்தமப் பெண்ணொன்று உவந்தேன் இப்போதுன்றன் பத்தினித்தனத்தை நன்றாய்ப் பார்த்தேன் மனோன்மணியே" (61) என்று பாடுவார்.

> குணமுடை வல்லிகுறித்த மணவாளன் என்றே
> மணமுடிப்பதற்கு வருமாப் பிள்ளையாய்ப் பாரேனோ (49)

என்று பாடியுள்ளார். தொண்டி மௌன குரு மஸ்தானின் பாரேனோ நூறு கண்ணிகள் நாயக நாயகி பாவத் தகையன.

கோட்டாற்றுறை மெய்ஞ்ஞான சொருபராகிய ஷெய்குத்தம்பி ஞானியார் சாஹிபின் (ஹிஜ்ரி 1208-1306) ஞானக் கீர்த்தனையில் ஒரு பா (21 பாடல்கள் ) இந்நாயக நாயகி பாவனை தெய்வீகக் காதல் அணிபெறக் காட்சியளிக்கிறது.

"என்றும் இன்பப் பரமாய் நிறைந்து விளையாடி, நிற்கும் இறைவனைப் பெண்ணாகப் பாவித்து 'பாவ மங்கையர்க் கெல்லாமாகி பெண்ணிலரசான கன்னி. தோகை மயில் மங்கையர்க் கெல்லாம் அரசி, கன்னியர்க்கெல்லாம் அரசி, கன்னிகா பெண்களுக்கரசி; பஞ்சவண்ணப் பைங்கிளி, மகிடகிரி மயிலாள் கற்பகமாங் கண்மணியாள் மூக்தி மிகப் பெற்றவுடலாள்; முத்து நகைவட்டமுகமுடையாள்; பத்திதருஞ்சித்தி பெறப்பாவையாள், என்றும் பிறப்பில்லாத பொன்னி அண்டருக்கெல்லாமரசி; அன்பருக் கெல்லாமரசி, தானவருக்கெலாமரசி, எவ்வுலகுக்குமரசி, துய்யவர்க் கெல்லாமரசி, அமரருக்கெல்லாமரசி, மாதவருக் கெல்லாமரசி, கோவை லோகத்துக்கரசி, மைவருக்கெல்லாமரசி, தவலோகத்திற் கரசி, பண்பாயுலகுக்கரசி, எவ்வகைக்கெல்லாமரசி, எவ்வுயிர்க்குமரசி என்று பாடும் பாவாடை -பாஅடை மொழிகள் பக்தி தரும். அவை

இறையரசியின் சிறப்புடை மொழிகள், சித்தம் தடுமாறாது சித்தியூட்டுவன; பக்தி தருவன; இறை பற்றியவை; பற்றவைப்பவை, இறைகுணநலன்களைக் காட்டுபவை, 'அரசி' எனும் சொல்லாட்சி தலைமை கூட்டுபவை.

**இறை வணக்கங்கள்**

குணங்குடியார்

கூந்தலுக்கு நெய் தேய்த்துக் குளிர்மஞ்சள் நீராட்டி
வளர்த்துச் சிங்காரித்து வைப்பேன் மனோன்மணியே (21)

முடிமீதினு மகுடமுடி சூட்டுவேன் நற்குணங்
குடிமாதவர்கள் குலக்கொழுந்தே மனோன்மணியே (30)

என்கிறார். ஷேக்குத்தம்பி ஞானியரோ

கூந்தலைக் குறை சொன்னேனோ குண்டலிக்கிணை வைத்தேனோ
காத்திடாதிருந்தேனோகண் கன்னியருக்கெல்லாமரசி

குணங்குடியார் இறைக் காதலியிடம்.

பன்னீரொழுகும் உன்றன் பாதமலரை யென்றன்
சென்னி மீதென்றன் அருள் செய்வாய் மனோன்மணியே (87)

என வேண்டுகிறார். புலவர் ஞானி அய்யம்பேட்டை அப்துல் கனிபாவா.

பன்னீராற் கால்கழுவி மணிமேகலை புனைந்து
நன்னீரால் உன்னை நயப்பேன் மனோன்மணியே (24)

என்கிறார். தொண்டி மௌன குருமஸ்தான்

பூவால் வடித்த பன்னீர் பொன் மலருள் பாதமிட்டு
நாவாற் கழுவி என்றன் நயனம் வைத்துப் பாரேனோ (12)

எனப் பாடுகிறார். இதில் 'திக்ரு' போன்ற இறை உச்சாடன வணக்கங்களை 'நாவாற் கழுவி ' என்பது குறிப்பிடும் எனக் கொள்ளலாம்.

இறைக் காதலியிடம் ஷேக்குத் தம்பி ஞானியார்:

பஞ்சவண்ண மெத்தையுண்டும் பாவனை யதிகமுண்டும்
கொஞ்சி விளையாடுதற்குக் குருசிறப்புத் தானுமுண்டு
திங்களுடன் ஞாயிறுண்டு தீபநடைதானும் உண்டு
பங்கயத் தனக்கிசைத்த பால் பழமுந் தேனுமுண்டு

எனத் தத்துவ விளக்கம் பாடுகிறார். குணங்குடியாரோ -

கட்டிலினுங்கூடி களிகூர்ந்து கொண்டிருப்போம்
தொட்டிலினும் ஆடிச் சுகிப்போம் மனோன்மணியே

என இறையின்பம் சுசிக்கிறார். (மனோன்மணி மனத்தின் உள்ளே அருமணியாக, உருமணியாக கருமணியாக, ஒளிமயமாக ஒளிரும் இறை ஜோதியினையே மனோன்மணி என உருவகித்துப் பாடும் பொருளே அன்றி வேறு எப்பொருளையுமோ அன்று).

உலகியல் காதலிக்கு காதலன் என்னென்ன தருவேன் என ஆசை கூறுவான் போல; ஞானி அப்துல் கனியவர்கள் இறைக் காதலி அக்குதலைச் சோட்டி (9) வயிறு அலுக்கு; (11); ஜிமிக்கி முத்தாரம் (13); நெற்றிச்சுட்டி (13), நவமணிமாலை (14), வயிர வயிடூரிய மூக்குத்தி (15) மணிமோதிரம் பொன் வளையல் (18); ஒட்டியாணம் (20); தண்டை, கொலுசும் அணிவிப்பதாக ஒவ்வொரு கண்ணியிலும் பாடுகிறார்.

சம்பங்கி, அத்தர், ஜவ்வாது, பன்னீர் வாசனைத் திரவியங்களை (10) பூசுவிப்பதாகவும் கூறுகிறார். ஆனால் நிராமயக் கண்ணி ஒன்றினில் செயற்கை வாசனைகளைவிட இறைக்காதலி மீது - இஷ்க்கில் - மனம்நினைந்துருகி, கனிந்து நின்று 'கண்ணீர் பன்னீர்' சொரியும் நாட்ட முஹப்பத்தில் ஒரு நிலை காணலாம்.

அக்கண்ணி இதோ :

கனிந்து கனிந்துருகிக் கண்ணீர்பன்னீர் தெளித்து
மனந்தனிலுன் அன்பை நிலை வைத்தேன் நிராயமே (20)

சின்னஞ்சிறு வயதுச் சிங்காரக் கன்னி என்முன்
அன்னஞ் சகிபோல் வந்தாடி நிற்பது எக்காலம் (36)

என ஏங்கும் அப்துல் கனியார் இறைக் காதலியை 'துங்கள்' முகக்கமலச் செழுஞ்சோதி (16) வண்ணத் திருமூக்கு (15); செங்கை (18); உந்தி மகிழம்பூ (19); வயிறாலிலை (19); கதலித்தொடை (21); அன்னநடை (20) மின்னற் கொடியிடை (200 என உவமை மூலம் படம் பிடித்துக் காட்டுகிறார்.

இக்காதல் கன்னியின் அழகுறு அடைமொழிகள் உவமை உருப்பெருக்கு நயமொழிகள் படிப்போரின் சிற்றின்பப்போதை நீக்கிடும், சூஃபிக் கவிஞர் கனி:

போதமதிமறந்து போகாமலுன்னுடைய
நீதிநெறி வழியே நிற்பாய் மனோன்மணியே (35)

எனப் பேரின்பத்திற்கு அழைத்துச் செல்கிறார். போதம் நீக்கி பேதம் தெளிவிக்கிறார்.

பழகப் பழக வந்த பாக்கியமே உன்னுடைய
அழகுக்கு இணையழகை அறியேன் நிராயமே (76)

என இறையழகில் மெய்ம் மறந்து நிற்கிறார்.

மோன மவுனவிதழ் முத்தமிடு நித்தம் நித்தம்
கான மயிலுனையான் கலப்பேன் மனோன்மணியே (7)

வணக்க நிலையிலுன்னை மறவாமல் எக்காலம்
இணக்கமுடன் கூடியிருப்பேன் மனோன்மணியே (38)

எனக் கூறுதலும் காணலாம். இறைக் காதலியின் பத்தினித் தன்மையினையும் 39,40 மனோன்மணிக் கண்ணியில் பாடியுள்ளார்.

## பெண்ணாக இறைவன்

குணங்குடியாரும் இறைக் காதலிக்கு முமு வயிர மூக்குத்தி (26); கைச்சுரி கடகம் கல்லிழைத்தது (27) கூந்தல் சடைப்பில்லை (27) தங்கக் கொலுசு, சிலம்பு, தண்டை, ரத்தினபாடகம், மோகனமாலை (28); காலாழி பீலி (29) தருவதாகப் பாடுகிறார். நெய்யுடை அடிசில் பத்துவகை பருப்பு (35) முட்டை முழுக்கோழி (36) ஆட்டுக்கறி (37) பால் பழம் தேன் விதவிதமான பலகாரங்கள் (39) போன்ற உணவு வகைகளையும் கொடுப்பாதக் கூறுகிறார். (இவற்றினைச் சூக்குமச்சொற்கள் என்பாருமுளர்) குணங்குடியார் காதலியைக் காட்டுமுருவம்: கண்குளிர்ந்த கட்டழகுப் பெண் (12) வண்ண உடை, அன்னநடை, (14) துவளுந் துடியிடை தோகை மயில் நடை, பவள இதழ் (16) என்கிறார். தொண்டி மௌனகுரு மஸ்தான், இறைக் காதலிக்குக் கொண்டைக்கு மலர் (13) சீனத்துப்பட்டு (15); நெற்றிப்பட்டம் (18); நெற்றிச் சுட்டி (19); மூக்கு முழு வயிரப் புல்லாக்கு (20); விழிக்கு மை (21); அலுக்குத்து. கம்மல் (22); சவடி (24) அட்டியல் (25) தங்கவளை (28); கால்கொலுசு (28) சதங்கை (33) ஆகியவை அணிவிப்பதாகக் கூறுகிறார்.

தொண்டி, மௌனகுரு மஸ்தான் (இறைக்) காதலியினை வட்ட மதியாளே; மாங்கனியே தேங்கனியே (34) பச்சை மரகதமே, பைங்கிளியே, பாக்கியமே (91) கன்னலருந்தேனே, கற்கண்டே முக்கனியே (82) பெண்ணிற் சிறந்த வருட்பெண்மணியே (76) சித்திரத்துக்கு எட்டாச் சித்திரமே; எண்ணிலடங்கா எழிற் சந்திர முகமோர் பெண்ணினழகே (89) என வருணித்துள்ளார்.

இன்பத்தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகளும் இறையைப் பெண்ணாகச் சிறப்பித்திருக்கின்றனர். இதனால் பெண் என்பது பொருளன்று. பெண்பாற் புலவர் ஞானி தென்காசி இறசூல் பீவியும் பேரின்பத் திறவுகோல் படலத்தில் (ஞானமிர்தசாகரத்தின்) இறையோனை

பரனென்றால் யார்க்குமடங்காத வஸ்தும்
பார்த்தாலோ பதினெட்டுத் திக்குத் தோன்றும் (34)

பகட்டுவாள் பரிபூரண மானதாகி பிடி
கொண்டாள் பெருமையுள்ள சித்திராங்கி
முகமினுக்கி நகை குலுக்கி மூலதேவி
முச்சந்தியில் நந்தியானதாசி
ஜெகமெங்கும் காணாது தேடினாலுந்
திருவதனி லவளுடைய வாசமாகும்
அகத்தெரிந்தோர்க் கவள் தானே ஆனந்த ரூபி
அவள் பதத்தைப் பிடித்தாலே அனைத்துஞ்சித்தி (35)

எனப் பெண்ணாகவே மனத்திரையில் படம் பிடித்துத் தத்துவம் பாடுவதும் படித்துணர்வதற்குரியது. இவர் கணவர் தென்காசி பரிமளத்தாரும்,

வாலை சுரூபமதாய் வந்த என்னை முத்தமிட்டுச்
சேலை உடுத்தி நின்று சேர்த்தணைப்பாய் மஹ்ஷூக்கே (62)

(மஃஷூக்குக் கண்ணி ஞானமிர்த போதனி)

எனப் பாடியுள்ளார்.

புலவர் ஞானி கோட்டாறு ஷெய்குபாவா ஷெய்கு சுலைமானுல் காதிரிய்யி பாடிய மனோன்மணிக் கண்ணிகள் 242 பாடல்களில் பாடியுள்ளார். சூஃபிச (இறைக்காதல்) சூக்குமத் தன்மையினை. ஆழ்வார் திருநகரி அழகியமணவாளபுரம் உபாத்தியாயர் ஹக்கீம் மு.ஆ. ஷைகு முஹம்மது அப்துல்லாஹ் சாஹிபு தம் மெய்ஞ்ஞான மனதலங்காரப் புகழ்ச்சிதனில் மனோன்மணிப் பதிகம் நூறு பாடல்களில் அமைத்துப் பாடியுள்ளார்.

இளையான்குடி பூ.மு. முஹம்மது மஸ்தான் அவர்களும் நூறு மனோன்மணிக் கண்ணிகளைப் (கையெழுத்துப் பிரதி) பாடியுள்ளார்.

முத்துப் பேட்டை மெய்ஞ்ஞானி பீர் முஹம்மது மஸ்தான் பாவா (1894) பாடிய லைலா மனோன்மணிக் கண்ணிகள் நூற்றியொரு பாடல்களால் ஆகியது. இதனில் 'லைலா' என்ற அடைச்சொல் சேர்க்கப் பெற்று விளங்குகிறது. ஒவ்வொரு கண்ணியும் லைலாவே என முடிவுறுகிறது. இது ஒற்றுமையில் ஒரு வேற்றுமையாம். மஜ்னூனாகிய சூஃபி லைலாவாகிய இறையிடம் காதலாகிப் பலவாறாகக் கூறுவதும் முறைதானே! அதனையும் கேட்போம்.

இஸ்கு மிகுந்தே இறையரு ளாலிங்கு
மஸ்துப் பிடித்து வரக்கண்டேன் லைலாவே
அன்ன நடையா ளழகுள்ள கற்புடையாள்
கண்ணிறைந்த குணத்தாளைக் கண்டேன்
காலைப் பிடித்து மனக்கருங்குழியிற் சேர்த்துவிடக்
காளைப் பருவத்தின் மனங்கண்டே னில்லை லைலாவே (34)

மாமிசத்தைத்தான் வெறுத்து மரக்கறி மிக வுண்டு
காமியமில்லாமென் மெய் கண்டேன் லைலாவே (38)

என்றெல்லாம் பாடுகிறார்.

இருவரும் பிற சூஃபிப் புலவாகளைப் போல 'அஞ்சடுக்குமாலை' பஞ்சவர்ணப்பட்டு (55); வைரக்கடுக்கண் (56); மாற்றுக் குறையாத மௌன மனத்தாலி (58); புல்லாக்கு (60); ஜிமிக்கி (61) ஐந்து சுவடியுடனாறடுக்கு மோதிரம் (62); வளை கொலுசு (63); தண்டை (64); போன்றவற்றை அணியச் செய்துபார்ப்பேன் எனவும் பாடுகிறார். தொடர்ந்து பல்வேறு வகையான உணவு வகைகளையும் தருவதாகப் பாடுதல் படித்துப் படித்து இன்புறத்தக்கன. எடுத்துக்காட்டாக,

மனமாறக் கோழியப்பம் வல்லபமாய்த் தான் செய்து
மனமாற மகிழ்ந்து வழங்குவேன் லைலாவே (71)

சிக்கில்லா இடியப்பஞ்சீர் பெருகப் பிழிந்து
சக்கில்லா மனமுவந்து தருவேன் லைலாலே (72)

இதய மாங்காயை இனிமையாகக் கருகி
இதயாம்பரத் தட்டிலிடுவேன் லைலாவே (84)

என்றெல்லாம் சூக்குமச் சொற்கள் விம்மி நிற்க, தத்துவ வித்தகப்போக்கில் உள்ளுறைப் பொருளில் புதிர்களாகவும் பாடியுள்ளார்.

## பிரம்ம நிர்வாணம்

நிர்வாண நிலை - உரையவிழ, உணர்வவிழ உளமவிழ உயிரவிழ உளபடியை உணருபவர் அனுபூதிதான் அந்நிலை. இதனை புத்தமதம் நிர்வாணம், பூஜ்யம் என்கிறது. வேதாந்தம் முக்தி என்கிறது. சங்கரர் பூரணம் என்கிறார். முக்திக்குப் பகவத் கீதை பூரணமார்ப்பணம், பிரம்ம யோகம், பிரம்ம மைஸ்பர்சம், பிராம்மிஸ்திதி, பிரம்ம நிர்வாணம் எனும் ஐந்து படிகள் காட்டப்பட்டிருப்பதைக் காணலாம். இறுதிநிலை முடிவு நிலை பிரம்ம நிர்வாணமானது; உடலிருந்தும் (நிர்வாணம் - உடலின்மை)இல்லாதவனைப் போலிருக்கும் நிலை; இதுவே ஜீவன் முக்தி "எவன் உள்ளே சுகமுடையவனோ, உள்ளே களியாட்டமுடையவனோ உள்ளே ஒளியுள்ளவனோ அவன் உயிர் வாழும் போதே பிரம்மமாய்த் திகழ்கிறான்" - கீதை, எவர்களுடைய இந்திரியங்கள் முற்றும் அடங்கினவோ, எவர்கள் எவ்வுயிர்க்கும் நன்மையை நாடுபவர்களோ அவர்கள் பிரம்ம நிர்வாணத்தை அடைகிறார்கள். காலத்தினின்றும் கோபத்தினின்றும் விடுபட்டவர்களும் அடங்கிய சித்தமுடையவர்களும் ஆத்ம தரிசனம் பெற்றவர்களும் ஆகிய இவர்களுக்கு இங்கேயே இப்போதே முக்தி. இந்த நிலை பிரம்ம நிர்வாணம் முடிவு நிலை (5,24,26) எனும் கீதை கூறும் பின்புலத்தில் இப்பாடலடிகளை ஊன்றிக் கருதுக, இன்றேல் மயக்கம் மயக்கும்.

எனவே, இறையினை மஅரிஃபா நிலையில் நிறைவாகப் பார்த்திருக்கத் தெளிவுற்ற நிலையில் பாடுதல் எனக் கொள்ளலாம். இப்பாடல்களால் தமிழக இஸ்லாமியரின் ஆடை அணிகள், உணவு வகைகள் பற்றிய தொகுப்பும் பண்பாட்டுச் செய்திகளாகப் பதிக்கத் துணை நிற்கின்றன.அணிகலன்களைக் காட்டும் முறையை கேசாதிபாத வர்ணனையோ எனக் கொள்ள நிற்கின்றன.

சூஃபியாக்கள் - இறைக் காதலர்கள் இறைவனிடம் காதல் கொண்டு பாடிப் பரவும் பாமணிகள் பக்தி நெறியூட்டுவன; சூஃபிநெறி சேர்ப்பன; ஆண் பெண் உலகியல் நிலையற்ற காதல் உறவுக்கும், ஆண்டவன் அடியான் சூஃபிஸ நிலையான காதல் உறவுக்கும் உவமான உவமேயமும், உருவமும் உள் உருவமும் தந்து, இதய உணர்ச்சிகளை இறைவன் பால், இஷ்க் - நிலையான காதல் கொள்ள வழிவகுப்பன. இறைநேசச் செல்வர்களின் காதலர்களின் நாயக நாயகி பாவங்களில் இழைக்கப்பட்ட பாடல்கள் இறை பக்தியில் ஊற்றெடுப்பன; உறையச்செய்வன, பேரின்பக் காதல் தாகம், சூஃபிஸ வேகம், இஃது இறை மீதுள்ள பக்தி மோகம்.

## நந்தீஸ்வரக் கண்ணி

"நந்தி என்பதற்கு ருத்திரன் நந்திதேவர், உடலுக்குள்ளே ஒளிர்கின்ற சிவன், சுழுமுனை சுவாசம் எனத் திருமூலர் பாடலிலிருந்து பொருள் கூறுவர். நந்தீஸ்வரக் கண்ணியிலுள்ள 51 பாடல்களில் ஓரிடத்திலும் ருத்திரனையோ அல்லது நந்திதேவர் என்ற முனிவரையோ குணங்குடி மஸ்தான் குறிப்பிடவில்லை. தம் காலத்தில் இந்துப்பக்தர்களும் ஞானிகளும் ஆண்டு வந்த ஒவ்வொரு சொல்லிலும் இஸ்லாமிய ஏகத்துவ உயிரை ஏற்றித்தான் ஆள்கிறார். மஸ்தான் சாஹிப் அவர்களுடைய பாடல்கள் ஒவ்வொன்றையும் முழுமையாகப் படித்தால், இந்த உண்மை தெளிவாகும்" என இலக்கிய மலர்கள் (இரண்டாவது தொகுதி) பக் 91இல் ஜஸ்டிஸ் மு.மு. இஸ்மாயீல் கூறுவதைக் காண்க.

நந்தீஸ்வரன் என்ற சொல்லுக்கு செழுஞ்சுடர் (1), நடுவணை (2), மாசில் பெருவெளி (5), மோனமுனை (6), மோனை மழையூற்று முகில் (7), உயிர் (8); மெய்யான இறை (13); சித்து (15); நிசயோக முற்று நிலைப்பு (24); பரம் (32) சிவம் (49) என்று விளக்கியுள்ளார்.

குணங்குடியாரின் நந்தீஸ்வரன் கண்ணியின் வழி

1. ரூஹு என்ற சீவன் (8, 32, 490)
2. சுழுமுனைசுவாசம் (6, 21, 25)
3. காரணசரீரம் (17, 13, 42)

என்ற மூன்று பொருள் உடையது எனத்துணியலாம். நந்தீஸ்வரன் என்ற சொல் சைவசமயத் தொடர்புடையது இல்லை. அது ரூஹு என்ற சீவனையும். சுழுமுனையையும் காரண சரீரத்தையும் குறிக்குமாறு பாடப்பட்டுள்ளது என அறியலாம்.

நந்தீஸ்வரக் கண்ணியில் சித்தர் தத்துவம் அதிகம் அதிகம்.

முடிக்கும் அடிக்கும் நடுநின்ற நடுமூலமான மணிவிளக்கே! அடிமுடியாய் நின்ற நடுவணையே! நந்தீஸ்வரனே! என (2) ஆரம்பித்து

மாயவலை வீசி என்னை இவ்வுலகில் அழுத்தாமல் சித்தி பெறக் கூடிய நேசவலை வீசுதலை நிகழ்த்துவாயாக! நந்தீஸ்வரனே என இவ்வுலக மாயை வலையிலிருந்து இறைப்பாசத்தில் விழுந்து வெற்றி பெற்று,

மாயை வலை வீசி மயக்காமல் என்றன் மேல்
நேய வலைவீச நிகழ்த்து நந்தீஸ்வரனே (34)

என வேண்டுகிறார்.

ரசவாத யோகம், காயகல்பம், குண்டலிசக்தி பற்றியெல்லாம் நந்தீஸ்வரனிடம் வேண்டுகிறார்.

## குண்டலி தியானம்

இந்திய நாட்டு சூஃபி மெய்ஞ்ஞானியர்களால் குறிப்பிடப்படும் 'ஹக்கீகி' என்னும் சொல்லுக்குக் குண்டலி தியானம் என்று பொருள். தமிழ்ச் சித்தர்கள் இதனை யோகம் என்பர்.

யோகம் என்பது உடம்பிலுள்ள நுண்ணிய சுழுமுனை என்னும் நாடியின் வாயிலாகப் பிராண வாயுவின் உதவியால் மூலாதாரத்திற்கு மேல் உள்ள அனலைச் சிரசில் சேர்த்து அதனில் நின்றொழுகும் அமுதத்தினை உடலெங்கும் பரவச் செய்தலாகிய காயசித்தியைக் கருவியாகக் கொண்டு கடவுளை நினைந்து வழிபடும் முறையாகும்.

சூஃபிகள் பிராண வாயுவை றூகு கைவானி என்பர். சுழுமுனை என்னும் நாடியை அபுல் என்பர். அது மூக்கிலிருக்கும் இரண்டு துவாரங்களுக்கும் அடி மூல வழியாகும். அதற்குள் பொன் கம்பி போல் ஒரு நரம்பு ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அதனைத் தாத்தியா என்றும் பிரம்ம நாடி என்றும் கூறுவர். இறைவன் ஊரிதா என்னும் புளை நரம்பைக் காணத் திருவுளமாய் இருக்கிறான். இந்த ஊரிதா என்னும் நரம்பு மூலாதாரத்திலிருந்து சிரசின் மேல் வரைச் செல்கிறது. மூளையில் ஒரு மெல்லிய துவாரம் இருக்கிறது. அது 'வஹ' என்கின்ற பிரமந்திரம் எனப்படும். இதனைத் தவிர இரண்டும் காதின் துவாரங்களும் மூக்கின் துவாரங்களும் அதனில் சேர்ந்திருக்கின்றன். அதனால் இதனைச் 'சுல்தான் நசீரா' என்றும் வசுலுடைய இடம் என்று 'லபில் மிற்சாது' எனறும் நூறு (இறை ஒளி) உடைய இடம் என்றும் 'மக்அது சித்தது' என்றும், குண்டலி தியானம் என்றும் கூறுவர். சீவன் சுவாச குணமாகவும், கல்வில் ஒளியாகவும், நெஞ்சில் சற்றுப் பிரகாசமாகவும், நெற்றியில் தங்கமயமாகவும், குண்டலி தியானத்திலிருந்து பாடிக்கொண்டிருக்கிறது. அந்த றூறை (சீவனை) இர்ஃபான் என்னும் ஞான நோக்கினால் நோக்கப்புலப்படும். (செய்யது அப்துல் காசிம் சாஹிப், அஸ்றாறுல் புறுஹான் ஃபீ அஃமாலில் இன்சான்; பக் 42-43).

குண்டலி சக்தியைத் தேடி அலைந்து வானிலே பறக்கும் காற்றாடி போலானேன் (42) என்கிறார்.

இறைவனைத் தாயாக அழைத்து விளித்துப்பாடும் கண்ணிகளில் 44,45,46 தாய்ப்பாச மேலீட்டினைக் காணலாம்.

கன்றுக்கு இரங்கி அருளும் பசுவினைப் போல என்மீது என்றும் இரங்கி அருள்க நந்தீஸ்வரனே! என இறைஞ்சுகிறார்.

## 11. கீர்த்தனைகள்

"மஸ்தான் சாகிபு ஒலியுல்லாவின் பாடல்களில் அவருடைய கீர்த்தனைகளுக்கு முக்கிய இடமுண்டு. ஞானக்கருத்துக்களை உள்ளடக்கிய சிறந்த சாகித்தியங்களாக அவை திகழ்கின்றன. அத்துடன் அவற்றில் சந்த நயமும் எளிய பதங்களும், அவற்றின் கருத்தும் சாதாரண ஜனங்களை இலகுவில் கவர்ந்துவிடுகின்றன. அவர்களுடைய பாடல்களிலேயே சாதாரண மக்களை மிகவும் கவர்ந்தவை இக்கீர்த்தனைகள்தாம் எனலாம்" என அறிஞர் ஆர்.பி.எம். கனி அவர்கள் இனிது உரைப்பார்.

### கீர்த்தனைகள்

குணங்குடியார் பாடல் தொகுப்பில் இருபத்திரண்டு கீர்த்தனைகள் உள்ளன. அவை இசையோடு தத்துவ ஒளிர்வும் தெளிவும் இனிமையும் பெற்று இலங்குகின்றன. இயைபுத்தொடை சிறந்து விளங்குகின்றன.

சூபிசக் கருத்துகள் சித்தர் நடையில் பாடப்பட்டுள்ளன. சாதி சமய வேற்றுமையின்றிப் பாடுவதற்கு ஏற்றனவாக விளங்குகின்றது.

1) புன்னாகவராளி 2) சௌராஷ்டிரம்
3) பந்துவராளி 4) கல்யாணி
5) பைரவி 6) கேதார கௌளம்
7) சாவேரி 8) அசாவேரி
9) பியாகடை 10) செஞ்சுருட்டி
11) ஆகிரி 12) பரிசு
13) ஆனந்த பைரவி 14) காம்போதி
15) தன்னியாசி 16) அடானா
17) தோடி முதலான இராகங்களிலும்

1) அடசாப்பு 2) சாப்பு 3) ஆதி 4) ரூபகம் 5) ஏகம் ஆகிய ஐந்து தாளங்களிலும் இசை வகுக்கப்பட்டுள்ளன. 22 பல்லவிகளும், 22 சரணங்களும் அமைந்துள்ளன.

"இல்லல்லாகூ" வென் றெனை மறந்து கொண்டுனையே
சொல்லவருள் மெய்ஞ்ஞானச் சுடரே பராபரமே (46)

எனும் குணங்குடியார். இல்லல்லாகூ என்றென்னை மறந்து கொண்டிருப்பாய் என் நெஞ்சமே எனும் (2) கீர்த்தனை உயர்ந்த, சிறந்த மந்திரமான "லாயிலாஹ இல்லல்லாஹு... " என்ற கலிமாவினை "திக்று" = உச்சாடனம் செய்ய, செய்து இறையின்பத்தில் இலயிக்க சொல்லிப் பாடுகிறார்.

"அல்லாஹு வென்னுங்கள் சதாகாலம் அல்லாஹு வென்னுங்கள்" எனும் (13) கீர்த்தனையும் திக்றாடி நாத்தெழும்பேறி நன்மைகள் நாடப் பாடியுள்ளார்.

இருபாலரையும் (ஆண், பெண்) இறையைத் தேடி நாடி ஓடும்படி அறிவுரைக்கின்றார். "ஆண் கொண்ட பெண்ணும், பெண் கொண்ட ஆணும் நிலையில் ஆன்ம ஞான அனுபவத்தை - இருபாலருக்கும் ஒரே இறை என்ற தத்துவ வித்தகம் பேசுவார்.

"பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையும் கேட்டையும் பேசுவோமே நெஞ்சமே" எனப்பெண் கொண்ட ஆண்பட்ட பாட்டையும் வருணித்து ஆணாகப்பிறந்து விட்ட பேய் படுத்தும் பாட்டையும் கேட்டையும் நனிச்சிறந்த நிலையில் புதுமரபு காட்டி சொற்சித்திரமாக்கிப் (கீர்த்தனை 3) பாடியுள்ளார். சிற்றின்பத்தில் பெண்மயக்கம் கொண்டு அழுந்திப் பேரின்பத்தை இழக்கும் ஆண்களுக்கும் அறிவுரை செய்கிறார். பெண்களால் வரும் தீமைகளைப் பட்டியலிடுகிறார். அவ்வாறே ஆண்கள்மீது மயங்கித் திரியும் பெண்களுக்கும் ஆண்களால் வரும் தீமைகளைக் கூறுகின்றார்.

சூத்திரப்பாவைக் கயிறற்று வீழுமுன்
சூட்சக் கயிற்றினைப் பாரடா-அதி
சூட்சக்கயிற்றினைப் பாரடா

எனும் கீர்த்தனைப் பாடலைப் பாடாத-முணுமுணுக்காதவர்களே இல்லை எனலாம்.

இப்பாடல் சூட்சமக் கயிறு ரூஹ் ஆக உருவகித்து அறிவுரை கூறும் அற்புதப் பாடலாகும். பொம்மைகள் போல் இயங்கும் நாம் இறந்து உடல் விழுமுன், இறையினை அறிந்துகொள்வதே வாழ்வின் குறிக்கோள் என உணர்த்தும் உன்னதப் பாடல் ஆகும்.

மூவாசையை முனிந்து பாடும் பாடல்கள் உண்டு. (2:4; 4:0; 4:12; 15:9; 22:1; 16:4); பெண்ணாசையினை 4:3; 4:10; 8:1; 12:2; 15:4; 17:10 இழித்தும் பாடுவார்.

சரக்கலை, எண் தத்துவங்கள், நிலையாமை, கஞ்சா, அபின், கடிதல் உடலை வெறுத்தல் போன்ற கருத்துக்களையும் பாடியுள்ளார்.

நியாயத்தை என்ன சொல்வேன் எனும் கீர்த்தனை (16) இறைவனை நம்பி அவனிடம் அடைக்கலமாகித் தன்னை அவ்விறைவன் படுத்திய பாட்டையெல்லாம் சொல்லி இது நியாயம் தானா என்று கேட்கின்ற முறையில் கீர்த்தனை வடிவமாகியுள்ளது. இது செஞ்சுருட்டி இராகம். பாமர மக்களின் உள்ளங்களை இன்பலயத்தில் இழுப்பது. எளிய மக்களைக் கவர்ந்த இராகம். அழகுடன், பழகு வழக்குச் சொற்களில் ஆற்றொழுக்காகப் பாய்ந்து வரும் கீர்த்தனை.

"எங்கள் குணங்குடியானை என்றைக்கோ காண்பேன்" எனும் கீர்த்தனை (17) இறைத்தத்துவம் இயம்புவது ஆகும்.

ஒரு பக்தன் உண்மை நிலையினை அறியும்பொழுது இறைமயம் எனும் ஒன்றினில் ஒன்றி மூழ்கிவிடுகிறான். "நான்" எனும் நிலையை இழந்துவிடுவான். குணங்குடியாரும் "என்னையறிந்தேனே இனி; ஏகாந்தமானேனே (18) எனும் கீர்த்தனையில்

தன்னை மறந்து தலைகீழாய் நில்லாமல்
என்னை மறந்தும் நினைநினைந்திட்ட போது

என ஆகும் நிலையினைக் காணலாம். இங்ஙனமாக கீர்த்தனைகள் இறை கீர்த்தியினை ரீங்காரம் செய்வன்.

## இசைத்தமிழ்ப் பணி

"குணங்குடியார் பாடல்களில் பெரும்பாலானவை இசைத்தமிழைச் சேர்ந்தவை. சந்தப்பாடல்களும் சிந்துப் பாடல்களால் ஆகியவை, இவை யாவும் இசைத்தமிழ் இலக்கணப்படி அமைந்தவை.

இசைத்தமிழறிஞர் முனைவர் வீ.ப.கா. சுந்தரனார் அவர்கள் " கண்ணிகள் எனும் தமிழ்ப் பொற் கிண்ணங்களில் இசுலாமியத் தேனமுதமும், பனிப்பழக் கூட்டுகளும் நிறைந்துள்ளன" என்றும் "குணங்குடியாரின் பாடல்களில் இசை வடிவங்களுக்கு இடம்

தரத்தக்க சொல்லமைப்பு. தாஜ்மகால் கட்டடம் போல் நிற்கும் மோனையும் எதுகையும் பாண்டிய மன்னரின் யானைப் படை வரிசைபோல் நடைபோடும், கீர்த்தனையின் சரணங்கள் 8, இயைபுகள் 16 இயைபுகள் பதித்து விடுவார்" என்கிறார்.

"குணங்குடியார் இசை மரபில் வந்தவர்" என்கிறார் ஆய்வாளர் திரு. சவுந்தர பாண்டியன். "குணங்குடியார் இசைக் குடும்பத்தில் பிறந்தவர் எனலாம். அவரின் பாட்டனாரின் தந்தை நூர்தீன் ஓர் இசை வல்லுநராகத் திகழ்ந்தவர்" என்கிறார்.

ஊனாசி என்ற முகியித்தின் சதகம் (22) பாடல் ஓசைநயம் 33.33% என்று முனைவர் இரா. திருமுருகன் கணக்கிட்டும் "போவோம் குணங்குடிக்கு" எனும் பாடலில் 22.42% ஓசைநலன் உள்ளது என்றும் கூறிக் குணங்குடியாரின் பாடல்கள் இசைநலங் கனிந்து இன்பந்தருகின்றன என்கிறார்.

மகுமூது நபி யாண்டவர் துதி என்பது 96 சீர் ஆசிரிய சந்த விருத்தம் ஒன்றினாலேயே பயின்று வந்துள்ளது. அருணகிரி நாதருக்குப் பின் இதே வகையில் "பரம சிவம் சின்மயம்" என்ற 192 சீர் சந்த விருத்தத்தைக் காணலாம். வள்ளலாருக்கு வழிகாட்டி குணங்குடியாரே எனலாம்.



## 3. இலக்கியத் திறன்

குணங்குடியார், பழமொழிகள் மூலம் கருத்துத் தெளிவும் எளிமையும் ஏற்படுத்துகிறார்

1) உள்ளங்கை நெல்லிக்கனிபோல எனும் பழமொழியை உவமையாகவும்

"கைக்குள் வளர் நெல்லிக்கனிக்கு நிகராகக் கடாட்சித்து அருள்புரியவும்" என்றும்

"கருநெல்லிக்கனி கைக்குள் வாய்க்கும்"

என்றும் அமைத்துப் பாடுவார்.

இப்பழமொழியின் வடமொழி வடிவமான 'கரதலாமலகம்' என்பதை இரு பாடல்களில் ஆட்சி செய்கிறார்.

2) தாயையும் சேயையும் (குழந்தையும்) சேர்த்து அன்பையும் ஆர்வத்தையும் வெளிப்படுத்தச்

"சேய்க்கிரங்கும் தாய்போல் தனக்கருள் புரிய " எனப் பல இடங்களில் வேண்டுகிறார்.

3) கன்றைத் தேடி ஓடிவரும் பசுவைப்போல் எனும் பழமொழியைத்

"கன்றினுக்குத் தாய் கனிந்திரங்குவது" போலக் கருணை வைத்துத் தமக்கு அருள் வேண்டுகிறார்.

4) 'உப்பும் நீரும் கலந்தது போல' என்னும் பழமொழியை

இறைவன் உயிரினுள் உயிராய்க் கலந்திருக்கும் தன்மையை விளக்கப் பொருத்திப் பாடியுள்ளார்.

5) கல்லினுள்ளிருக்கும் தேரைக்கும் அமுதளிக்கும் எனும் பழமொழியைக் 'கல்லினுள் தேரைக்கும் அமுதளிக்கும் கண்ணே றகுமானே' எனப்பாடுவார்.

6) நிற்கும் பொழுது ஆடை நெகிழ்ந்தால் திருத்தும் கைக்கு நன்றி கூறுவதுண்டோ?

7) 'கொம்புத் தேன்' பற்றிய பழமொழி உருமாறி 'எட்டாக் கொம்பினில் இருக்கின்ற தேனே இறங்கிடாய்' என்றுள்ளதைக் காணலாம்.

8) எறும்பூரக் கல்லும் தேயும் என்னும் பழமொழியைச் சிறிது மாற்றி 'இரும்பூரக்கல்லும் தேயும்' என ஆண்டுள்ளார்.

9) மந்திரத்தால் மாங்காய் விழாது

10) ஐந்து பழமொழிகளை ஒரே பாடலில்;-

1) கையில் வெண்ணெய் வைத்துக் கொண்டு நெய்க்கழுத பாவி

2) கற்பக விருக்ஷத்தின் அடியிலே காஞ்சிரங்காய் தேடி நின்ற பாவி

3) கொக்குப் பிடிக்க நாய்க்குத் தெரியுமோ என்ற கொள்கை குடி கொண்ட பாவி

4) குருடர்கள் யானையைக் கண்ட கதைபோலச் சற்குருவையறியாத பாவி

5) சர்க்கரை கற்கண்டு அமுதிருக்கக் கசங்குடிக்கின்ற பாவி எனத் தம்மை இகழ்ந்துரைக்கும் இடங்களில் 'கையில் வெண்ணெயிருக்க நெய்க்கழலாமா' 'கற்பகத்தைச் சார்ந்தும் காஞ்சிரங்காய் கேட்கலாமா'; நாயாலாகுமா கொக்கைப் பிடிக்க; ஆனைகண்ட பிறவிக் குருடர் அடித்துக் கொண்டது போல; அமுதம் உண்கின்ற வாயால் விடம் உண்பார்களா? என ஐந்து பழமொழிகள் இடம் பெற்றுள்ளன.

இறைவனைக் காணத் தான் மேற்கொண்டுள்ள முயற்சி வீணாகப் போய்விடக்கூடாது என வேண்டும் ஒரு பாடலில் ஆறு பழமொழிகள் அமைந்துள்ளன அவை:

கானுக்கு எரித்த நிலவு போல, கல்லில் பெய்த மழை போல, ஆழித்துரும்பு போல, ஆனைவாய்க்குள் போன கரும்பு போல, கோனைப்பழித்த குடிமகன் போல, குருவற்ற சீடன் போல எனும் பழமொழிகளின் ஆளுமை காணலாம்.

கடுகைத் துளைத்து ஏழுகடலைப் புகட்டியது போல எனும் பழமொழியை வினையாட்டினாநந்தம் எனும் பாடலில், ‘கண்டித்த கடுகில் ஏழு கடலைப் புகட்டிக் கலக்கி விளையாட வல்லீர்’ என்கிறார்.

வீணில் போகாமல் இறையருள் பொருந்துவதற்கு அருள்புரிய வேண்டும் பொழுது,

"பூஞ்சோலை வாழும் ஒணான் போலவும்,
பொற்றாமரைக் குளத்துத் தவளை போலவும்"

எனும் பழமொழிகள், ஆளுமைக் காணலாம்.

இலவுகாத்த கிளி, கள்ள மனம் துள்ளும், அனலிலிட்' மெழுகு, ஆடி ஓய்ந்த பம்பரம் போல, மடைவாய்க் கொக்கு, காதற்ற ஊசி வராது காணும் கடைவழிக்கே, காந்தம் ஈர்க்கும் ஊசி, போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து, மலை கெல்லி எலி பிடித்தது போல, கானல்சலமாம், நீர் மேற் குமிழி, கோணல் கரும்பும் தித்திக்கும், இன்றிருப்பார் நாளையில்லை, கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாகுமா? மல்லாந்துபடுத்துக் கொண்டு மேல் உமிழ்ந்தாலும் தன் மார்பில் தான் விழும், மடம் புகும் நாய் போல, நண்டளந்த நாழி போன்ற பழமொழிகளையும் பயன்படுத்தியுள்ளார்.

### மரபுத் தொடர்கள்

நெல்லில் பதர், பட்டதும் கெட்டதும், விட்ட குறை தொட்ட குறை; யாருக்கு வந்த விருந்தோ, சண்டியிலும் சகசண்டி

### கங்கை

இறைவனை நினைந்து கசிந்துருகிக் கண்ணீர் வடிப்பதை விண்ணிலிருந்து பெருகி வந்த கங்கையாகக் கூறுகிறார்.

### வடவனல்

‘வடவனல்’ நெருப்பின் கொடுமையைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

**சங்கநிதி, பதுமநிதி**

செல்வ வளர்ச்சியையும் நிறைவையும் குறிக்க சங்கநிதி பதுமநிதிகளைக் குறிப்பிடுகிறார்.

கொடைச் சிறப்பைக் குறிக்கக் கர்ணனையும் பதவிச் சிறப்பைக் குறிக்க தேவேந்திரனையும் துன்ப மிகுதியைக் குறிக்க சநீஸ்வரனையும் குறிப்பிடுகிறார்.

**பரிபாஷைச் சொற்கள்**

சிவராஜயோகம், அட்டாங்க யோகம், ஆறு ஆதாரம், இடைபிங்கலை, சுழிமுனை, மூக்குமுனை, வாசி, சோமன் மதிவட்டம், வாலை அம்பிகை, அங்க வங்க சிங்க, பட்டிப்பசு, பாற்பசு, சோமப்பால், வாமப்பால், காமப்பால், ஓசை மணிமண்டபம், எட்டு, நான்கு, பன்னிரண்டு, ஐம்பத்தோராட்சரம் - இவை அவர் கையாளும் பரிபாஷை சொற்களாம்.

**உருதுச் சொற்கள்**

சறுதாற, சடுதி, கஞ்சா, குசார்

**பார்சிச் சொற்கள்**

பாராக்கள், பீங்கான், சுமார்

**மராத்தி சொல்**

வில்லங்கம்

**தெலுங்கு**

சலுவுதுரை, கன்னடம், அக்கரை

**மலையாளம்**

பறைந்தான்

**கடற்கரையோர முஸ்லிம் மக்கள் மத்தியிலுள்ள வட்டாரச் சொற்கள்:**

மட ஒப்பாக்குடிக்கி, நாற்றக் கருவாடு, இரணங்கள், தட்டைப் பீங்கான், நண்டளந்த நாழி

**அரபிச் சொற்கள்**

குவியத்து, தாத்து, சிபுரியா, கன்சுல் மகுபி, மஸ்கூத்து, அன்கு, கதீம், அமா, மவுஜீது, சிறுபு, அகதிய்யத், ஆலம் அறுவாகு,

ஆலம்மிதால், ஆலம் அசுசாம், ஆலம் இன்சான், பகுதியத், ஜலால் ஜமால், குதீகுல் பகுது, கபுல், லாகூத்து, ஜபரூத்து, பகா, குவிய்யத், நகுசியத்து, பறு தானியத் சுபுகானியத் அஇியானியத், அலிபு, துக்தா, அருலல் உலா, ஆலம், அசுபல், அல்லா, றகீம், இல்லல்லாஹ்

## வடசொற்கள்

ஜெகஜால வலை, ஜெகஜோதி, விருக்ஷம், ராஜாங்கம், ரஜகதங்கள், ஜெய ஜெயா, பொக்கிஷம், சாலோக, சாமீப, சாயுச்சிய சந்தானம், சர்வ பரிபூரணானந்த மோனப் பிரசாதம், வாசாம கோசரம், நிர்குண நிர்விஷய, நிருமலம், நிருவிகற்பம், துர்க்கந்தம், நிஷ்பிரபஞ்சம்

## தேர்ந்த தமிழ் செற்சொற்கள்

விரிகருணைச் செஞ்சுடர், அருள் அடைகாக்கும், அருள் முல்லை குணங்குடிபூக்கும், அருள் பழுத்திடிரோ, கவியுந்திருக்கருணை, அமிர்தப் பிழம்பே, ஆழாழி, கோலத்திருவடிவுக் கோதையர், தவக்கனல், துவளும் துடியிடை, பூத்து மலர்ந்திருக்கும் பூ

## காட்சிப்படுத்தும் தொடர்கள்

கல்வுமலம், பூத்த பொற்பு, விரிகருணை, பின்னிய பருவம், கள்ள இருள், அருள் மழை, சோதித்திரள், துவக்கவலை

## முரண் சொற்கள்

இரவுபகல் ; முன்னும் பின்னும் ; அடிமுடி; சராசரம்; அங்கும் இங்கும் ; போக்குவரத்து; ஆதியாந்தம் ; இன்பதுன்பம் ; ஏவல் விலகல் ; இதமகிதம்.

## இரட்டை மொழிகள்

மடமடப்பான்; களகளென்றே; கதகதென்று; சதசதென்று; குமுகுமென; பளிச்சுபளிச்சென்று;

## பேச்சுவழக்கு

கோடானுகோடி, பட்டபாடு, காசுபணம், சண்டாளன், குட்டிச்சுவர், தோசி, பாஷாண்டி வேஷாண்டி, லொட லொட்டை, கல்லங்கம், பல்லைக்காட்ட, அஞ்சாதடா, டம்பஜம்பம், காமாட்டி

### கொச்சை சொற்கள்

மடையன், மட்டிப் பயல், பண்டம்படுதலை, புழுக்கப் பயல், அடவெங்கப் பயல், போறேன், பேசுதே, கடை மயிர் தான், கடுகி முடிகி, ஐயையோ, எச்சில்தனம், போச்சு, படுசுட்டிகள், போக்கிரி, நாரிகள்.

### கலைச் சொற்கள்

மூர்த்தி, கூத்தன், ஆகமம், அட்டாங்கயோகம், சிவராசயோகம், குண்டலி போன்ற பரிபாஷைச் சொற்கள் (கலைச்சொற்கள்) பயன்படுத்தப்பட்டுள்ளன்.

### பேச்சு மொழி வடிவு

வாய்சார் (57); வாய்த்தார் வேணதெலாம் (116); வேண்டுவதெல்லாம் என்னதில் (121) எதில் செத்தசவம் (151) சின்னஞ்சிறிது (151); ஊசாடுதல் (79); நட்டநடு (143) தருபேரின் (141); தருவோரின் மத்த (204); மனுசன் (204); புத்தி (புந்தி, புத்தி) போன்றவை நிராயமே கண்ணிகளில் காணலாம்.

வட்டார வழக்கு, கொச்சை வழக்கு

வெங்கப்பயல் (1), ஆமக்கள் (2), மூதேவி (3), கேடிகள் (4), சுத்த மாராட்டம் (5), சூதானம் (6), குசாலாகச் சாய்ந்து (7), மூதேவித்தனம் (8)

கெக்கரி தொட்ட பயல், புழுக்கப்பயல், பண்டம் படுதலை, குண்டிக்கருத்துணி, கொள்ளிக் கண்ணன், இடுமடையர், நாய்க் குட்டிகளான படுசுட்டிகள், லொடலொட்டை, பீறல், இந்தப்பயல்.

### ஒரு பொருட்பன்மொழி

'கூறுதல்' என்ற பொருளில் பின்வரும் ஒரு பொருள் பன் மொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அறைதல் (196); இசைத்தல் (121); இயம்புதல்(93); செப்புதல்(236); சொல்லருள் செய்தல் (172); சொல்லுதல் (6) பகர்தல் (75) பேசல் (236); நிகழ்த்துதல் (92) நவில்தல் (190) என்பன நிராமயக் கண்ணிகளில் காணலாம்.

### உடல் என்பதற்கும்

உடலம், புழுக்கூடு, புழுக்குடல் என்ற சொற்களைக் காணலாம்.

## சொல் சிறப்பு

பின்வரும கண்ணிகள் கற்கக் கற்கச் சொற்களின் சிறப்பால் பயன் மனதை எளிதில் கவருவன

1) பிரிய அருள நிலையை பெற்றார் பெற ாரெனவும்
அறியா வெறியன் ஐயா ஐயா நிராமயமே (85)

2) தாயிருக்கப் பிள்ளை தளரா தொருபோதும்
நீயிருக்க நான் தளர நேரோ நிராமயமே (64)

3) பல்லாயிரங்கோடி பகிரண்டமும் எவையும்
எல்லாம் உனதடிமை என்றாய் நிராமயமே (126)

சொல்லிய சொல்லை மீண்டும் மீண்டும் பயன்படுத்திக் கருத்தை நன்கு வெளியிட்டு மனதைக் கவருமாறு,

அபயம் எனைக் காப்பது அண்ணலே உன்னுபயம்
உபயம் உபயம் உனது பயம் நிராமயமே (11)

எனும் கண்ணியில் உபயம் என்ற சொல் திரும்பத் திரும்ப வந்து ஒரே பொருளை உணர்த்துகின்றது. பாடலின் கருத்தும் மனத்தில் பதிகிறதுதானே!

கொல்லா, கொல்ல, கொலை என்ற சொற்கள்
கொல்லா விரதத்தைக் கொல்லாக் கொலைஞ ருளங்
கல்லாகத்தானோ கணித்தாய் நிராமயமே (61)

எனும் கண்ணியில் பயன்படுத்தப் பட்டுள்ளது.

## ஞானத்தோடு இயைந்த சொற்களின் புத்துணர்ச்சி பெற்ற புணர்ச்சிச் சொல் சிறப்பு

தொடரிவினை *(4:4)*, மும்மலக்காட்டின *(13:4)*, மானாபிமான மடமை *(15:1)*, பேரருள் கங்கை *15:10*, அஞ்சுபுல வேடர் *17:10*, காமவெட்டை நஞ்சு *2:1*, நுங்கும் நுரையுமாகப் பொங்கும் காமக்கடல் *21:5*

## உவமை உருவகங்கள்

*கீர்த்தனைப் பாடல்களில்*

*1)* மலை *4:7, 2)* கரு *4:7, 3)* தண். *4:12, 4)*பேய் கண்ட *8·* அது, *5)* கையில் *11:3, 6)* மாங் *15:3, 7)* கொள் *15:4, 8)*சப் *18:2, 9)* நெடு *20:4,*

சொற் பொருட்பின் வருநிலையாணி

*1) நோக்கினு.....17:8*

*2) நோக்கு.... 1:4 முகியித்தீன் சதகம் நினைவு*

திருநாவுக்கரசர் - தேவாரம்

குணங்குடியார் தொடுக்கும் வினா

சாத்திரங்கள் ஓதுஞ்சழக்கர் தமக்கு அருள்
மாத்திரைப்போதேனும் வருமோ நிராமயமே (44)

என்பதற்கு திருநாவுக்கரசர் தேவாரத்தில் அடிநாதமாகச் சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்? - என்பதமைந்துள்ளதல்லவா?

திருமந்திரம்

குணங்குடியார்

முகக்கண் விழியொளியே முக்திதரும் உத்தமசன
அகக்கண் திறந்தோர்க்கு அறிவோ பராபரமே

பராபக்கண்ணி-54

என்று பாடுவது

முகத்தில் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்

என்னும் ஒன்பதாம் தந்திரத்தினைப் ஒத்துள்ளதாகக் காணலாம்.

திருக்குறள்

நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை என்னும்
பெருமை உடைத்து இவ்வுலகு (336)

எனும்குறட்பாவினை அடியொற்றிக் குணங்குடியார்

இன்றுள்ளோர் நாளைக்கு இருப்பது பொய் என்பதையான்
கண்டு கொண்டேன் ஐயா என் கண்ணே றகுமானே

-றகுமான் கண்ணி(37)

என எடுத்துரைத்துள்ளார்.

## தாயுமானவருடன் ஒப்பீடு

| குண்ங்குடியார் | தாயுமானவர் |
| --- | --- |
| 1. சோற்றுப் பொதியைச் சுமந்தே திரிந்தலைந்தே ஆற்றமாமல் நின்று களைத்தழுதேன் பராபரமே | 1. சோற்றுத் துருத்திச் சுமை சுமப்பக் கண்பிதுங்கக் காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே |
| 2. கண்ணே கருத்தே என் கண்மணியே கண்ணிறைந்த விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே(50) | 2. கண்ணே என் கற்பகமே கண்ணிறைந்த விண்ணே ஆனந்த வியப்பே பராபரமே(10) |
| 3. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி கிடைந்து மனம் புண்ணாவதற்கோ புகுந்தேன் நிராமயமே (53) | 3. எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம் புண்ணாகச் செய்தது இனிப் போதும் பராபரமே (35) |
| 4. தாயிருக்கப் பிள்ளை தளராது ஒருபோதும் நீயிருக்க நான் தளர நேரோ நிராமயமே (64) | 4. தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போல் எவ்விடத்தும் நீயிருந்தும் நான் தளர்ந்து நின்றேன் பராபரமே(249) |

## தாயுமானாரும் குணங்குடியாரும்

குணங்குடியார் தம் பாடல்களில் அமைந்திருக்கும் சொற்றொடர்கள் சிலவற்றிலும் அடிகள் சிலவற்றிலும் தாயுமானார் பாடல்களின் சாயல் தென்படுகிறது.

> ' சொல்லு மெய்ஞ்ஞானச் சுகக்கடலை யுண்டியன்
> சும்மா விருக்க வருள்வாய்' -(மு.ப.7)

என்ற அடி, தாயுமானாரின்

> ' சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
> சும்மா விருக்க வருளாய்' -(சுகவாரி 3)

'சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிது'
-(தேசோமயானந்தம்-8)

என்னும் அடிகளையும்,

'நீக்கமற அங்கிங்கெனாது வெங்கெங்கு மொரு
நிறைவெனது முன்னிற்கவே' -(மு.கி.சத.1:4)
'அருள கண்டாகார வானந்த பூர்த்தியெனும்' -(மு.கி.சத.1:8)
'எங்குமருள் வாரிவாகி யங்கிங் கெனாதாகி' -(மு.கி.சத.3:1)

என்ற அடிகள், தாயுமானாரின்,

'அங்கிங் கெனாதபடி யெங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி' -(பரசிவ வணக்கம்-1)

என்ற அடியினையும்,

'அதிசொற் பிரகாச வருடே சோமயந்தந்த' -(மு.கி. சத.1:8)

என்ற தொடர், தாயுமானாரின்,

'திவ்ய தேசோ மயத்தை' -(பரசிவ வணக்கம்-5)

என்ற தொடரையும்,

'கல்லு மொரு போதேனு முருகு முருகாக் கருங்
கன்னெஞ்சனான வம்பன்' -(மு.கி. சத.6:6)

என்ற அடி, தாயுமானாரின்,

'கல்லெனு மைய வொரு காலத்தி னுருகுமென்
கன்னெஞ்ச முருகவில்லையே' - (சுகவாரி-3)

என்ற அடியினையும்,

'மலையிலக்கான குறியுள்ள நீர்' -(மு.கி. சத.1:9)

என்று தொடர், தாயுமானாரின்,

'மலையிலக் கென நம்பினேன்' -(மௌனகுரு வணக்கம்-10)

என்ற தொடரினையும்

'போக்குவர மற்ற பரிபூரணானந்தம்' -(மு.கி. சத.1:1)

என்ற தொடர், தாயுமானாரின்,

'போக்கொடு வரத்துமாகி' -(ஆனந்தமானபரம்-2)

என்ற தொடரினையும் நினைவுறுத்தும்.

குணங்குடியாருக்கு வேறு பல புலவர்களின் பாடல்களிலும் பயிற்சி உண்டு என்பதற்குப் போதிய சான்றுகளைக் காட்டலாம்.

' மண்ணகமும், விண்ணகமும் அணுவைத் தொளைத்ததில்
மாட்டிவிளையாட வல்லீர்' -(மு.ப.3)

' அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டி'
-(திருவள்ளுவமாலை)

என்ற அடியினையும்,

' கடுகிலெழு கடலைப் புகட்டி' -(மு.ப.3)

என்ற தொடர், இடைக்காடனாரின்,

' கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டி' -(திருவள்ளுவமாலை)

என்ற தொடரினையும்,

' நித்திரை தனிற்செத்த பொய்யான மெய்யுடலை' -(மு.ப.9)

என்ற தொடர், வள்ளுவரின்,

' உறங்குவது போலும் சாக்காடு' -(நிலையாமை.9)

என்ற தொடரினையும்,

' நாதாந்த மூர்த்தி' -(மு.ப.5)

என்ற தொடர், சுந்தரரின்,

'ஏழிசையாய் இசைப் பயனாப்' -(பத்திமையும்.10)

என்ற தொடரினையும்,

' மாதா பிதாவு நீயே' -(மு.ப.6)

என்ற தொடர், மணிவாசகரின்,

' அம்மையே அப்பா ஒப்பில்லா மணியே' -(பிடித்தபத்து.3)

என்ற தொடரினையும்,

' மாதாவினுங் கருணையுள்ள நீர்' -(மு.கி. சத.1:)

என்ற தொடர், மாணிவாசகரின்,

'பால் நினைந்தூட்டும் தாயினுஞ் சாலப் பரிந்து'
-(பிடித்தபத்து-9)

என்ற தொடரையும்,

' ஊனாகி யுயிராகி யூனுயிர்க் குயிரான' -(மு.கி. சத.1:10)
' ஊனாகி யூனி லுயிராகி' -(மு.கி. சத.3:2)
' விண்ணாகி மண்ணாகி யெண்ணாகி' -(மு.கி. சத.3:3)

என்ற தொடர்கள், மணிவாசகரின்,

' வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி யுயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான் எனதென் றலைவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவேனே'

-(திருச்சதகம் அறிவுறுத்தல்-5)

என்ற பாடலையும்,

' பார்த்ததிக் கெங்குமொரு வெளியாகி' -(மு.கி. சத.3:5)
என்ற தொடர், மாணிவாசகரின்,

' அரியானே யாவர்க்கும் அம்பரவா'

-(திருச்சதகம் அறிவுறுத்தல்-5)

' அணுவினுக் கணுவான காரணத்தை' -(மு.கி. சத.2:7)
என்ற தொடர் உமறுப் புலவரின்,

' அணுவினுக் கணுவ்..ய்' -(சீறா. கடவுள் வாழ்த்து-1)
என்ற தொடரையும் நினைவூட்டுகின்றன.



# மகாகவி பாரதியார்

## பொருளடக்கம்

# மகாகவி பாரதியார்

## 1. கவிமுகம்

'சங்கத் தமிழ்', 'கம்பன் தமிழ்' என்ற வழக்காறுகளுக்கு இணையானது 'பாரதி தமிழ்'.

தமிழ் இலக்கியத்தின் புலர்காலைப் பொலிவு சங்கத் தமிழென்றால், அதன் உச்சி நேரத் தகத்தகாயம் கம்பன் தமிழ். தொடர்ந்து நேர்ந்த பேரிருளின் அடித்தளங்களைத் தகர்த்து ஒரு புதிய விடியலுக்கு, புதிய விழிப்புக்கு அழைத்துச் சென்றது பாரதி தமிழ்.

தன்னைப் புதுப்பித்துக்கொள்ள முயலும் இலக்கியம் ஏதேனும் ஒரு மேதையின் வாயிலாக அதனைச் சாதித்துக் கொள்கிறது. தமிழ்மொழி தன் உயிர்ச்சாரத்தை மீட்டுக்கொள்ளவும், புதிய பரிசோதனைகளுக்குத் தன்னை ஆட்படுத்திக்கொள்ளவும், கால மாறுதல்களுக்கு ஏற்பப் புதிய நடையும் உடையும் பூணவும் ஒரு வரலாற்று வாய்ப்புக்காகக் காத்திருந்தது.

அந்தக் காத்திருப்புத் தவம் தந்த வரம் பாரதியார்.

ஒரு மகாகவி தோன்றும் சூழல் எத்தகையது என்பது குறித்துப் பாரதியாருக்கு ஒரு தெளிவு இருந்தது. 1906-ல் 'கலை' என்ற தலைப்பில் 'இந்தியா' இதழில் ஓர் அருமையான தலையங்கம் எழுதியிருந்தார் பாரதியார். தம் தலைமுறையில் ஒரு கம்பன் இல்லையே என்று ஆதங்கம் கொண்டு எழுதினார்:

"இங்கே கம்பனைப் போன்ற கவிஞர்கள் இக்காலத்தில் யார் இருக்கின்றார்கள்? கம்பனைப் போன்ற கவிஞர் அடிக்கடி தோன்றுவதில்லை யென்பதைச் சிலர் ஆக்ஷேபமாகக் கொண்டு வரலாம். கம்பனுடைய பெருமையில் நூற்றில் ஒரு பங்கு கொண்டோர் யாவர் இருக்கிறார்கள்? பாண்டித்தியம் உடையோர்களும், பாண்டித்தியம் இருப்பதாக நினைத்துக் கொள்வோர்களும் கவிகள் கூறத் தொடங்கிவிடுகிறார்கள். கவித்திறமை இருப்பதற்குப் பாண்டித்தியம் ஒருவாறு அவசியமென்றாலும் பாண்டித்தியம் இருப்போர்களுக் கெல்லாம் கவிதாசக்தி இருப்பதில்லை யென்பதை நம்மவர்கள் மறந்துவிட்டார்கள். இலக்கண வித்துவான்கள்கூடத் தாம் கவி பாடாமல் இருந்தால் அது மதிப்புக் குறைவென்று நினைத்துக்கொள்ளுகிறார்கள். இங்ஙனமாக உண்மையான கவிதை இந்நாட்டிலே மறைந்து போய்விட்டது."

இருபத்து நான்கு வயது இளைஞராக இருந்தபோது பாரதியார் எழுதிய கருத்து இது. மின்னற்சுடர் வீசும் தேசபக்திப் பாடல்களும், கவித்துவம் கொழுந்துவிடுகின்ற உயிர்க் கவிதைகளும் அவரிடமிருந்து பிரவாகமாய்ப் பெருகாத காலம் அது. மிகச்சில கவிதைகள்மட்டுமே அவரால் அன்று எழுதப்பட்டிருந்தன. தேசப்பற்றின் பாலபாடமாகத்தான் அவை இருந்தன.

ஒரு மகாகவியின் அடையாளக் கீற்றை அவற்றில் காண முடியவில்லை என்பதே உண்மை. ஆனாலும், உண்மையான கவிதையைக் காணவில்லையே என்ற ஆதங்கம் அவரிடம் இருந்தது. அது குறித்து ஆழமாகச் சிந்தித்துக்கொண் டிருந்தார் என்பதை அந்தக் கட்டுரையின் இன்னொரு பகுதி சுட்டிக் காட்டுகிறது.

"இவ்வாறு கலைப்பஞ்சம் தோன்றியிருப்பதன் முகாந்திரம் என்ன என்பதைக் குறித்துச் சிறிது ஆராய்ச்சி புரிவோம். உண்மையான கலை தோன்றவேண்டு மானால் அது இருவகையாகத் தோன்றுமென்பதாக மெஸீனி (Mazzini) என்னும் இத்தாலிய ஞானி கூறுகிறார். அதாவது, 'ஒருவகைப்பட்ட கால சகம் முடிவுபெற்ற போதிலும், கால

சகம் வருந்தறுவாயிலும் உண்மையான கலைத்திகழ்ச்சி ஏற்படுகின்றது' என்கிறார்.''

கால சகம் என்று பாரதியார் குறிக்கும் காலகட்டம் தம் காலத்தில் வரவில்லை என்றும் வருந்துகிறார். அதன் எதிரொலியாகக் கட்டுரையின் இறுதியில் எழுதுகிறார்:

''தமிழர்களாகிய நமக்குள்ளே ஆண்மை போய்விட்டது. வீரியம் போய்விட்டது. நமக்குத் தேசம் கிடையாது. ராஜ்யம் கிடையாது. சுயாதீனம் கிடையாது. இந்த நிலைமையில் 'ஸரஸ்வதி' இந்நாட்டிலே வந்து அவதரிப்பாளா?''

வேதனை கொப்பளிக்கும் இந்த வரிகளை எழுதியபோது பாரதியாருக்குத் தெரிந்திருக்கவில்லை, அவர் வழியாகவே சரசுவதி அவதரிக்கப்போகிறாள் என்று. புதுயுகத்தின் மணிமுழக்கம் அவர் வழியாகவே ஒலிக்கப்போகிறது என்பதையும் அவர் உணர்ந்திருக்கவில்லை.

மகத்தான ஒரு பரிணாமம் நிகழ்ந்தது. தமிழ் இலக்கியக் களத்தில் ஒரு மகாகவியின் பாதச் சுவடுகள் பதிந்தன.

உண்மையான கவிதை மறைந்துபோய்விட்டது என்று 1906-ல் எழுதிய அதே கவிஞர் பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பின் 1919 (மே, 2-ம் நாள்)-ம் ஆண்டில் எட்டையபுரம் அரசருக்கு எழுதிய சீட்டுக் கவியில் தாமே அந்தக் குறை களைய வந்த வரலாற்று நிகழ்வு என உணர்ந்து எழுதினார்:

' புவியனைத்தும் போற்றிட வான்புகழ் படைத்துத்
தமிழ்மொழியைப் புகழில் ஏற்றும்
கவியரசர் தமிழ்நாட்டுக் கில்லை எனும்
வசை என்னால் கழிந்த தன்றே.'

கம்பன் இல்லாத குறையை நிரப்ப வந்த கவியரசர் தாமே என்ற பெருமிதத்தின் பொங்குமாங் கடலை இந்த வரிகளில் தரிசிக்கிறோம்.

'சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொல் புதிது' என்பதுமட்டு மல்ல, தம் கவிதை 'நவ கவிதை எந்நாளும் அழியாத மகா கவிதை' என்றும் சுயமதிப்பீடு செய்கிறார் பாரதியார்.

எத்தனை துல்லியமான, தன்னம்பிக்கையில் பூத்த மதிப்பீடு! இந்த மதிப்பீட்டைத் தமிழ் இலக்கிய உலகம் ஏற்றுக்கொள்ள

மேலும் பதினைந்து, பதினாறு ஆண்டுகள் காத்திருக்க வேண்டியதாயிற்று.

வ.வே.சு. அய்யர், பரலி சு. நெல்லையப்பர், வ.உ.சி., சுப்பிரமணிய சிவா, சோமசுந்தர பாரதியார், மண்டயம் சீனிவாசாச்சாரியார், பாரதிதாசன் ஆகியோர் இந்த மேதையை வாழும் காலத்திலேயே உணர்ந்துகொண்டவர்கள். ஏனெனில், பக்கத்தில் இருந்துபார்க்கக் கொடுத்துவைத்தவர்கள் அவர்கள்.

ஆயினும், தமிழ் எழுத்துலகம் 1936 வரை அவரை ஒரு மகாகவியாக் அங்கீகரிக்க மறுதலித்தது. 1935-ல் பாரதியாரைத் தம் அறிவுத் தராசில் நிறுத்தப் பார்த்த அறிஞர் பி.ஸ்ரீயும், எழுத்தாளர் 'கல்கி'யும் அவரை மகாகவியாக மதிப்பிடுவது மிகையான மதிப்பீடு என்று எழுதினர்.

தமிழ்ச் சிறுகதைக்கு வனப்பும் வளமும் சேர்க்க வந்த 'மணிக்கொடி'த் தலைமுறை இதற்கு எதிராகப் படை நடத்தி இலக்கிய யுத்தம் நடத்தியது. வ.ரா. தம் கருத்தை உறுதி செய்யும் வண்ணம் 'மகாகவி பாரதியார்' என்ற நூலையே படைத்தார். சிட்டியும், கு.ப.ராவும் மகாகவியா பாரதியார் என்ற சர்ச்சைக்கு முடிவு கட்டுவதுபோல் 'கண்ணன் என் கவி' என்ற அரிய திறனாய்வுப் படைப்பையே தந்தனர்.

> ''பாரதிக்கு இலக்கிய உலகத்தில் ஷெல்லியுடன் ஸ்தானமிருப்பது நிச்சயம். ஷெல்லி மகாகவி இல்லையென்று யாராவது சொன்னால் பாரதிக்கும் அப்பட்டம் தேவையில்லை. நாம் இன்று பாரதியை மகாகவி என்று போற்றினாலும், போற்றாவிட்டாலும், காலம் அவருடைய கவிதையின் மகத்துவத்தைத் துலக்கிக் காட்டும் என்பதில் சந்தேகமில்லை''

என்று தம் ஆய்வின் முடிவைத் தந்தார் கு.ப.ரா.

உலகக் கவிஞர்களோடு பாரதியாரைப் பலநிலைகளில் ஒப்பிட்ட சிட்டி உணர்ச்சிப் பெருக்கோடு குறிப்பிட்டார்:

> ''நசித்துப் போய்விடும் போலிருந்த ஒரு பாஷைக்குப் புத்துயிரளித்து, பட்டுப்போன கவிதாமரம் மீண்டும் துளிர்த்துப் பச்சைப் பசேலென்ற இலைகளுடன் பல நிறப் புஷ்பங்களோடு இலக்கியச் சோலையில் ஓங்கி வளரும்படி செய்த பாரதிதான் நமது பெரிய கவி.''

இந்த விவாதம் சூடேறிய காலகட்டத்தில்தான் மணிக்கொடி எழுத்தாளராக இருந்த பாரதிதாசன், தம் கவிதை ஆசானைக் குறித்துப் பெருமிதத்தோடு ஒரு கவிதை வரைந்தார்.

'பாரதியார் உலக கவி' என்று அறுதியிட்டுத் தொடங்கும் அக்கவிதையில்,

' கிராமிய நன்னாகரிகம் பாடி வைத்தார்
கீர்த்தியுறத் தேசியம் சித்திரித்தார்
சராசரம் சேர் லௌகிகத்தை நன்றாய்ச் சொன்னார்
தங்குதடை அற்றஉள்ளம் சமத்வ உள்ளம்
இராததென ஒன்றில்லாப் பெரிய உள்ளம்
இன்புள்ளம் அன்புள்ளம் அன்னார் உள்ளம்
தராதலத்துப் பாஷைகளில் அண்ணல் தந்த
தமிழ்ப்பாட்டை மொழிபெயர்த்தால் தெரியும் சேதி'

என்று செம்மாப்புடன் பாரதியாரை வியந்துரைத்தார். கவிதையின் முடிவில் பாரதிதாசன் எதிர் முகாமை அறைகூவி அழைப்பதுபோல் குரலெழுப்பினார்:

' உலக கவி அல்லர் அவர் எனத் தொடங்கி
ஐயர் கவிதைக் கிழுக்கும் கற்பிக் கின்றார்
அழகாக முடிச்சவிழ்த்தால் விடுவார் உண்டோ?'

ஆரவாரங்கள் அனைத்தும் ஓய்ந்து பாரதியாரின் வரலாற்றுச் சிறப்புமிக்க பங்களிப்பை ஒவ்வொரு புதிய தலைமுறையும் இன்று அங்கீகரித்துவருகின்றது. நூற்றுக் கணக்கான ஆய்வுகள் வெளிவந்தவண்ணம் இருக்கின்றன.

பாரதியாரின் கவிதைகளைத் தாண்டி அவருடைய கவிதைகள், கட்டுரைகளின்மீதும் புதிய பார்வைகள் பட்டுத் தெறிக்கின்றன. அவரது ஒளி மிகுந்த தாக்கம் எவ்வாறெல்லாம் பின்வந்த படைப்பாளிகளைச் செப்பனிட்டது என்ற கோணத்திலும் சிந்தனையாளர்கள் கவனம் செலுத்திவருகின்றனர்.

புதுக்கவிதை என்ற வடிவ மாற்றத்தையும் உணர்வுபூர்வமாகப் பாரதியார்தான் தொடங்கிவைத்தார் என்ற உண்மையையும் இலக்கிய வரலாறு பதிவு செய்துவிட்டது.

' வானத்து அமரன் வந்தான் காண்
வந்ததுபோல் போனான் காண்'

என்று (புதுமைப்பித்தன் சொன்னது போல்) புலம்பாமல் அம் மகாகவியின் ஆழங்களில் மூக்குளித்து எழுவதுதான் இன்றைய தேவை.

அவரே குறிப்பிட்டிருப்பது போல 'ஆழ்ந்து நிற்கும் கவியுளம்' காணுகிற ஒரு சிறிய முயற்சியே இந்நூல்.

இனி மகாகவியின் வாழ்வையும் வாக்கையும் தரிசிக்கப் போகலாம்.





# 2. அலைபடு வாழ்க்கை

மழை வளத்தைக் காட்டிலும் கலை வளத்தில் சிறந்த ஊர் எட்டயபுரம். தென் தமிழ்நாட்டு நெல்லைச் சீமை சார்ந்த இந்தச் சிற்றூர் பாரதியார் பிறந்த காரணத்தால் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைக்குத் தலைநகராகிற பெருமையைப் பெற்றது.

கடிகை முத்துப் புலவர், உமறுப் புலவர் முதலிய புலவர்களையும், முத்துசாமி தீட்சிதர், சுப்புராம தீட்சிதர் ஆகிய இசை மேதைகளையும் ஆதரித்தவர்கள் இந்த ஊரை ஆட்சி புரிந்த எட்டப்ப மன்னர்கள். ஏறத்தாழ 16-ம் நூற்றாண்டு முதல் இப்பகுதிக்கு எட்டப்ப பரம்பரையினர் தலைமை தாங்கி வந்தார்கள்.

பாண்டியர் ஆதரவில் இப்பகுதிக்கு வந்த குமார முத்து எட்டப்பன் பரம்பரையினர் ஆங்கில ஆட்சிக் காலத்தில் வரி வசூலித்துத் தரும் ஜமீன்தார்களாய்த் தொடர்ந்தனர்.

இவ்வூருக்கு இளசை என்பது இன்னொரு பெயர். பாரதியார் வாழ்க்கைச் சித்திரம் வரைந்த தி. முத்துகிருஷ்ணன் குறிப்பிடுவது போல, 'கரிசல் பூமி - தண்ணீருக்கு ஆலாய்ப் பறக்கும். மழையோ நான்கு ஐந்து ஆண்டுக்கு ஒருமுறை பெய்யும். ஜமீன்தார் ஆட்சியில் உள்ள ஒரு குட்டி சமஸ்தானம். மழை போதுமான அளவு இல்லாததால் நிலம் எப்பொழுதும் பாளம் பாளமாக வெடித்து உலர்ந்து கிடக்கும்.'

'சின்னச் சங்கரன் கதை' என்ற தன்வரலாற்றுக் கற்பனைக் கதையில் கவுண்டனூர் என்று பெயரிட்டு மறைமுகமாக எட்டயபுரத்தையே வருணித்த பாரதியார் நகைச்சுவையாகக் குறிப்பிடுவார்:

''பூமி தேவிக்குத் திலகம் (வைத்து அது உலர்ந்து போயிருப்பது) போலக் கவுண்டனூர் என்ற அந்த நகரம் திகழ்ச்சி பெற்றது.''

உண்மை இதுவாயினும் பதினைந்து, பதினாறு வயதில் மரபுக் கற்பனையில் திளைத்த பாரதியார் இந்நகரைக் - குறித்து இப்படி எழுதுவார்:

' காரொடு மயிலினம் கலந்திட நீள்மரம்
சீரொடு வளர்ந்த செழும்பொழில் இளசை'

' தாமரையின் முத்தெங்கும் தான்சிதறும் தண்இளசை'

போலிக் கற்பனைகளிலிருந்து தமிழ்க் கவிதையை மீட்கப் போகும் பாரதியாரின் வாழ்க்கைப் பயணம் இப்படி இருளிலிருந்து ஒளியை நோக்கித் தடைதாண்டும் ஓட்டப் பந்தயமாக இந்தச் சிற்றூரிலிருந்து ஆரம்பமாயிற்று.

முக்கூடல் பள்ளு பிறந்த சீவலப்பேரி கிராமத்திலிருந்து தந்தையை இழந்த சின்னசாமி, தாயாரோடு எட்டயபுரம் வந்து சேர்ந்தான். படிப்பிலும் அறிவிலும் வல்ல சின்னசாமிக்கு அரண்மனைப் பணி வாய்த்தது. உள்ளூரிலேயே லட்சுமியை மணந்துகொண்டான் சின்னசாமி.



பாரதி பிறந்த வீடு

1882-ம் ஆண்டு டிசம்பர் 11-ம் நாள் இத்தம்பதியருக்கு ஆண்மகவு பிறந்தது. சுப்பிரமணியம் என்று பெயர்

சூட்டப்பட்டது. ஆனாலும், உறவும் ஊரும் சிறுவனைச் சுப்பையா என்றே அழைத்தார்கள்.

*1887*-ம் ஆண்டில் பாரதியாருக்கு ஐந்து வயது, அன்னை லட்சுமி உயிர் நீத்தார். தாயை இழந்த துயரம் வாழ்வு முழுதும் அவருக்கு நீடித்திருந்ததாகத் தெரிகிறது. *1910*-ல் 'கனவு' என்ற சுயசரிதை நூலில் தம் இளம்பருவ நினைவுகளைப் பதிவு செய்த பாரதியார்,

'என்னை ஈன்று எனக் கைந்து பிராயத்தில்
ஏங்கவிட்டு விண்ணெய்திய தாய்'

என்று தம் தாயாரின் நினைவில் தவிப்புக் கொள்ளக் காண்கிறோம். பாரதியார் மறைவுக்குப் பிறகு *1923*-ல் வெளியிடப்பெற்ற 'பாரதி - அறுபத்தாறு' என்ற நெடுங்கவிதையில் ஒரு விசித்திர அனுபவம் குறிப்பிடப்படுகிறது. கோவிந்தசாமி என்ற சித்தர் தம் வீட்டுக்கு வந்து தந்தையார் வடிவையும் தாயார் உருவையும் தன்முன்பு காட்டியதாக மெய்சிலிர்க்கிறார் பாரதியார். புதுவையில் நிகழ்ந்த அனுபவம் இது.

'பொன்னடியால் என்மனையைப் புனித மாக்கப்
போந்தான்இம் முனியொரு நாள்; இறந்த எந்தை
தன்னுருவம் காட்டினான் பின்னர் என்னைத்
தரணிமிசைப் பெற்றாளின் வடிவம் உற்றான்
அன்னவன் மா யோகியென்றும் பரம ஞானத்
தனுபூதி உடையனென்றும் அறிந்து கொண்டேன்'

என்று நெகிழ்ந்து போகிறார்.

இழந்த தாயின் இடத்தில் சிற்றன்னையாக வந்த வள்ளியம்மை நிறைவோடு நடந்துகொண்ட போதிலும் பெற்ற தாயை மறக்க முடியவில்லை. அந்த நினைவே 'கண்ணன் என் தாய்' முதல் பராசக்திப் பாடல்கள்வரை தாய்மைப் பதிவாகப் பரிணாமமுற்றது என்று கூறலாம்.

ஆங்கிலக் கல்வியை அப்பாவின் நிர்ப்பந்தத்துக்காகப் பயின்றாலும், அரண்மனைத் தமிழ்ப் புலவர்களின் கவிதைகளில் தான் இளம் பாரதியாருக்கு ஈடுபாடு. விளையாட்டுக்களில் ஈடுபட்டால் தந்தை கோபம் கொள்வார் என்று ஒதுங்கி யிருந்தான் சுப்பையா.

' ஆண்டொர் பத்தினில் ஆடியும் ஓடியும்
ஆறு குட்டையில் நீச்சினும் பேச்சினும்
ஈண்டு பன்மரத் தேறி இறங்கியும்
என்னொ டொத்த சிறுவர் இருப்பரால்
வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்
வீதி ஆட்டங்கள் ஏதினும் கூடிலேன்'

என்று அவரே தம் தனிமை நிலையை எடுத்துக் கூறியிருக்கிறார்.

ஆயினும், தந்தைக்குத் தெரியாமல் நடந்த நிகழ்வுகள் இரண்டு, ஒன்று - இரகசியமாகத் தமிழ் நூல்களைக் கற்றறிதல். அதன் விளைவாய் ஏழாவது வயதிலேயே கவி பாடும் ஆற்றலைப் பெறுதல். அதனால் பதினோராம் வயதில் புலவர்கள் கூடிப் பாரதி என்ற பட்டமும் வழங்கினர்.

இரண்டாவதாக ஒன்பது வயதுச் சிறுமிமேல் கொண்ட பிள்ளைக் காதல். இதனைத் தம் வாழ்வின் 'தெய்வ நாட்கள்' என்று கனிந்துருகுகிறார் பாரதியார்.

தமிழ்ப் புலமை நாட்டம் மகனின் எதிர்காலத்தைப் பாதிக்கும் என்று கருதியோ என்னவோ, 1895-ம் ஆண்டில் நெல்லை இந்துக் கல்லூரி சார் பள்ளியில் சேர்ந்து ஆங்கிலக் கல்வி பயிலப் பாரதியாரை அனுப்பிவைத்தார். ஏறத்தாழ அதே காலத்தில் சின்னசாமி அய்யர் 1892-ல் புதுமையாகத் தொடங்கிய பருத்தி அரவைத் தொழிற்சாலை பெருநட்டத்தில் வீழ்ந்தது. எனினும், பிள்ளைக்கு ஆங்கிலக் கல்வி கசந்தது.

'அற்பர் கல்வி', 'மண்படு கல்வி', 'பேடிக் கல்வி' என்றெல்லாம் பாரதியாரால் இக்கல்விப் பயிற்சி இகழப்பட்டது. சேரன்தம்பி சிலம்பை இசைத்ததும், தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும் தெரிவிக்கப்படாத கல்வி என அதனை விமர்சிக்கின்றார். எனினும், அந்தப் பள்ளி நாட்களில் கவிதை அவருக்குள் குருத்து விட்டுக்கொண் டிருந்தது.

'பாரதி சின்னப் பயல்' என்று கல்லூரி மாணவன் காந்திமதி நாதன் கொடுத்த ஈற்றடியை,

' காரதுபோல் நெஞ்சிருண்ட காந்திமதி நாதனைப்
பார்அதி சின்னப் பயல்'

என்று பேரிடியாக மாற்றிப் பாடிய நிகழ்வு அப்போது நடந்தது.

வகுப்பறையில் ஆசிரியர் கேலியாக, 'காளமேகம் போல் கவி பொழிவாயாமே, எங்கே பாடு' என்று சொன்ன போது 'காளமேகம் தனக்குத் தோன்றியபோதுதான் பொழியும். கட்டளை இட்டால் பொழியாது' என்று சொன்ன பாரதியாரின் பதிலில் அசல் கவிஞன் முகம் காட்டினான்.

இதே காலத்தில் தந்தையின் வறுமைநிலை உணர்ந்து, எட்டயபுரம் மன்னருக்கு உதவி கேட்டு ஒரு நீண்ட செய்யுளை மாணவர் பாரதியார் எழுதினார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இதனிடையே சின்னசாமி அய்யர் பாரதியாருக்குத் திருமணம் செய்துவைக்க ஆசைப்பட்டார். பதினைந்து வயதுப் பாரதியாருக்கு ஏழு வயதுச் செல்லம்மாள் மணம் முடித்து வைக்கப்பட்டார். அதே நாளில் பாரதியார் தங்கை மூன்றரை வயது லட்சுமிக்கும் திருமணம் நடந்தது. திருமணம் வேடிக்கையாக இருந்தது பாரதியாருக்கு. எனினும், குழந்தைத் திருமணம் என்ற கொடுமையை இழைத்தவர்கள் 'பாதகக் கொடும் பாதகப் பாதகர்' என்பது அவர் கருத்தாக இருந்தது. *1897* ஜூன் மாதம் *27*-ம் நாள் திருமணம் நிகழ்ந்தது.

ஏறத்தாழ ஒரே ஆண்டுக் காலத்துக்குள் (*1898* ஜூலை *20*) சின்னசாமி அய்யர் மறைந்தார்.

' தந்தை போயினன் பாழ்மிடி சூழ்ந்தது
தரணி மீதில் அஞ்சல் என்பார் இலர்'

என்பது குடும்ப நிலை. படிப்பு முடிவுக்கு வந்தது.

காசியில் இருந்த கவிஞரின் அத்தை குப்பம்மாள் பாரதியாரைச் சில காலம் தம்முடன் இருக்கும்படி விடுத்த அழைப்பு குடும்பத்துக்கே ஆறுதலாக அமைந்தது. செல்லம்மாள் பிறந்த வீடு சென்றார்.

*1898*-ல் காசிக்குச் சென்ற பாரதியார் *1903*-ம் ஆண்டுத் தொடக்கம்வரை அங்கேயே தங்கி யிருந்தார். அந்த நான்காண்டுக் காலம் பாரதியாரின் உணர்விலும் அறிவிலும் ஆழமும் விசாலமும் அணிசேரக் காரணமாயிற்று. இந்தியும், வடமொழியும் அவருக்குச் சரளமாயின. வறட்சிப் பகுதியிலிருந்து வான்நதியான கங்கைக் கரைக்குச் சென்றதால் புதிய மொழி வளம், பிறமொழி இலக்கிய அறிமுகம், பண்பாட்டுப் பெருமிதம், நடை உடை பாவனைகளில் புதிய நாகரிகம் இவற்றுடன் தேசிய உணர்ச்சியும் அவரிடம் கை குலுக்கிக்கொண்டன.

மகா மயானமான காசி, தத்துவங்கள் கால்கொள்ளவும், நம்பிக்கைகள் வேர்கொள்ளவும் துணை நின்றது என்று கருதுவதும் பொருந்தும்.

தலைப்பாகையும், மீசையும் என்ற புறவடிவு மாறுதல்களைப் போலவே செழுமையான மாறுதல்கள் அகத்திலும் ஏற்பட்டன. சாதி, சமயம், மொழி என்ற தடுப்புச் சுவர்கள் கங்கை வெள்ளத்தில் இடிந்து விழுந்தன.

' கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்'

என்ற பாடல் வரிகளைப் பிற்காலத்தில் புனையும் தேசிய ஒருமைப்பாட்டின் விதை கவிமனத்தில் அன்றே விழுந்தது.

மீண்டும் தமிழகம் நோக்கித் திரும்பும் வாய்ப்பு எட்டயபுரம் மன்னர் வடிவில் வந்தது. *1903* ஜனவரி மாதம் விக்டோரியா ராணியின் புதல்வர் ஏழாம் எட்வர்டு முடி சூடியதைக் கொண்டாட டெல்லியில் ஒரு தர்பார் நடைபெற்றது. அதில் கலந்துகொள்ள வந்த எட்டயபுரம் ஜமீன்தார் காசிக்கும் வந்தார். தம்மிடம் அரண்மனைப் பணியில் சேருமாறு அவர் விடுத்த அழைப்பை ஏற்று எட்டயபுரம் திரும்பினார்.

அரண்மனை உத்தியோகம் அமைந்துவிட்டதால் கடையத்திலிருந்து அன்பு மனைவி செல்லம்மாளையும் அழைத்து வந்து குடும்ப வாழ்க்கை தொடங்கினார். செல்லம்மாவுடன் நடத்திய இல்லறம் இனித்தது; ஜமீன்தாருடனான உறவு வெகுவிரைவில் புளித்தது.

அரண்மனைப் புலவர் சூழலில் அவர் இருந்தார். அண்ணாமலை ரெட்டியார்போலக் காவடிச் சிந்து யாராலும் பாட முடியாது என்ற விவாதம் எழுந்தபோது, அன்று மாலையே 'பச்சைத் திருமயில் வீரன்' என்று தொடங்கும் சந்தச் சிந்து படைத்து வெற்றுப் புலவர்களின் வாயை அடைத்தார். அரசரிடம் பாரதியார் செல்வாக்கு உயர்ந்தது; பொறாமையும் வளர்ந்தது.

எப்போதும் ஷெல்லியின் கவிதையும் கையுமாக இருந்த கவிஞர் Shelleyan Guild என்ற சிறிய சங்கத்தையும் உருவாக்கினார். அத்தகைய மேதைக்கு எப்படி அரண்மனைச் சூழலின் காமரச ரசனை ஒத்து வரும்? சின்னச் சங்கரன் கதையிலும், கவிதைகளிலும் மனம் பொருந்தாச் சூழலைப் பாரதியார் வருணித்திருக்கிறார்.

'கவிதா தேவி அருள் வேண்டல்' என்ற கவிதையில் (1909),

> ' திமிங்கில உடலும் சிறியபுன் மதியும்
> ஓரேழ் பெண்டிரும் உடையதோர் வேந்தன்
> தன்பணிக் கிசைந்தென் தருக்கெலாம் அழிந்து
> வாழ்ந்தனென் '

என்று தம் முரண்பட்ட வாழ்நிலையைச் சுட்டிக் காட்டி யிருக்கிறார்.

அரண்மனைச் சேவகத்திலிருந்து அவர் விடுபட நேர்ந்தமைக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்றைச் சக்திதாசன் சுப்பிரமணியம் கூறியுள்ளார். ராஜா சில சமயங்களில் நகர் வலம் வருவதுண்டு. அப்போது அவர் வருகையை அறிவிக்க 'வாங்கா' (கொம்பு) ஊதுவார்களாம். அதைக் கேட்டுக்கொண்டு தம் வீட்டுத் திண்ணையில் அரசருக்கு மரியாதை செய்யாததுமட்டு மல்ல - 'முட்டாள்தனத்தின் எக்காளம்' என்று கேலி செய்தாராம். இது போன்ற சம்பவங்களால் ஜமீன் உத்தியோகம் முடிவுக்கு வந்தது.

ஒரு நிமிடம் கூட எட்டயபுரத்தில் வாழ விரும்பாமல் மதுரைக்கு வந்தார் பாரதியார். சில நண்பர்கள் உதவியால் மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக 1904 ஆகஸ்ட் முதல் நாள் பணியில் சேர்ந்தார். ஏனோ ஆசிரியப் பணியில் அவர் மனம் ஈடுபடவில்லை. 10.11.1904-ல் மூன்று மாதம் பத்து நாட்களுக்குப் பின் பணியைவிட்டு நீங்கினார். மாதச் சம்பளம் 17½ ரூபாய் என்று கண்டறிந்து எழுதியிருக்கிறார் சீனி. விசுவநாதன்.



ஜி. சுப்பிரமணிய அய்யர்

'இந்து' நாளிதழைத் தோற்றுவித்தவரும், 'சுதேசமித்திரன்' ஆசிரியரும், சீர்திருத்தச் செம்மலும், தேச பக்தருமாகிய ஜி. சுப்பிரமணிய அய்யருக்கும் பாரதியாருக்கும் எப்படித் தொடர்பு ஏற்பட்டது என்பது குறித்துப் பல வேறுபட்ட தகவல்கள் கிடைக்கின்றன. காந்தம் இரும்பை ஈர்த்துக்கொண்டது என்று சுருங்கச் சொல்லலாம்.

1904 நவம்பரில் சென்னைக்குச் சுதேசமித்திரன் இதழில் கடமையாற்ற வந்த கவிஞரை வெகு விரைவில் துணையாசிரியராக உயர்த்தினார் ஜி. சுப்பிரமணிய அய்யர்.

> ''ராமலிங்க சுவாமிகளும், சுதேசமித்திரன் சுப்பிரமணிய அய்யரும், இவர்களைப் போன்ற வேறு சில மகான்களும் தமிழ்நாட்டின் புதிய விழிப்புக்கு ஆதிகர்த்தாக்களாக விளங்கினர்''

என்று பாரதியார் எழுதியிருப்பதிலிருந்து அய்யரின் பெருமையை உணரலாம்.



*பாரதியும் செல்லம்மா பாரதியும் (1917)*

1905-ம் ஆண்டு செல்லம்மாள் பாரதியாரின் மூத்த குழந்தை தங்கம்மாளைப் பெற்றெடுத்துக் கவிஞருக்கு மகிழ்வூட்டினார். அதே ஆண்டில் பி. வைத்தியநாதய்யர் தொடங்கிய மகளிர் மாத இதழான 'சக்கரவர்த்தினி'க்கும் ஆசிரியப் பொறுப்பேற்றார். கிட்டத்தட்ட ஓராண்டுக் காலம் சக்கரவர்த்தினியில் மாதர்கள் அறிவாற்றல்கள் துலங்கும்படி சுதந்தரம், சமத்துவம் குறித்த

விளக்கங்கள், மாதர் முன்னேற்றம் தொடர்பான விவாதங்கள், அறிஞர்களின் கட்டுரைகள் எனப் பயன்மிக்க ஊடகமாயிற்று 'சக்கரவர்த்தினி'.

'சுதேசமித்திர'னிலிருந்து மற்றொரு இதழியல் களமாகச் 'சக்கரவர்த்தினி' திகழ்ந்தது. ஆனால், அதுவும் பாரதியாரின் பொங்கும் எரி நெருப்புச் சிந்தனைகளுக்குப் போதுமானதாக இல்லை. இவ்விரண்டு இதழ்களையும் விட்டு விலகி 'இந்தியா' வார இதழின் ஆசிரியப் பொறுப்பேற்றது பாரதியார் வாழ்வில் மிக முக்கியமான நிகழ்வாயிற்று. 'பால பாரதா' என்ற இதழிலும் பாரதியார் ஆசிரியராக இருந்ததாக அறிகிறோம்.

1905-ம் ஆண்டில் வைசிராய் கர்சான் வங்க மாநிலத்தை மத அடிப்படையில் இரண்டாகப் பிளக்க முடிவு செய்தபோது இந்திய நாடே அதிர்ந்தது. சென்னைக் கடற்கரையில் செப்டம்பர் 14-ம் நாள் ஜி. சுப்பிரமணிய அய்யர் தலைமையில் நடந்த வங்கப் பிரிவினை எதிர்ப்புக் கூட்டம் ஒரு தேசியப் புயல்போல் அமைந்தது. அக்கூட்டத்தில் பாரதியார் பாடிய 'வங்கமே வாழிய' கவிதை அவருடைய முதல் தேசியப் பாடலாக ஒலித்தது. தேச பக்தி, கவிஞரை ஒரு தெய்வ சந்நதமாய் ஆட்கொண்டது.

அக்காலத்தில் துரைசாமி அய்யர், வி. சக்கரை செட்டியார், சுரேந்திர நாத் ஆர்யா ஆகிய சுதேசிய நண்பர்கள் அவருக்கு வாய்த்திருந்தது குறிப்பிடத்தக்கது.

1905 அக்டோபரில் வங்கப் பிரிவினை சட்டமாகியது. இச்சமயம், வங்கம் சுதேசிய உணர்வின் மையமாயிற்று. அதே ஆண்டு நவம்பரில் பங்கிம் சந்திரரின் வந்தே மாதர கீதத்தைப் பாரதியார் மொழிபெயர்த்தார். 1906 பிப்ரவரியில் தாமே ஒரு வந்தே மாதரப் பாடலை இயற்றவும் இது தூண்டுகோலாயிற்று.

1905 டிசம்பரில் காசியில் காங்கிரஸ் மகாசபை கூடியது. கோபால கிருஷ்ண கோகலே தலைமை தாங்கிய இம்மாநாட்டுக்கு ஜி. சுப்பிரமணிய அய்யர் சென்றுவந்தார். சிதம்பர ரகுநாதன் இம்மாநாட்டுக்குப் பாரதியாரும் சென்றதாகக் கருதுகின்றார். இதன் உண்மை மெய்ப்பிக்கப்படவில்லை.

ஆயினும், சுதேசிய அலைகள் பாரதியார் உள்ளத்தில் ஆர்ப்பரிக்கத் தொடங்கிவிட்டதை அவர் கவிதைகளும், கட்டுரைகளும் புலப்படுத்துகின்றன. இந்தச் சூழலில்தான் 'இந்தியா' இதழில் சுதந்தரமாகத் தலைமையேற்றுச் செயல்படக் கவிஞருக்கு அழைப்பு வந்தது.

திருவல்லிக்கேணியில் வசித்துவந்த மண்டயம் குடும்பம் தேச பக்தியில் திளைத்த குடும்பம். எஸ்.என். திருமலாச்சார் தொடங்கிய 'இந்தியா' வார இதழுக்கு எம்.பி.டி. ஆசார்யாவும் சீனிவாசாச்சாரி யாரும் வைரத் தூண்கள். எம்.பி.டி. ஆசார்யா அயல்நாடுகளில் தேசிய இயக்கத்துக்கு வலிமை சேர்க்கச் சென்றாலும் மண்டயம் குடும்பம் 'இந்தியா' இதழைக் கண்ணின் மணியாக வளர்த்தது.

1906 மே மாதம் தொடங்கிய இதழுடன் செப்டம்பரில் பாரதியார் இணைந்துகொண்டார். செய்திகளிலும், அமைப்பிலும் புதுமை, கேலிச் சித்திரங்களை முதன்முதலாக வெளியிட்ட சிறப்பு, ஆற்றல் மிக்க தமிழ் நடை ஆகிய வியப்புகளைப் பாரதியார் நிகழ்த்தினார். அன்னிய ஆட்சிக்கு எதிராகத் தமிழ் கொண்ட அவதாரமாயிற்று 'இந்தியா'. பெயரிடப்படாத ஆசிரியராகச் செயலாற்றினார் பாரதியார்.

'இழையும் மின்னல் சரேலென்று பாய்வது' போல் பாரதியாரின் அரசியல் பணிகளும், எழுத்துப் பணிகளும் தீவிரப் பாய்ச்சலை மேற்கொண்ட காலம் இது. இந்தியா இதழில் வ.உ.சியின் கப்பல் கம்பெனிக்கு உதவிகள் புரியுமாறு மக்களை வேண்டினார். ஜி. சுப்பிரமணிய அய்யரின் சுதேசிய நிதிக்கு வாரி வழங்க வேண்டுகோள் விடுத்தார். திலகர் திருநாள் கொண்டாடிச் செய்தி வெளியிட்டார். அர்பத்நாட் வங்கி வீழ்ச்சியுற்றபோது இந்தியர் தமக்கேயான வங்கியாக இந்தியன் வங்கி தொடங்கிய செய்திக்கு மகிழ்ச்சி தெரிவித்தார். ஹிந்தி தேசிய மொழி ஆக வேண்டும் என்ற தம் வேட்கையை வெளியிட்டார். வாய்ப்பு வரும் போதெல்லாம் பொதுக்கூட்டங்களில் முழங்கினார்.

இதனிடையே இலக்கியப் பணியும் நடந்துகொண்டு இருந்தது.

1906 டிசம்பரில் கல்கத்தாவில் கூடவிருந்த காங்கிரஸ் பேரவைக்கும் சென்றார். தாதாபாய் நவுரோஜி தலைமை தாங்கிய நிகழ்விலும், இணைந்து நடந்த சமுதாய சீர்திருத்த மாநாட்டிலும் பேராளராகப் பங்கு கொண்டார்.

இந்தப் பயணத்தின்போது இரண்டு முக்கியச் சந்திப்புகள் நிகழ்ந்தன. தமக்கு ஞான குருவாக அமைந்த சகோதரி நிவேதிதை அம்மையாரை டம்டம் என்ற இடத்தில் சந்தித்தார் பாரதியார்.

> ''எனக்கு ஒரு கடிகையிலே மாதாவினது மெய்த் தொண்டின் தன்மையையும், துறவுப் பெருமையையும், சொல்லா மலுணர்த்திய குருமணியும், பகவான் விவேகாநந்தருடைய

தர்மபுத்திரியும் ஆகிய ஸ்ரீமதி நிவேதிதா தேவிக்கு இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்''

என்றும்,

''ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விசுவரூபம் காட்டி ஆத்தும நிலை விளக்கிய தொப்ப, எனக்குப் பாரத தேவியின் சம்பூர்ண ரூபத்தைக் காட்டி, ஸ்வதேச பக்தியுபதேசம் புரிந்தருளிய குருவின் சரண மலர்களில் இச்சிறு நூலைச் சமர்ப்பிக்கின்றேன்''



நிவேதிதை

என்றும் பரவசத்தோடு கொண்டாடிய பாரதியார் தம் முதல் நான்கு நூல்களையும் (ஸ்வதேச கீதங்கள், ஜென்மபூமி, ஞானரதம், ஸ்வசரிதை - *1908, 1909, 1910*) நிவேதிதை அம்மையாருக்கே சமர்ப்பணம் செய்தார். இதிலிருந்து நிவேதிதா தேவி சந்திப்பு எப்படி அவரை ஆட்கொண்டது என அறியலாம்.

கல்கத்தாவில் விபினசந்திர பாலர் என்னும் தேச பக்தித் திலகத்தையும் சந்தித்துச் சென்னை வருமாறு அழைப்பு விடுத்தார். 1907-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் சென்னை வந்த பாலர் ஐந்து அருமையான சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். பாரதியாரால் ஏற்பாடு செய்யப்பட்ட இந்தக் கூட்டங்களுக்கு ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டனர். 'புதிய கட்சி' என்று அழைக்கப்பட்ட திலகர் கட்சியில் தீவிரப் பங்காற்றத் தொடங்கிய பாரதியார், திலகர் உரையை, 'புதிய கட்சியின் கோட்பாடுகள்' என்ற தலைப்பில் மொழிபெயர்த்து வெளியிட்டார். தேசியம் தமிழகத்தில் புயலாய் வீசத் தொடங்கியது.

இதனிடையே லாலா லஜபதிராய் பர்மாவுக்கு நாடு கடத்தப்பட்ட செய்தி வந்தது. பாலர் பயணத்தை முடித்துக்

கொண்டு திரும்பினார். 'இந்தியா' லஜபதிராயின் படத்தை வெளியிட்டு அனல் கக்கியது. நாடு உணர்ச்சிவயப்பட்டிருந்த தருணத்தில் இரண்டு ஒளிக்கீற்றுகள் பாரதியாரை மகிழ்வில் ஆழ்த்தின. வ.உ.சியின் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியின் கப்பல்கள் பயணம் தொடங்கியது ஒன்று. புறநானூற்று வீரத்தாய்மார் குறித்து மு. இராகவய்யங்கார் எழுதிய கட்டுரை ஏற்படுத்திய பண்டைத் தமிழ் வீரம் குறித்த பரவசம் மற்றொன்று. அதனைத் தம் இதழில் மறுவெளியீடு செய்ததோடு அய்யங்காருக்கும் கடிதம் தீட்டினார்.

> ''தங்கள் பாண்டித்தியத்தை நான் புகழ வரவில்லை. அதனை உலகம் அறியும். தங்களுடைய பரிசுத்த நெஞ்சிலே எழுந்திருக்கும் 'ஸ்வதேச பக்தி' என்ற புது நெருப்பிற்குத் தான் நான் வணக்கம் செய்கிறேன்''

என்று பூரிப்பும் புதுமகிழ்வும் கொண்டு எழுதினார்.

1907 டிசம்பரில் சூரத் நகரில் காங்கிரஸ் பேரவை தன் 23-ம் மாநாட்டுக்கு ஆயத்தம் செய்தது. வ.உ.சியுடன் இணைந்து திலகர் அணிக்கு வலிமை சேர்க்கப் பிரதிநிதிகளை அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார் பாரதியார். சூரத்தில் திலகர் அணியும் நிதானக் கட்சியாரும் கடுமையாக மோதிக்கொண்டனர். கை கலப்பும் நிகழ்ந்தது. பாரதியாரும் நண்பர்களும் திலகருக்குக் கவசமாய் நின்று காத்தனர்.

1908-ம் ஆண்டு - பாரதியாரின் பரபரப்பு மிக்க வாழ்க்கையில் திருப்பங்களை நிகழ்த்தியது. சென்னையில் ஜன சங்கம் என்ற அமைப்புத் தொடங்கப்பட்டுச் சுதேசியக் கூட்டங்கள் தொடர்ந்து நடத்தப்பட்டன. அந்த ஆண்டு மார்ச் மாதம் விபின சந்திர பாலர் விடுதலை செய்யப்பட்டதற்கு மகிழ்ச்சி தெரிவிக்கும் விழா கோலாகலமாய் நடத்தப்பட்டது. இருபதாயிரம் பேர் பொதுக்கூட்டத்தில் கலந்துகொண்டதாகக் காவல்துறையே கருதியது.

சென்னையில் இந்த மக்கள் எழுச்சி பாரதியாரின் அயராத உழைப்பால் ஏற்பட்டது என்றால் தூத்துக்குடியிலும், நெல்லையிலும் வ.உ.சி., சுப்பிரமணிய சிவா இருவராலும் அது அலைவீசி எழுந்தது. ஊர்வலங்களையும் பொதுக்கூட்டங்களையும் தூண்டியதாக வ.உ.சியும் சிவாவும் கைது செய்யப்பட்டனர். பாரதியாரும் இதனை அறிந்து தீவிரம் கொண்டு 'திருநெல்வேலி


வ.உ. சிதம்பரனார்

வழக்கு நிதி' திரட்ட முற்பட்டார். மு.ரா. கந்தசாமிக் கவிராயர் (மதுரை), எஸ்.என். திருமலாச்சார் (சென்னை) முதலியோர் விடுத்த வேண்டுகோளை மக்கள் பரிவுடன் ஏற்றனர். மற்றவர்களுக்குச் சளைக்காமல் தம் நிலையை மீறி நிதி வழங்கியவர் பாரதியார்.

இந்த நேரத்தில்தான் கலெக்டர் வின்ச் துரைக்கும் சிதம்பர னாருக்கும் நடந்த உரையாடலைக் கவிதையாக்கினார் பாரதியார். வந்தே மாதர முழக்கத்தைக் கலெக்டர் கண்டித்த போது,

> ' வந்தே மாதரம் என்றுயிர் போம்வரை
> வாழ்த்து வோம் - முடி தாழ்த்துவோம்
> எந்தம் ஆருயிர் அன்னையைப் போற்றுதல்
> ஈனமோ அவ மானமோ?'

என்று சிதம்பரனார் முழங்கியதாகப் பாரதியார் சித்திரித்தார்.

வெறும் வாய்வேதாந்தியாக வாழாத கவிஞர் தம் அருமை மருமகன் (பாரதியாரை மாமா என்று வ.உ.சியும், அவரை மாப்பிள்ளை என்று பாரதியாரும் உறவு கொண்டாடுவது வழக்கம்) வ.உ.சியையும், சிவாவையும் காண நெல்லைக்குச் சென்றார். சிறையில் வ.உ.சியைச் சென்று கண்டுவந்த உணர்ச்சிபூர்வமான நிகழ்ச்சியை 'இந்தியா'விலும் எழுதினார்.

பாரதியாரின் எழுத்தும், பேச்சும், இயக்கமும், வ.உ.சி. நட்பும் அரசாங்கத்தின் தீவிரக் கண்காணிப்புக்கு உட்பட்டிருந்த தருணம் அது. 1908 ஜூன் 14-ம் நாள் 'கேசரி' இதழில் எழுதிய அரசு விரோதக் கட்டுரையைக் காரணம் காட்டித் திலகர் கைது செய்யப்பட்டார். அது குறித்து 'இந்தியா' சுடுசரம் எய்தது. இதனிடையே வ.உ.சியும், சிவாவும் சிறைத் தண்டனைக்கு ஆட்பட்டனர். அதே ஜூலை மாதத்தில் பாரதியாரின் ஆருயிர்த் தோழர் சுரேந்திரநாத் ஆர்யா கைதானார். திலகருக்கும் ஆறாண்டுத் தீவாந்திர தண்டனை விதித்த செய்தி சென்னையை எட்டியது.

ஆங்கிலேய அரசின் கொடுங்கரம் பாரதியாரை நெருங்கிக் கொண்டிருப்பதாக ரகசியத் தகவல்கள் கசிந்தன. இதன் முன்னறிவிப்பாக 'இந்தியா' இதழின் பொறுப்பு ஆசிரியராக அறிவிக்கப்பட்டிருந்த எம். சீனிவாசன் 1908 ஆகஸ்ட் 21-ம் நாள் கைது செய்யப்பட்டார். 'சுதேசமித்திரன்' ஆசிரியர் ஜி. சுப்பிரமணிய அய்யரும் சிறையில் அடைக்கப்பட்டார்.

நண்பர்கள் பாரதியாரைப் புதுவைக்குச் சென்றுவிடும்படி வற்புறுத்தினர். பாரதியார் இசையவில்லை. ஆனால், அன்புக்குரிய பலரும் அவர் எழுத்துத் தடைபட்டுவிடக் கூடாது என்று கவலையுற்றவர்களாய் மீண்டும் மீண்டும் நிர்ப்பந்தம் செய்தமையால் செல்லம்மாளைக் கடையத்தில் விட்டுவிட்டுத் திரும்பினார் பாரதியார். 1908 செப்டம்பர் முதல் வாரத்தில் காவல்துறையின் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டுப் பிரெஞ்சு ஆளுகையில் இருந்த புதுச்சேரிக்குப் போய்ச் சேர்ந்தார்.

களத்தில் நிற்காமல் பாரதியார் காணாமல் போனது கோழைத்தனம் என்று இன்றும் எழுதுவோர் உண்டு. ஆனால், வீரத் திருவிளக்கான பாரதியார் நண்பர்களின் வற்புறுத்தல் காரணமாகவே புதுவை சென்றார் என்பதை இரண்டு முக்கியச் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன.

> ''சிறையுள் கிடந்து தேச சேவை செய்யாதிருப்பதினும் வேறு தேசம் சென்று தேச சேவை செய்துகொண்டிருப்பதே மேல் என நாங்கள் அவர்களுக்குத் தகவல் சொல்லி அனுப்பினோம். முதலில் மாமா இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. பின்னர் மாமா புதுச்சேரி செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதினால் சென்றுவிட்டார் போலும்.'' (வி.ஓ.சி. கண்ட பாரதி (1946) ப. 42-43)[1]

இது போன்றே மண்டயம் சீனிவாசாச்சாரியார் எழுதிய 'யான் கண்ட இரு பெரியார்' என்ற குறிப்பில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

> ''ஜி. சுப்பிரமணிய அய்யர் மேலும் தம்மேலும் வாரன்ட் தயாராய்விட்டது என்று தெரிந்தவுடனே என்னிடம் ஆலோசனை கேட்டார். நீர் புதுச்சேரிக்குச் சென்றுவிடும் பட்சத்தில் இந்த வாரண்ட் அங்கு செல்லாது. நீர் போய்த்

1. சீனி. விசுவநாதன், மகாகவி பாரதி வரலாறு, 1996, ப. 368

தங்கினால் நானும் சில நாட்களில் வந்து சேருகிறேன் என்றேன்[2]''

இத்தகைய நல்லெண்ணம் தோய்ந்த ஆலோசனைகளே பாரதியாரின் புதுவைப் பயணத்தை ஊக்குவித்தன என்பது தெளிவாகிறது.

புதிய நகரம், அறிமுகம் இல்லாத மக்கள், ஒற்றர்களின் சூழ்ச்சி இத்தனைக்கும் நடுவே புதுவை வாசம் தொடங்கியது.

' திக்குத் தெரியாத காட்டில் - உன்னைத்
தேடித் தேடி இளைத்தேனே'

என்று அவர் கண்ணன் பாட்டில் சொல்லுவாரே, அதே நிலை அவருக்கு. அறிமுகக் கடிதம் பெற்ற குப்புசாமி அய்யர் அவருக்கு உதவிகள் செய்யத் தொடங்கினாரோ, இல்லையோ அவருக்குப் பயமுறுத்தல்கள் ஆரம்பமாகிவிட்டன. எதிர்பாராத விதமாக ஏற்பட்ட குவளை கிருஷ்ணமாச்சாரியாரின் சந்திப்பு 'இந்தியா' வாசகர் சுந்தரேச அய்யரிடம் கொண்டுபோய் விட்டது. அதனால்தான்,

' எங்கிருந்தோ வந்தான் இடைச்சாதி நானென்றான்
இங்கிவனை யான்பெறவே என்னதவம் செய்துவிட்டேன்'

என்று பின்னாளில் குவளைக் கண்ணனை உருகி உருகிப் பாரதியார் பாட நேர்ந்தது (கண்ணன் - என் சேவகன்). 'வீரர் பிரான் குவளையூர்க் கண்ணன் என்பான்' என்று பாரதி அறுபத்தாறிலும் வாழ்த்தி யிருக்கிறார்.



குவளைக் கண்ணன்

விரைவில் மண்டயம் திருமலா சாரியாரும், சீனிவாசய்யங்காரும் வந்து சேர்ந்தனர். பாரதியாரின் துயரங்கள் பாதியாயின. 1908 அக்டோபர் 10-ம் நாள் தொடங்கி 'இந்தியா' வார இதழ் மீண்டும் பவனி தொடங்கியது.

2.ஆ. இரா. வெங்கடாசலபதி, வ.உ.சியும் பாரதியும், மக்கள் வெளியீடு, 1994, ப. 152

கேலியும் குத்தலுமாக எழுதப்பட்ட அரசியல் கட்டுரைகள், கருத்துச் சித்திரங்கள், கவிதாதேவி அருள் வேண்டல், குரு கோவிந்த சிம்ம விஜயம், ஞானரதம் முதலிய அரிய படைப்புகள் ஆகியவற்றை ஏந்தி வந்தது 'இந்தியா'.

1910 மார்ச் மாதம் கொண்டுவரப்பட்ட புதிய பத்திரிகைச் சட்டம் உடனடியாக 'இந்தியா'வை நிறுத்தும்படி செய்தது. அதனுடன் பாரதியார் ஆசிரியராக இருந்த 'விஜயா' நாளிதழ்ப் பணியும், 'கருமயோகி' ஆன்மிக இதழ்ச் செயல்பாடும் ஓய்ந்தன. ஆயினும், மக்கள் எழுச்சி போதாது என்று பாரதியார் மனம் நொந்தார். 1910 பிப்ரவரியில் 'சூரியோதயம்' என்னும் இதழில் 'தமிழ்நாட்டாருக்கு இறுதி விண்ணப்பம்' எனப் பத்திரிகைகள் நிறுத்தப்படும் தறுவாயில் எழுதியுள்ள வரிகள் பாரதியாரின் ரத்தத்தாலும், கண்ணீராலும் எழுதப்பட்டவை எனலாம். அதில் ஒரு பகுதி:

"உங்களை நினைக்கும் போது என் நெஞ்சம் கொதிக்கின்றது. தீராதது வறுமை கொண்ட ஜாதி. அழகிழந்து போன ஜாதி. பார்ப்பதற்கு விகாரமான ஜாதி. சரீர பலமில்லாத ஜாதி. நோய் பற்றிய ஜாதி. மன வலிமையில்லாத ஜாதி. ஸ்வதந்திர மில்லாத ஜாதி. உலக இன்பங்களறியாத ஜாதி. கவிதையில்லாத ஜாதி. ஐயோ, ஐயோ. நெஞ்சு கொதிக்கிறதே! என்னுடைய இரத்தமல்லவா நீங்கள் எல்லோரும்? உங்களை இந்த நிலையில் பார்க்க என் மனம் எப்படிப் பொறுக்கும்?"



வ.வெ.சு. ஐயர்

பாரதியாரின் அரசியல் எழுத்தியக்கம் நிகழ முடியாதபடி நிறுத்தப்பட்டது பெரும் சோகமென்றாலும், அந்த மாநதி வேறு திசையில் பயணிக்க நேர்ந்ததில் தமிழ் இலக்கியமும், கவிதையும் அளப்பரிய நன்மை பெற்றன. நமக்கு ஒரு தத்துவக் கவி, கிடைத்துவிட்டார். புதிய வண்ணங்களிலும் வடிவங்களிலும் மாய விளையாட்டைச் செய்யும் ஒரு மகாகவி கிடைத்துவிட்டார். முழு நேரமும் அரசியலால் கொள்ளை கொள்ளப்பட்ட அவருடைய சிந்தனை புதிய வெளிச்சக் கிரணங்களால் ஆட்கொள்ளப்பட்டது.

பாரதியாரின் புதிய பாய்ச்சலுக்கு உந்து சக்தியாக இருவர் புதுவை வந்து சேர்ந்தனர். 1910-ம் ஆண்ட ஏப்ரல் மாதம் 4-ம் நாள் அரவிந்தரும், அக்டோபர் மாதம் வ.வே.சு. அய்யரும் புதுவை வந்தடைந்தனர். தீவிரப் புரட்சிவாதிகளாக இருந்து ஆன்மிக, இலக்கிய நாயகர்களாக மாறியவர்கள் இவர்கள். அரவிந்தரும், அய்யரும் பாரதியாரோடு பூண்ட நெருக்கத்தால் அவருடைய இலக்கிய வளம் ஆழமும், விரிவும் கொண்டதாக மாறியது. வேத, உபநிடதங்களும், மேலை இலக்கியங்களும் இவர்களது அன்றாட உரையாடலின் பொருள்களாயின.


பாரதியார் புதுவையில் இருந்த வீடு

1911-ம் ஆண்டு ஜூன் 17-ம் நாள் மணியாச்சியில் வாஞ்சி என்னும் இளைஞன் ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்ற போது, ஆங்கில அரசின் பார்வை புதுவையை நோக்கி நீண்டது. வாஞ்சி புதுவை வந்து சென்றது உண்மை என்றாலும், பாரதியாருக்கு இந்தக் கொலை முயற்சியில் தொடர்பு இல்லை. ஆயினும், பிரெஞ்சு - ஆங்கிலக் காவல்துறை கைகள் கோத்துக்கொண்டு பல இடர்ப்பாடுகளைத் தேச பக்தர்களுக்கு உண்டுபண்ணியது உண்மை.

ஒருவாறு இந்த அலைகள் ஓய்ந்தன. பாரதியாருக்குப் புதுவையில் நேசமும் நெருக்கமும் உள்ள நண்பர்கள் பெருகினர். கனக சுப்புரத்தினம் (பாரதிதாசன்), குயில் சிவா, பொன்னு முருகேசம் பிள்ளை, ஆறுமுகம் செட்டியார், பிரமராய அய்யர் எனக் கவிஞரால் பெயர் சூட்டப்பட்ட சுப்பிரமணிய அய்யர், கலவை சங்கரன் செட்டியார், குவளைக் கண்ணன், நாகசாமி என ஒரு அன்பர் பட்டாளம் பாரதியாரைச் சூழ்ந்திருந்தது. புதுவையின் ஏழை மக்கள் அவரைத் தோழராக நேசித்தனர். அப்போது பாரதியாரின் இல்லம் எப்படி இருந்தது என்பதைச் சில மாதங்கள் அவருடன் தங்கியிருந்த வ.ரா. அருமையாகக் குறிப்பிடுகின்றார்:



*பாரதியாரால் பூணூல் அணிவிக்கப்பட்ட ஹரிஜனச்சீடர் ரா. கனகலிங்கம்*

"(பாரதியார் தங்கியிருந்த) விளக்கெண்ணெய்ச் செட்டியாரின் வீடு சங்கப் பலகை, கான மந்திரம், அபய விடுதி, சுதந்திர உணர்ச்சிக் களஞ்சியம், அன்னதான சத்திரம், மோட்ச சாதன வீடு, ஞானோபதேச அரங்கம்."

அந்தப் புதுவை வாசம் - சிரமங்கள் இருந்த போதிலும் - பாரதியார் வாழ்வின் பொற்காலம். குடும்பப் பிரச்சினை களும், வறுமையும் தலை காட்டி னாலும், 'சிட்டுக் குருவியைப் போல் விட்டு விடுதலை' ஆகிற பக்குவம் பாரதியாருக்கு அமைந்தது. தீண்டாமை யைக் காலில் போட்டு மிதிக்கிற சமத்துவ நெஞ்சம் அவருடையது என்பதால் தாழ்த்தப்பட்ட இனத்துச் சிறுவன் கனகலிங் கத்துக்குப் பூணூல் அணிவிக்கிற துணிவு அவருக்கு ஏற்பட்டது.

புதுவையின் தோப்பும், துரவும், மடுவும், கடலும் இயற்கை வனப்பும் அவருக்குள் கவிதை மீட்டின. அதன் பயனாக அருமையான படைப்புகள் பிறந்தன. கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், குயில் ஆகிய தனிச் சிறப்புமிக்க நூல்களோடு, நெஞ்சத்தை அள்ளும் தனிப்பாடல்களும், அரிய கட்டுரைகளும், கதைகளும் புதுமெருகோடு தமிழ் பெற்ற (சீ)தனமாகக் கிடைத்தன.

ஆயினும், அவருடைய காலத்தில் ஜென்ம பூமி, ஸ்வதேச கீதங்கள் தவிரக் கண்ணன் பாட்டும், பாஞ்சாலி சபதம் முதல் பாகமும், கனவு என்ற படைப்பும், பாப்பாப் பாட்டும், முரசுப் பாட்டும் சில தேசியக் கவிதைகளும், புதிய ஆத்திசூடியும், ஞானரதமும், ஆறிலொரு பங்கு கதை நூலும், பாரத ஜன சபை, The Fox with the Golden Tail ஆகியனவும் மட்டுமே வெளிவந்தன. பிற படைப்புகள் அவர் காலமான பிறகே வெளிச்சம் கண்டன என்பது வேதனையான செய்தி.

***1917***-லிருந்தே தாயகம் திரும்பும் கட்டுக்கடங்காத ஆவல் அவருக்கு இருந்தது. இந்தப் பரபரப்பைக் குறித்துப் புதுவையில் அவரோடு இருந்த பலரும் வருந்தியுள்ளனர். ஆனாலும் எடுத்த முடிவில் பின்வாங்காத இயல்புடையவர் கவிஞர்.

***1918*** - இறுதியில் முதல் உலகப் போர் முடிவுக்கு வந்தபோது இந்திய சுதந்தரத்துக்கு ஒரு விடிவு பிறக்கும் - மக்களாட்சியை நோக்கிய ஒரு பயணம் தொடங்கும் என்று நம்பினாரோ என்னவோ! நவம்பர் மாதம் 20-ம் தேதி புதுச்சேரியிலிருந்து செல்லம்மாளை அழைத்துக்கொண்டு ஒரு குதிரை வண்டியில் கடலூர் நோக்கிப் புறப்பட்டார். கடலூரை நெருங்குமுன் சிறை பிடிக்கப்பட்டார். சுதேசமித்திரன் ஆசிரியர் ரங்கசாமி அய்யங்கார் உட்படப் பலர் செய்த முயற்சியின் விளைவாக டிசம்பர் ***14*** பிற்பகலில் சில நிபந்தனைகட்கு உட்பட்டு விடுதலை செய்யப்பட்டார்.

நேரே கடையத்தில் - தம் மாமனார் கிராமத்தில் வந்து தங்கிய பாரதியார், நெல்லையப்ப பிள்ளைக்கும் மற்றவர்களுக்கும் தம் நூல்களை வெளியிடுவது குறித்துக் கடிதங்கள் எழுதினார். ***1919***-ல் சென்னை வந்து விக்டோரியா ஹாலில் சில வேதாந்தச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அப்போது சென்னைக்கு வந்திருந்த காந்தியடிகளைச் சந்தித்தார். காந்தியடிகளின் அகிம்சைப் போர்முறை அவரை மிகவும் கவர்ந்திருந்தது. அடுத்த நாள் கடற்கரையில் தம் தலைமையில் அடிகள் பேச வேண்டுமென அழைத்தார். ஆனால், காந்தியடிகளுக்கு அந்த நாள் வாய்ப்பாக இல்லை என்று அறிந்ததும், தாம் அவரது இயக்கத்தை வாழ்த்துவதாகச் சொல்லிவிட்டு வெளியேறினார். இவர் யார் என்பதை அறிந்து கொண்ட காந்தியடிகள், ‘இவரைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும். இதற்குத் தமிழ்நாட்டில் ஒருவரும் இல்லையா?’ என்று கேட்டார். இந்த நிகழ்ச்சியை நேரில் கண்ட வ.ரா. தம் நூலில் பதிவு செய்திருக்கிறார்.



*காந்தியடிகள் (1919)*

கொழுகொம்பின்றித் தவித்த கொடி போல அலைந்து திரிந்த பாரதியார் எட்டயபுரத்துக்கும் சென்றார். அப்போது ஜமீன்தாராக இருந்த வெங்கடேசுர எட்டப்ப பூபதிக்கு இரண்டு சீட்டுக் கவிகள் எழுதி அனுப்பினார். எந்தப் பதிலும் இல்லை. ஆனால், அந்தக் கவிதைகள் பாரதியாரின் கம்பீரத்தைப் புலப்படுத்தி இன்றும் வாழ்கின்றன. 1919 ஆகஸ்ட் மாதம் மீண்டும் மன்னருக்குக் கடிதம் எழுதினார், எட்டயபுர அரசர் வரலாறான 'வம்சமணி தீபிகை'யை நல்ல தமிழில் வசன காவியமாக வடித்துத் தருவதாக. ஒரு கவிஞனின் வாழ்நிலை கடும் சோதனைக்கு உள்ளானதற்கு இக்கடிதம் ஒரு அடையாளம்.

செட்டிநாட்டு அன்பர் வை.சு. சண்முகம் வேண்டுகோளுக்கிணங்கிக் கானாடு காத்தான் என்ற ஊருக்கு 1919 அக்டோபர் 28-ம் நாள் சென்று சில நாட்கள் தங்கினார். ஓரளவு மன ஆறுதல் ஏற்பட்டது பாரதியாருக்கு. காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்துக்கும் இதே பயணத்தின்போது சென்றார் கவிஞர். இந்தச் சமயத்தில் பாரதியாரை ஒரு சில நிமிடம் சந்திக்க நேர்ந்த பேற்றை நாமக்கல் கவிஞர் குறிப்பிட்டிருக்கிறார். அப்போது ஓவியராகப் புகழ் பெற்றிருந்தார் நாமக்கல் கவிஞர். சில கவிதைகளும் எழுதி யிருந்தார். இதனை அறிந்துகொண்ட பாரதியார்,

> ''பலே பாண்டியா, பிள்ளை நீர் ஒரு கவிஞர், ஐயமில்லை. நீர் எம்மை ஓவியத்தில் தீட்டும். நாம் உம்மைக் காவியத்தில் தீட்டுகிறோம்''

என்று சொன்னாராம்.

எதிர்காலம் குறித்துக் குழம்பியிருந்த நிலையில் 'அமிர்தம்' என்ற இதழ் ஒன்றைத் தொடங்கவும் ஆசைப்பட்டார் பாரதியார். அதற்காகச் சொத்தை விற்றேனும் பணம் கொண்டுவரும்படி சீனிவாச வரதன் என்ற அன்பருக்கு 1920-ம் ஆண்டு ஆகஸ்ட் 26-ம் நாள் எழுதிய கடிதத்தில் தெரிவிக்கிறார். ஒரு மகாகவிக்கு எப்படிப்பட்ட தவிப்பு இது!

1920-ம் ஆண்டு ஜூலை கடைசியில் மீண்டும் சென்னை புறப்பட்ட பாரதியார் சுதேசமித்திரனில் பணியாற்ற விரும்பினார். ரங்கசாமி அய்யங்கார். பணியில் அமர்த்திய பின் ஆகஸ்ட் மாதத்திலிருந்து மித்திரனில் அவர் எழுத்துக்கள் வலம் வரலாயின.

1921 மே 2, 3 ஆகிய நாட்களில் திருவண்ணாமலையில் பாரதியார் கலந்துகொண்ட கூட்டங்கள் குறித்துச் சுதேசமித்திரனில் செய்திகள் வெளியாகியுள்ளன.

திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலுக்கு நாளும் செல்லும் வழக்கமுடைய பாரதியார் கோயில் யானைக்குப் பழம் கொடுப்பதில்

விருப்பம் கொண்டிருந்தார். ஒருநாள் மதம் பிடித்திருந்த யானை அவரைத் துதிக்கையால் தள்ளிவிட்டது. யானையின் காலடியில் கிடந்த பாரதியாரை ஓடோடி வந்து குவளைக் கண்ணன் காப்பாற்றினார். 'வீரர்பிரான்' என்று பாரதியார் அவரை அழைத்ததை மெய்ப்பித்துவிட்டார்.



சில நாள் ஓய்வுக் குப்பின் மீண்டும் அலுவலகம் செல்லத் தொடங்கினார் பாரதியார். கவிஞரின் மெய்த்தொண்டர் ஈரோடு தங்கப்பெருமாள் பிள்ளை கேட்டுக் கொண்டதற்கு இணங்க ஈரோடு அருகிலுள்ள கருங்கல்பாளையத்தில் 1921 ஜூலை 31-ம் நாள் 'மனிதனுக்கு மரணமில்லை' என்ற தலைப்பில் உரையாற்றினார். இந்த நிகழ்ச்சியும் மித்திரனில் பாரதியார் வாயிலாகவே கட்டுரையாக வெளிவந்துள்ளது. பெரும்பாலும் இதுவே பாரதியார் கலந்து கொண்ட கடைசி வெளியூர் நிகழ்ச்சியாக இருக்கக்கூடும்.

கொஞ்சம் கொஞ்சமாக உடல் நலிவு பெறத் தொடங்கிய பாரதியாருக்கு செப்டம்பர் மாதத்தில் மேலும் நலம் குன்றியது. வயிற்றுக் கடுப்பு நோய் முற்றிய நிலையில் மருந்து உன்ன மறுக்கத் தொடங்கினார். 1921 செப்டம்பர் 11-ம் நாள் நிலைமை கடுமையாகியது. 11-ம் நாள் நள்ளிரவு கடந்து இரவு இரண்டு மணி. 12-ம் தேதி அதிகாலைப்பொழுதில் அந்த மகாகவியின் மூச்சு நின்றது. பாரதியார் தமிழ் இலக்கிய வரலாற்றில் சாகா வரம் பெற்ற சரித்திரமானார். அலைபட்ட வாழ்க்கை ஓய்வு கொண்டது.

மண்டயம் சீனிவாசாச்சாரியார், திருமலாச்சாரியார், நெல்லையப்ப பிள்ளை, சக்கரைச் செட்டியார், சுரேந்திர நாத் ஆர்யா, ஹரிஹர சர்மா, குவளைக் கண்ணன் உள்ளிட்ட இருபது பேர் இறுதி ஊர்வலத்தில் கலந்துகொண்டார்கள் என்பது செய்தி.

முப்பத்தொன்பது வயதுகூட நிறையாத நிலையில் பாரதியார் காலமானார். ஆனால், முதிர்ந்து கனிந்த தீர்க்க தரிசனம் மிக்க கவிதைகளால் நூற்றாண்டுகளை ஊடுருவிக்கொண்டு உயிர்த்திருக்கிறார் நம் மகாகவி.



# 3. படைப்புகளூடே ஒரு பயணம்

மகாகவி வாழ்ந்த காலம் குறைவென்றாலும் வடித்த படைப்புகள் பல. அவற்றின் வண்ணமும், வடிவமும், வகைமையும் மலைப்பும் வியப்பும் தருவன.

ஒரு பருந்துப் பார்வையில் அவற்றை இங்குப் பார்ப்போம்.

*1905*-க்கு முன் சில கவிதைகளை எழுதியிருந்தாலும் அந்த ஆண்டிலிருந்துதான் அவர் பெயர் சொல்லும் பாடல்கள் பிறந்தன எனலாம். *1910*-ம் ஆண்டு வரையிலும் வெளிவந்த கவிதைகளில் செம்பாகம் தேசியக் கவிதைகள். அவற்றைத் தனி இயலில் காண்போம்.

## தனிப்பாடல்கள்

கண்ணன் பாட்டு (23 கவிதைகள்), குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகிய முப்பெரும் பாடல்களையும், தேசியம் சார்ந்த 53 கவிதைகளையும் தவிர்த்துவிட்டுப் பார்த்தாலும், கணிசமான தனிப் பாடல்கள் பாரதியாரின் அரிய படைப்புகளாக நமக்குக் கிடைக்கின்றன.

சுய அனுபவங்களின் சுருதியை மீட்டுபவை சில. மாயக் கனவாய் மயக்குபவை சில. இயற்கையின் பேரழகில் லயித்து, லயிக்க வைப்பவை சில. உணர்ச்சிப் பிரளயமாய் வெடிப்பவை சில. ஏக மௌனத்தில் சிலிர்ப்பவை சில. இப்படி ஆயிரம் உணர்வுகளின் மின்னல்களால் நெசவு செய்த நேர்த்தியைத் தனிப் பாடல்களில் சந்திக்கலாம்.

> ' நல்லதோர் வீணை செய்தே - அதை
> நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ
> சொல்லடி சிவசக்தி - எனைச்
> சுடர் மிகும் அறிவுடன் படைத்துவிட்டாய்'

என்ன முரண்பாடு அம்மா இது? அறிவு சுடர்கிறது, பயனில்லையே! அடி சிவசக்தி! வீணையைப் புழுதியிலா புதைக்கிறாய்?

> ' என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
> தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே'

என்று திருமூலரைப் போல் நிறைவு கொள்ள முடியவில்லையே என்று பதைத்துத் துடிக்கும் கவிஞர் தாம் புறக்கணிப்புப் புழுதியில் கிடப்பதாகக் கவலைப்படுகிறார்.

துயரப்படுத்தும் வறுமைதான் புழுதி போலும். இன்னொரு கவிதையில் சொல்கிறார்:

> ' எனைத் துயர்ப்படுத்த வந் தெய்தியது உலகில்
> கொடியன யாவுளும் கொடியதாம் மிடிமை'

தம்முடைய 'சித்தக் கடல்' என்ற நினைவுக் குறிப்புகளில் வாட்டி வருத்திய வறுமை குறித்து நொந்து அவரே எழுதியதுண்டு.

''செட்டி பணத்துக்கு எத்தனை நாள் பொய் சொல்லுகிறது? பொய் வாயிதா, பொய் வாயிதா, பொய் வாயிதா - தினம் இந்தக் கொடுமைதானா? சீச்சீ!'' (சித்தக் கடல்).

இந்தக் கொடிய வறுமை அவருக்கு வாழ்வின் மறுபக்கமாக இருந்தது. 'லட்சுமி தேவி - சரண் புகுதல்' என்ற கவிதையில் கூறுகின்றார்:

> ' போதுமிவ் வறுமையெலாம் - எந்தப்
> போதிலும் சிறுமையின் புகைதனிலே
> வேதனைப் படுமனமும் - உயர்
> வேதமும் வெறுப்புறச் சோர் மதியும்
> வாதனை பொறுக்கவில்லை...'

வறுமையால் எற்றுண்டு வாடிய சங்கப் புலவன் வள்ளல்களை நாடினான். பாரதியாரும் எட்டயபுரம் மன்னரை நாடியதுண்டு. சங்கப் புலவன், 'யானுமோர் வாணிகப் பரிசிலன் அல்லேன்' என்று தன்மானம் காத்ததுண்டு. பாரதியாரும் சீட்டுக் கவியில்,

> ' விண்ணளா வுயர்ந்த கீர்த்தி
> வெங்கடேசு ரெட்ட மன்னா
> பண்ணளவு உயர்ந்த தென்பண்
> பாவளவு உயர்ந்த தென்பா'

என்று பெருமிதம் காத்ததுண்டு.

ஆனால், அந்த வரம்பையும் தாண்டி, தம் வறுமையை சமுதாயத்தின் அடித்தட்டு மக்களின் வறுமையோடு இணைத்துப் பார்த்தது பாரதியாரின் பெருமை.

' மண்ணில் ஆர்க்கும் துயரின்றிச் செய்வேன்
வறுமை என்பதை மண்மிசை மாய்ப்பேன்'

என்று பேசுகிற பொதுமை, சமத்துவம், சகோதரத்துவம் அவரைத் தனித்துவத்தோடு அடையாளம் காட்டுகிறது.

' இனியொரு விதி செய்வோம் – அதை
எந்த நாளும் காப்போம்
தனி ஒருவனுக்கு உணவிலையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்'

என்ற கவிஞரின் குரலில் சமுதாயத்தின் ஆன்மாவோடு தம் ஆன்மாவைக் கரைத்துக்கொள்கிற (identifying with the greater soul of humankind) உயர்ந்த ஆதர்சம் ஒளி வீசுகின்றது.

## கனவுகளில் திளைப்பு

மண்ணின் துயரங்கள் முள்படுக்கையாக உறுத்துகையில் அவற்றைச் சற்றே மறந்துபோகக் கனவுகளில் அடைக்கலமானவர் பாரதியார்.

'நிலாவும் வான்மீனும் காற்றும்' என்ற அழகிய கவிதையின் கடைசிப் பகுதியில் வாழ்க்கையின் குறுக்கு வெட்டான செய்திகளை வரிசைப்படுத்துகிறார். மணி ஓசை, தொடர்ந்து நாய்களின் குரைப்பொலி, இவற்றின் காரணத்தில் தோயும்போது 'அன்னக்காவடி பிச்சை' என்ற ஏக்கக் குரல் வருகிறது. அடுத்து, பிச்சை இல்லை என்று சொல்லாமல் சொல்லும் ஒலியாக வீதிக் கதவின் அடைப்பு ஓசை எழுகிறது. இவைகளை எண்ணுகின்ற கவிஞர் கூறுகிறார்:

' ஏதெது கொண்டு வருகுது காற்றவை
எண்ணில் அகப்படுமோ?
சீதக் கதிர்மதி மேற்சென்று பாய்ந்தங்குத்
தேனுண்ணு வாய் மனமே'

துயரங்களை மறக்க இயற்கையில் ஈடுபடச் சொல்கிறது கவிதை.

புதுவையில் புயல் வீசியது. **1916** நவம்பர் **22**-ம் நாள். பேரழிவு நேர்கிறது. பாரதியாரும், அய்யரும், பாரதிதாசனும் நிதி திரட்டி ஏழை மக்களுக்கு உணவு தருகின்றனர், குடிசைகள் கட்டித் தருகின்றனர். மரணமும் அழிவும் மனத்தை வேதனைப்படுத்திய நாட்களில் ஒருநாள் ஆறுதல் நாடி வயல்வெளிகளில் நடக்கிறார் பாரதியார்.

' வயலிடையினிலே - செழுநீர்
மடுக் கரையினிலே
அயலெவரும் இல்லை - தனியே
ஆறுதல் கொள்ள வந்தேன் '

என்று தொடங்கும் 'பிழைத்த தென்னந்தோப்பு' பாடலில் கூறுவார்:

' தனிமை கண்டதுண்டு - அதிலே
சாரம் இருக்கு தம்மா'

எனவே, சோகங்களை இயற்கையின் மடியிலே புதைப்பதும் பாரதியார் வழக்கம். அல்லது புனைவியல் கவிஞர்களின் முக்கியமான ஒரு பண்பாக 'மண்ணுலகை மறந்து பறத்தல்' என்ற இயல்பு கூறப்படுகிறதே, அப்படிக் கனவுகளில் திளைத்தலும் பாரதியார் பாங்கு.

பின்னாளில் 'ஸ்வசரிதை' என்று குறிக்கப்பெற்ற ஒரு நெடுங்கவிதைக்குப் பாரதியார் இட்ட தலைப்பு 'கனவு'. இக்கவிதையின் தொடக்கத்தில் பட்டினத்தாரின் கீழ்க்கண்ட வரிகள் அணி செய்கின்றன:

' பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்
மெல்லப் போனதுவே'

உலகம் ஒரு கனவு, அதில் மக்கள் வாழ்வு கனவுக்குள் கனவு, அதில் வரும் காதல் தெய்விகக் கனவு என்று மாயக் கனவுகளில் திளைக்கிறார் பாரதியார்.

' உலகெலாம் ஓர் பெருங்கனா அஃதுளே
உண்டு உறங்கி இடர்செய்து செத்திடும்
கலக மானுடப் பூச்சிகள் வாழ்க்கை யோர்
கனவினும் கனவாகும் இதனிடை
சில தினங்கள் உயிர்க் கமுதாகியே
செப்புதற் கரிதாக மயக்கு மால்
திலக வாணுத லார் தரு மையலாம்
தெய்விகக் கனவு அன்னது வாழ்கவே'

இது ஒரு கவி மனக் கோலம். இந்தக் கனவின் பேரழகுப் பொலிவை,

' மங்கியதொர் நிலவினிலே
கனவில் இதுகண்டேன்'

என்னும் அருமையான கவிதையிலும் பார்க்கலாம். சிறுகதையான 'வேப்பமர'மும், நெடுந் தொடரான 'ஞானரத'மும் கவிஞரின் கனவு விதைகளில் முளைத்தவைதான். பாரதியாரின் கவிதைச் சிகரமான 'குயில் பாட்டு'ம் மோகனக் கனவின் முத்துச் சிதறல்தான்.

'ஆர்ய தரிசனம்' என்றொரு அற்புதக் கனவு. அந்தக் கனவை 'நனவில் தோன்றிய கனவு' என்கிறார் கவிஞர்.

' கன வென்ன கனவே - என்றன்
கண் துயிலாது நனவினிலே உற்ற
கன வென்ன கனவே'

எனத் தொடங்குகிறது கவிதை. ஒரு கானகம், நிலவொளி, ஒரு பொற்குன்றம், குன்றின்மேல் ஆலமரம். அதன் நிழலில் புத்த பகவான் தவமியற்றும் கோலம். சட்டென இருள் சூழ்கிறது. மீண்டும் வெளிச்சம் பரவியபோது தேர் ஒன்று தெரிகிறது. தேரோட்டியாகக் கண்ணன். அருச்சுனன் போரியற்றத் தயங்குகிறான். கண்ணன் சொல்கிறான்:

' வில்லினை எடடா - கையில்
வில்லினை எடடா - அந்தப்
புல்லியர் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா'

கனவுக்குள் ஒரு கருத்துள்ள நாடகம்! இப்படி வாழ்வின் குழப்பங்களிலிருந்து கனவுக்குள் பாய்தல் நிகழ்கிறது பாரதியார் கவிதைகளில்!

### சமுதாய அறம்

'அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும்' உச்சத்தில் கொண்ட ஒரு சமுதாயம் விழிப்புணர்வு கொள்ளவேண்டு மென்று விழைந்தது பாரதியார் திருவுள்ளம். பேதைமையில் மூழ்கிய மக்களைக் கண்டு பொருமியது அவர் கவிதை.

' நெஞ்சு பொறுக்கு தில்லையே - இந்த
நிலைகெட்ட மனிதரை நினைத்து விட்டால்
அஞ்சி அஞ்சிச் சாவார் - இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே'

என்று அவல மையத்தை அடையாளம் கண்டுகொள்கிறார்.

பேய், பிசாசு, பில்லி சூனியம், மந்திரம், அரசியல், காவல்துறை என்று ஆயிரம் அச்சங்களுக்கு இரையாகிக் கிடப்பதால் தங்கள் வேதனைகளின் வேர்களையும் இந்த மக்கள் உணர்ந்திருக்க வில்லை.

‘ கஞ்சி குடிப்பதற் கிலார் - அதன்
காரணங்கள் இவையென்னும் அறிவுமில்லார்’

இத்தகைய மக்களுக்குப் புத்துணர்வின் நம்பிக்கை மந்திரத்தைப் புலப்படுத்துவதற்காக அச்சத்திற்கு எதிராக ஆற்றல்மிகு போர்க்குரலை எழுப்பினார்.

‘ அச்சமில்லை அச்சமில்லை
அச்சமென்ப தில்லையே’

என்பது அவர் மந்திரச் சொல். ‘உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதினும்’, ‘இச்சகத்துளோர் எலாம் எதிர்த்து நின்ற போதினும்’, ‘நச்சை வாயிலே கொணர்ந்து நண்பர் ஊட்டு போதினும்’ - அச்சமில்லை என்று துணிவின் தலைவாசலில் நின்று முழக்கம் செய்தார்.

‘ பயமெனம் பேய்தனை அடித்தோம்.- பொய்ம்மைப்
பாம்பைப் பிளந்து உயிரைக் குடித்தோம்’

என்று தம் மனத்துக்குச் சொல்வது போல் மக்களுக்கு வீர உணர்வை விதையாய் ஊன்றினார்.

பச்சை மண்ணான குழந்தைகள் நெஞ்சில் அல்லவா இந்த மறக்குலப் பண்பு பதிவு செய்யப்பட வேண்டும். அதனால் பாப்பாப் பாட்டு, முரசு, புதிய ஆத்திசூடி ஆகிய குழந்தைகள் இலக்கியத்தைப் படைத்து இளம் நெஞ்சில் உரமேற்றினார்.

‘ வைர முடைய நெஞ்சு வேணும் - இது
வாழும் முறைமையடி பாப்பா’

‘ பாதகம் செய்பவரைக் கண்டால் - நீ
பயம் கொள்ளல் ஆகாது பாப்பா
மோதி மிதித்து விடு பாப்பா - அவர்
முகத்தில் உமிழ்ந்து விடு பாப்பா’

இவ்வாறு உருக்கைக் காய்ச்சி உள்ளங்களில் ஊற்றிய கவிஞர் புதிய ஆத்திசூடியை ‘அச்சம் தவிர்’, ‘ரௌத்திரம் பழகு’, ‘தொன்மைக்கு அஞ்சேல்’, ‘முனையிலே முகத்து நில்’, ‘கிளை பல தாங்கேல்’ என்ற புதுயுக ஆயுதக் கூடமாக்கினார். ‘ஆறுவது சினம்’ என்றும், ‘முனை

முகத்து நில்லேல்' என்றும், 'ஙப்போல் வளை' என்றும் ஔவையார் சொல்லியவைகளை அறவே மறுத்துக் காலத்தின் குரலாக ஒலித்தார். 'மீதூண் விரும்பேல்' என்று பாட்டி சொன்னால், 'ஊண்மிக விரும்பு' என்று திருப்பித் தாக்கினார்.

சாதிப் பிரிவுகளில் தீ மூட்டும் விதத்தில் 'தகர் என்று கொட்டு முரசே, பொய்ம்மைச் சாதி வகுப்பினை யெல்லாம்' என்றும்,

' சாதிகள் இல்லையடி பாப்பா - குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்'

என்றும், சமய சமத்துவம் பேணியவராய்,

' தெய்வம் பலப்பல சொல்லி - பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர்'

என்றும் ஓர் ஆசானாக நின்று சமத்துவ அறம் போதித்தார்.

அறிவியல் பார்வை பாரதியாரின் தனித்துவம் எனலாம். 'சாத்திரம் கண்டீர் சாதியின் உயிர்த்தலம்' என்று விதியை நோக்கிப் பேசிய கவிதையில் சுட்டிக் காட்டுவார். சாத்திரம் என்று அறிவியலையும், சாதி என்று தேசத்தையும் (Nation) குறித்தார்.

' வானை அளப்போம் கடல் மீனை அளப்போம்'

' சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம்'

' கோணிகள் செய்வோம் இரும் பாணிகள் செய்வோம்'

என்று புதிய யுகத்தின் தூதுவராகப் பேசுகின்றார் பாரதியார்.

இந்த அறிவியல் பார்வை காரணமாகவே, புதிய யந்திரத் தொழில் வினைஞர்களுக்குத் தெய்வ மகத்துவம் நல்கி மகிழ்ந்தார்.

' இரும்பைக் காய்ச்சி உருக்கிடுவீரே
எந்திரங்கள் வகுத்திடுவீரே
கரும்பைச் சாறு பிழிந்திடுவீரே
கடலில் மூழ்கி நன் முத்தெடுப் பீரே
அரும்பும் வியர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரம் தொழில் செய்திடு வீரே
பெரும் புகழ் நுமக்கே இசைக்கின்றேன்
பிரமதேவன் கலைஇங்கு நீரே'

இத்தகு விஞ்ஞான நோக்குத்தான் அவரை எழுபத்தைந்து ஆண்டுக்கு ஒருமுறை வரும் ஹாலி வால் நட்சத்திரத்தோடு கைலாகு கொடுத்துப் பேச வைத்தது (சாதாரண வருஷத்துத் தூமகேது).

பாரதியார் தம் 'உல்லாஸ சபை' என்ற கட்டுரையில் எமில் வெர் ஹேரன் என்னும் பெல்ஜிய தேசக் கவிஞரின் கருத்தை எடுத்துரைத்து அதனை ஆதரிக்கிறார்.

''எமீல் வெர் ஹேரன் என்பவருடைய கொள்கை யாதென்றால் - 'வலிமையே அழகு. ஒரு பொருளின் வெளியுருவத்தைப் பார்த்து அது அழகா இல்லையா என்று தீர்மானம் செய்யலாகாது. யந்திரங்களிலே வலிமை நிகழ்கின்றது. ஆதலால் அவை அழகுடையன. அவற்றைக் கவி புகழ்ச்சி செய்தல் தகும்.' ''

அறிவியல் பார்வையும் அணுகுமுறையும் பாரதியாரின் இலக்கியப் படைப்புகளையும் அழகு செய்கின்றன.

## பெண்மைக்கு வாழ்த்து

பெண்ணியம் இலக்கிய உலகிலும், சமூதாய வாழ்விலும் ஒரு தலைமைக் கோட்பாடாக இன்று வளர்ந்திருக்கிறது. ஆனால், பாரதியாரின் காலமும் களமும் வேறு. அன்று குழந்தை மணம், கைம்மைக் கொடுமை, பெண் கல்வி மறுப்பு, காதல் மண எதிர்ப்பு ஆகிய முள் பாதையில் பெண்கள் நடமாட வேண்டிய கட்டாயம் இருந்தது. சூழலின் கடுமையைச் சுட்டெரிக்கும் கவிதைகளாலும், கட்டுரைகளாலும், கதைகளாலும் எதிர்கொண்டார் பாரதியார்.

ஏழு வயதுச் செல்லம்மாளை மணம் முடிக்க நேர்ந்த பாழும் குழந்தை மணக் கொடுமையைப் பேசுகின்ற அவர் கவிதை, ஒரு சாபத்தோடு முடிகிறது.

' பாலருந்தும் மதலையர் தம்மையே
    பாதகக் கொடும் பாதகப் பாதகர்
மூலத்தோடு குலம்கெடல் நாடிய
    மூடமூட நிர்மூடப் புலையர்கள்
கோலமாக மணத்திடைக் கூட்டுமிக்
    கொலையெனும் செயல் ஒன்றினை உன்னவும்
சால இன்னுமோர் ஆயிரம் ஆண்டிவர்
    தாதராகி அழிக எனத் தோன்றுமே'

இப்படிப்பட்ட ஒரு சமூகம் இன்னும் ஆயிரம் ஆண்டுகள் அடிமைகளாகவே அழிந்து தொலையட்டும் என்று சாபம் இட வேண்டுமானால், பாரதியார் உள்ளம் பட்ட துயரத்தின் அளவை உணர்ந்துகொள்ள முடியும்.

தம் விதவை மகளுக்கு மறுமணம் செய்துவைத்த புரட்சிக்காரரான ஜி. சுப்பிரமணிய அய்யரைப் போலவே சென்னை ஆசார சீர்திருத்தச் சங்கத்தில் (Madras Social Reform Association) பாரதியாரும் உறுப்பினராக இருந்தார். மாதர்களின் அறிவு வளர்ச்சிக்கென்றே தாம் ஆசிரியராக இருந்த 'சக்கரவர்த்தினி' இதழில் பல கட்டுரைகளை வெளியிட்டார். 'பாரத குமாரிகள்' என்ற கட்டுரையில் 'Can man be free if woman be a slave?' என்ற மேற்கோளை முன்வைத்தார். இதன் அடித்தளத்தில் நின்று 'புதுமைப்பெண்', 'பெண்கள் விடுதலைக் கும்மி', 'பெண்மை' எனக் கவிதைகள் தீட்டினார்.

' கற்பு நிலையென்று சொல்ல வந்தார் – இரு
கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம் '

' ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவில் ஓங்கி இவ்வையம் தழைக்குமாம் '

' நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம் '

என்றெல்லாம் பெண்ணுரிமைக்கு வெடிப்புறப் பேசுகிறார் பாரதியார்.

பெண்களுக்கென அவர் வகுத்துக் கொடுத்து ஒன்பது கட்டளைகள் (விருப்பமில்லாத் திருமணத்தை வற்புறுத்தலாகாது, கணவனைப் பிரியும் உரிமை வேண்டும், சொத்துரிமை தரப்பட வேண்டும், மறுமணம் செய்வதைத் தடுக்கக் கூடாது, திருமணமின்றி வாழ உரிமை உண்டு முதலியன) Charter of women's rights என்று கூற முற்றிலும் தகும் (பெண் விடுதலை 2 கட்டுரை).

தம்முடைய சிறுகதைகளிலும், நாவல்களிலும் பெண் விடுதலைக்கு முக்கியத்துவம் அளித்தார் பாரதியார். அவருடைய 'காந்தாமணி' கதையில் வைதிக வைணவப் பெண் மலையாள இளைஞனை மணந்துகொண்டு காதல் உரிமையை நிலைநாட்டுகிறாள்.

'சந்திரிகையின் கதை'யில் விசாலாட்சி என்ற விதவையின் மறுமணம் பேசப்படுகிறது. கோபாலய்யங்கார் ஓர் இடைக்குலப் பெண்ணை மணம் செய்யும் கலப்பு மணமும் இந்த நாவலில் முக்கியத்துவம் பெறுகிறது.

விதவைகளுக்கு மறுவாழ்வு குறித்து சுவாமி விவேகானந்தரும், காந்தியடிகளும் சொல்லிய கருத்துக்களை மிகக் கடுமையாக

மறுக்கும் பாரதியார் ('மாதர்களைப் பற்றி ஸ்வாமி விவேகானந்தரின் அபிப்பிராயம்', 'இந்தியாவில் விதவைகளின் பரிதாப நிலை' - கட்டுரைகளைப் பார்க்க) பெண் விடுதலையின் போர் முரசாக ஒலிக்கிறார்.

விவேகானந்தரின் கருத்தை 'நொண்டிக் கதை' என்றும், காந்தியடிகள் கூற்றை 'மழுப்புகிறார்' என்று விமர்சிக்கிறார் பாரதியார். தாம் மிகவும் மதித்த பெரியார்களையே பெண்ணுரிமை என்ற தராசில் நிறுத்துப் பார்த்து அதிர்ச்சியூட்டும் வகையில் மறுக்க மகாகவி அஞ்சவில்லை.

பெண் விடுதலையில் கொண்டிருந்த தீவிர ஈடுபாட்டால் காதலையும், தாய்மையையும் இரு கண்களெனப் பாவித்தார் பாரதியார். பல கவிதைகள் இது குறித்துப் பேசுகின்றன. ஆயினும் 'பெண்மை' என்ற கவிதையின் வரிகள் பெண்ணிய முகவரிகளாய் மின்னுகின்றன.

> ' அன்னமூட்டிய தெய்வ மணிக் கையின்
> ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்
> கன்னத்தே முத்தம் கொண்டு களிப்பினும்
> கையைத் தள்ளும் பொற் கைகளைப் பாடுவோம்'

என்ற வரிகளில் தாயும், தலைவியும் ஒருசேர வருகின்றனர். அன்னை கை தெய்வ மணிக் கையாம்! ஆருயிர் ஆனவள் கையோ பொற் கையாம்! உயிர் தந்த தாய் தெய்வமாகிறாள்! உணர்ச்சியில் உறவாடும் காதலி தங்கமாகிறாள்!

> ' தையலை உயர்வு செய்'

என்று மகாகவி புதிய ஆத்திசூடியில் வரைந்த மந்திரம் 21-ம் நூற்றாண்டினைப் பெண்களின் நூற்றாண்டாக மாற்றிவிட்டது என்றால் மறுக்க முடியுமா?

## பக்திப் பிரபஞ்சம்

பாரதியாரின் பக்திப் பனுவல்கள் முன்னையோர் பாடல்களினின்று மாறுபட்டவை. நான்மணி மாலை, பஞ்சகம், அகவல் என்ற பழைய யாப்பும், அமைப்பும் அங்கங்கே தென்பட்டாலும் 'பொருள் புதிதாய்' அமைந்தவை அவர் பாடல்கள்.

விநாயகர், முருகன், பராசக்தி, கண்ணன் எனப் பல தெய்வத் தோத்திரங்கள் அமைந்தாலும் அவற்றின் கருத்துக் கோலம் சில மையப் புள்ளிகளிலே குடிகொண்டிருப்பதை உணர முடிகிறது.

மனித குலத்தின் விடுதலை, மனிதனைப் பிணித்த வறுமையிலிருந்து மீட்சி, பல்லுயிர் நேயம், சமுதாயத் தொண்டு என்னும் மாட்சிமை மிக்க நோக்குகள் பக்திப் பாடல்களில் கொட்டிக் கிடக்கின்றன.

பக்தி என்பது மனித சமுதாயத்தைச் செம்மைப்படுத்தும் ஒரு பாதை என்ற தெளிவு கவிஞருக்கு இருந்தது.

' பக்தி யுடையார் காரியத்திற்
பதறார், மிகுந்த பொறுமையுடன்
வித்து முளைக்கும் தன்மைபோல்
மெல்லச் செய்து பயனடைவார்'

பயன் அவர்கள் சுயநலத்துக்கு ஆனது அல்ல, பொதுநலம் அதன் சீரிய நோக்கம். இதனை,

' பக்தி செய்து பிழைக்கச் சொன்னாள்
பயன் எண்ணாமல் உழைக்கச் சொன்னாள்'

என்ற வரிகளில் புலப்படுத்துவார்.

'பக்தி' என்ற அழகிய கவிதை அதன் பயன்களைத் தொகுத்துச் சொல்லும். சித்தம் தெளியும்; செய்கை செம்மையாகும்; வித்தைகள் சேரும்; வீரர் உறவு நேரும், காமம் - தாமசம் - தேம்பல் ஆகிய மூன்று பிசாசுகள் ஒழியும்; ஆசையும் பாசமும் விலகும்; சோர்வு, வறுமை, பிணி நீங்கும்; கல்வியும் அறிவும் ஆண்மையும் ஓங்கும் என்று வரிசைப்படுத்துகிறது கவிதை.

விநாயகர் நான்மணி மாலை என்றொரு சிறுநூல். 40 பாடல்களால் அமைந்த ஞான விளக்கு. வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் என நால்வகை யாப்புகளால் அமைந்தமையால் நான்மணி மாலை எனப் பெயர் பெற்றது. எனினும் இந்நூல் சொல்லும் அரும் பண்புகளும் நான்கு. அதனாலும் இது நான்மணி மாலை ஆகிறது.

ஒரு மனிதனுக்கு நான்கு கடமைகள் உண்டு என்று சொல்கிறது இந்நூல்.

' கடமை யாவன : தன்னைக் கட்டுதல்
பிறர்துயர் தீர்த்தல், பிறர்நலம் வேண்டுதல்...
..... .....
உலகெலாம் காக்கும் ஒருவனைப் பேணுதல்'

தற்சீரமைப்புச் செய்துகொள்ளுதல் முதற் கடமை. இதனை உருவாக்கிக் கொள்ள,

' மனதில் சலனம் இல்லாமல்
மதியில் இருளே தோன்றாமல்'

காக்க வேண்டும். குறிக்கோளை இறுக்கமாய் அமைத்துக்கொள்ள வேண்டும்.

' நமக்குத் தொழில் கவிதை நாட்டுக் குழைத்தல்
இமைப் பொழுதும் சோராதிருத்தல்'

இவற்றால் தன்னைக் கட்டி அமைத்தல் வேண்டும்.

' யார்க்கும் எளியனாய், யார்க்கும் வலியனாய்
யார்க்கும் அன்பனாய், யார்க்கும் இனியனாய்'

வாழும் நெறியில் தேர்ச்சி கொள்ளல் வேண்டும். இவையெல்லாம் தன்னைக் கட்டி அமைக்கும் வழிகள்.

பிறர் துயர் தீர்த்தல் இரண்டாம் கடமை. இதனை நான்மணி மாலை நயமுறக் கூறும்.

'குறைந்தாரைக் காத்து எளியார்க்கு உணவீந்து' பிறர் துயர் தீர்த்தல் வேண்டும். இந்த வரம் தரும் மணக்குளப் பிள்ளை 'ஏழையர்க் கெல்லாம் இரங்கும் பிள்ளை' அல்லவா.

பிறர் நலம் வேண்டுதல் மூன்றாம் கடமை. இந்தக் கடமையை எடுத்துரைக்கும்போது பாரதியாரின் எல்லையற்ற கருத்தாளுமை நிகரற்ற சுடரோடு திகழ்கின்றது. ஒரு மகத்தான கனவு விரிகிறது. யாரும் இதுவரை பேசாதது - இந்த வரம் யாரும் இதுவரை கேட்காதது.

' பேசாப் பொருளைப் பேசநான் துணிந்தேன்
கேட்கா வரத்தைக் கேட்க நான் துணிந்தேன்
மண்மீ துள்ள மக்கள் பறவைகள்
விலங்குகள் பூச்சிகள் புல்பூண்டு மரங்கள்
யாவும் என் வினையால் இடும்பை தீர்ந்தே
இன்பமுற்று அன்புடன் இணங்கி வாழ்ந்திடவே
செய்தல் வேண்டும் தேவதேவா...'

இந்த வரத்தை உணர்வோடு கேட்பாராம் கவிஞர். உரிமையோடு இறைவன் வரம் தர வேண்டுமாம்!

' ஞானா காசத்து நடுவே நின்று நான்
பூ மண்டலத்தில் அன்பும் பொறையும்
விளங்குக - துன்பமும் மிடிமையும் நோயும்
சாவும் நீங்கிச் சார்ந்த பல் லுயிரெலாம்
இன்புற்று வாழ்க என்பேன்! இதனை நீ
திருச்செவி கொண்டு திருவுளம் இரங்கி
'அங்ஙனே ஆகுக' என்பாய் ஐயனே'

என்று வேண்டுகிறார் கவிஞர்.

'ஆருயிர்கட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்' என்று ஆன்ம நேயம் பேசினார் வள்ளலார். அனைத்துயிர்க்கும் துன்பம் மட்டுமல்ல, மரணமும் நீங்குக என்று எல்லையை விரிக்கிறார் பாரதியார். ஒரு பரவச நிலையில் பாரதியார் மொழிந்த பாட்டு இது.

நான்காவதாகப் பாரதியார் கூறும் கடமை - இறைவனைத் தொழுதல். எப்படித் தொழுவது என்பதில் புதுமை. 'ஒன்று பரம்பொருள்' என்ற சமய சமரசத் தத்துவம் உருவாகிறது.

' விநாயக தேவனாய், வேலுடைக் குமரனாய்
நாரா யணனாய், நதிச்சடை முடியனாய்
பிறநாட்டி ருப்போர் பெயர்பல கூறி
அல்லா ஏஹோவா எனத்தொழு தின்புறும்
தேவரும் தானாய், திருமகள், பாரதி
உமையெனும் தேவியர் உகந்த வான்பொருளாய்
உலகெலாம் காக்கும் ஒருவனைப் போற்றுதல்'

நான்காம் கடமை. எழுதுவது விநாயகர் நான்மணி மாலை எழுந்தருளுபவர்களோ அல்லாவும், ஏஹோவாவும்!

மற்றொரு பாடலில் நாட்டுப்புறத் தெய்வங்களும் இடம் பிடிக்கின்றன. இருளன், சாத்தன், மாடன் ஆகியவர்களும் சேர்ந்து கொள்கின்றனர். பக்தி என்பது பாரதியாரைப் பொறுத்தவரை சமய சமரசம், உயிரிரக்கம், அற்றார்க்கு உதவி, ஆளுமைச் செறிவு என்பதாக அமைகிறது.

வேறு பல பக்திப் பாடல்களில் மேலும் சில மனித நேய மாண்புகள் இணைகின்றன.

'வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்' என்ற பாடலைச் சரசுவதி தேவி குறித்த படைப்பாக எண்ணுகிறோம். ஆனால், அவள் வழிபாட்டை எப்படிச் செய்யச் சொல்கிறார் என்பதில்தான் வியப்பு.

கலைமகள் வீணை ஒலியில், கவிஞர் உள்ளத்தில், வேதத்தில், முனிவர் வாக்கில், மாதர் பாட்டில்மட்டு மல்லாது குழந்தைகளின் மழலைப் பேச்சிலும் இருக்கிறாளாம். வஞ்சனையின்றித் தொழில் செய்பவர்க்குக் குல தெய்வம் என்றவர் 'கை வருந்தி உழைப்பவர் தெய்வம், கவிஞர் தெய்வம்' என்று அறிமுகம் செய்கிறார். ஆனால் அவளை வழிபடுவது எளிதில்லையாம்.

' மந்திரத்தை முணுமுணுத்து ஏட்டை
வரிசையாக அடுக்கி அதன் மேல்
சந்தனத்தை மலரை இடுவோர்
சாத்திரம் இவள் பூசனை அன்றாம்!'

எதுதான் அவள் வழிபாடு? புரட்சி பொலியும்படி பாரதியார் கூறுகின்றார்:

' வீடு தோறும் கலையின் விளக்கம்
வீதி தோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
நகர்கள் தோறும் பலபல பள்ளி
தேடு கல்வி இலாததோர் ஊரைத்
தீயினுக்கு இரையாக மடுத்தல்
கேடு தீர்க்கும் அமுதம்என் அன்னை
கேண்மை கொள்ள வழியிவை கண்டீர்'

வீடுகளைக் கலைக் கூடமாக்குங்கள், ஒவ்வொரு தெருவிலும் பள்ளிகள் அமையுங்கள் என்பதோடு அமைதி கொள்ளாமல், கல்வி நாடாத ஊரைத் தீயிட்டுச் சாம்பலாக்குவதும் அவளுக்குப் பூசை செய்யும் முறையாம். இது சரசுவதி பாட்டல்ல - ஒரு சமூகப் புரட்சி.

திருமகளைத் துதி செய்யும் பாடலில், அவள் உறையும் இடங்களாகப் பாரதியார் செப்புவன ஆச்சரியமானவை. அவை தனி மனிதர் திருவாக இன்றி நாட்டுச் செல்வங்களாக இருக்கின்றன.

' மண்ணிலுள் கனிகளிலும் - மலை
வாய்ப்பிலும் வார்கடல் ஆழத்திலும்
புண்ணிய வேள்வியிலும் - உயர்
புகழிலும் மதியிலும் புதுமையிலும்
பண்ணுநற் பாவையிலும் - நல்ல
பாட்டிலும் கூத்திலும் படத்தினிலும்'

திருமகள் வீற்றிருக்கிறாளாம். அவளிடம் கவிஞர் அருள் தர வேண்டுகிறார். எதற்கு?

' செல்வம் எட்டும் எய்தி - நின்னால்
செம்மையேறி வாழ்வேன்
இல்லை என்ற கொடுமை - உலகில்
இல்லையாக வைப்பேன்'

வாழ்வின் பெரும் பகுதியை வளமின்றிக் கழித்த கவிஞரின் ஆதங்கம் உலகத்தின் வறுமையைத் தீர்ப்பதுதானாம்!

பக்தி பாரதியாருக்கு ஒரு மார்க்கம். முக்தி அவர் இலக்கு. ஆனால் 'முக்தி' என்ற சொல்லுக்கு அவர் கொள்ளும் பொருள் மோட்சம் அன்று. அது எல்லையற்ற பேரறிவு, அமரத் தன்மை.

' முக்தி என்றொரு நிலை சமைத்தாய் - அங்கு
முழுதினையும் உணரும் உணர்வமைத்தாய்
பக்தி என்றொரு நிலை வகுத்தாய் - எங்கள்
பரமா பரமா பரமா'

என அவர் களி கொள்வது 'முக்தி' என்ற பேரறிவை வசப்படுத்திக் கொள்வதற்காக. வள்ளுவர் சொல்லும் 'வாலறிவு' அது.

' விண்ணுளோர் பணிந்து ஏவல் செய்யாரோ
வெல்க காளி பதங்கள் என்பார்க்கே?'

' குளிர்சுவைப் பாட்டிசைத்தே - சுரர்
குலத்தினில் சேர்ந்திடல் விரும்புகிறோம்'

' அம்மைநற் சிவசக்தி - எமை
அமரர் தம் நிலையினில் ஆக்கிடுவாய்'

இவ்வாறு தெய்வமயமாதலே அவர் பக்திப் பாடல்களின் இலக்கு.

மறக்க வொண்ணாப் பேரழகும், மயங்க வைக்கும் உணர்வெழிலும் கொண்டது 'காணி நிலம்' - கவிதை. பராசக்தியிடம் வெறும் காணி நிலம்மட்டும் கேட்கும் எளிமை. அந்தக் காணி நிலத்திடை ஒரு மாளிகை - தூணில் அழகும் துய்ய நிறமும் உடையதாகக் கட்டித் தர வேண்டும். அப்புறம் பத்துப் பன்னிரண்டு தென்னை மரம், ஒரு கேணி, நிலவின் ஒளி, கத்தும் குயில் ஓசை, இனிய தென்றல் எல்லாம் வரிசையாகக் கேட்கும் சாமர்த்தியம்.

பராசக்தி தலை அசைக்கிறாள் போலும். 'அப்புறம் அம்மா, 'பாட்டுக் கலந்திடவே ஒரு பத்தினிப் பெண்'ணும், அவளோடு நிகழும்

கூட்டுக் களியில் கவிதைகளும் வேண்டும்' என்று இனிதான கோரிக்கை வளர்கிறது.

'எல்லாம் தந்துவிட்டாயா? போதாது தாயே', இன்னும் ஒரு வேண்டுகோள்.

' காட்டு வெளியினிலே - அம்மா நின்றன்
காவல் உற வேண்டும்'.

சரி என்று சொல்லும் பராசக்தி நினைக்கிறாள் போலும். உன் காணி நிலத்துக்குக் காவலுக்கு வந்துவிட்டால் உலகை யார் காப்பது? விடை விரைந்து வருகிறது கவிஞரிடமிருந்து,

'என்றன்
பாட்டுத் திறத்தாலே - இவ்வையத்தைப்
பாலித்திட வேண்டும்'

'உலகத்தை நான் பார்த்துக்கொள்கிறேன் தாயே - என் கையில் கவிதை உண்டு' என்கிறார் - தம்மைக் கடவுள் ஆகக் கருதுகிறார்.

பாரதியின் பக்தி மார்க்கம் கடவுளாகத் தாமே வடிவெடுக்கும் தனி மார்க்கம் ஆகிறது.

## முப்பெரும் பாடல்கள்

பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பார்ட்டு ஆகிய மூன்றும் பாரதியாரின் தனிப்பெரும் படைப்புகளாக மதிக்கப்படுகின்றன. தேசியத்தின் விசுவரூபமான பாஞ்சாலி சபதத்தையும், தத்துவக் குறியீடான குயில் பாட்டையும் வேறு அத்தியாயங்களில் பார்க்கலாம்.

கண்ணன் பாட்டு என்னும் அமுதத்தின் ஒரு விள்ளலை மட்டும் இங்குக் காண்போம்.

தெய்வங்களைப் பிள்ளையாகவும், நாயகனாகவும், தோழனாகவும், தலைவனாகவும், தாயாகவும், குருவாகவும் காணும் நெறி தமிழ் இலக்கியத்தில் உண்டு. பிள்ளைத் தமிழில், சைவ, வைணவப் பாக்களில் நாம் இந்த உறவு நிலைகளில் சிலவற்றைக் கண்டதுண்டு. கண்ணன் பாட்டில் 23 கவிதைகள். தோழன், தாய், தந்தை, சேவகன், அரசன், சீடன், சற்குரு, குழந்தை (ஆண்), குழந்தை (பெண்), ஆண்டான், குலதெய்வம், காந்தன் என்னும் உறவுகளில் ஒவ்வொரு பாட்டு (12). காதலன் என்ற உறவில் 5 பாடல்கள்; காதலி என்ற உறவில் 6 பாடல்கள்.

கண்ணனைப் பற்றிய வழிபாட்டுப் பாடல்கள் அல்ல இவை. இதனை வ.வே.சு. அய்யர், 1919-ல் இந்நூலின் இரண்டாம் பதிப்பு முன்னுரையில் தெளிவுபடுத்தி யிருக்கிறார்.

> "இந்தக் கீர்த்தனங்களைப் பரபக்திக்குப் பேரிலக்கியமாகக் கொள்ள வேண்டியதில்லை. ஆசிரியர் இந்நூலில் கவி என்ற ஹோதாவில்தான் நம்மிடம் வருகிறார் என நினைக்க வேண்டும்."

கண்ணன் பாட்டில் கவனம் செலுத்திய கு.ப.ரா., எஸ். இராமகிருஷ்ணன், சிட்டி, கைலாசபதி, சண்பகம் ராமசாமி, தமிழண்ணல் எனப் பலரும் இப்பாடல்கள் மனிதம் பெய்த வடிவங்கள் என்றே கருத்துரைத் துள்ளனர். எனவே, கண்ணன் பாட்டு பக்தி இலக்கியம் அல்ல. மனித நேயச் சித்திரங்கள்தான் கண்ணன் பாட்டு.

இந்தச் சித்திரங்களில் பலவும் பாரதியாரோடு நெருங்கிப் பழகிய நண்பர்களின் கோட்டோவியங்கள் என்ற கருத்து மிகமிக வலிவுடையது. எடுத்துக்காட்டாக 'கண்ணன் - என் சேவகன்' பாரதியாருக்கு மிக நெருக்கமாக இருந்த குவளைக் கண்ணனே என்று செல்லம்மாள் பாரதியே குறிப்பிட்டிருக்கிறார்.

> ' கட்டுறுதி உள்ள உடல் கண்ணிலே நல்லகுணம்'
>
> ' மக்களுக்கு வாத்தி, வளர்ப்புத்தாய் வைத்தியனாய்
> ஒக்க நயம் காட்டுகிறான்'
>
> ' நண்பனாய் மந்திரியாய், நல்லா சிரியனுமாய்ப்
> பண்பிலே தெய்வமாய், பார்வையிலே சேவகனாய்'

என்ற வருணனைகள் எல்லாம் குவளைக் கண்ணனுக்கு அற்புதமாய்ப் பொருந்துகின்றன.

கண்ணன் - என் தோழன் 'ஆபத்தினில் வந்து பக்கத்திலே நின்று அதனை விலக்கிடுவான்' என்ற குறிப்பில் புதுவை பொன்னு முருகேசம் பிள்ளை போன்றவர் நினைவுக்கு வருகின்றனர். 'கேட்ட பொழுதில் பொருள் கொடுப்பான் - செய்யும் கேலி பொறுத்திடுவான்' என்ற அடையாளம் ஆறுமுகம் செட்டியார், கிருஷ்ணசாமி செட்டியார் ஆகியோரைக் கவனப்படுத்துகிறது. இவர்கள் பொருளுதவியும் செய்தனர். செல்லமாகப் பாரதியார் வைத்த கேலிப் பெயர்களையும் அவர்கள் ஏற்று மகிழ்ந்தனர்.

கண்ணன் - என் தாய் கவிதை ஒரு வகையில் இயற்கையையே புனைகிறதென்றாலும், வாழ்வு தந்து, தோழமை தந்து, கவிதையும் தந்த புதுவை நகரின் உருவகமோ என்று கருதவும் இடம் தருகிறது.

' நல்ல நல்ல நதிகளுண்டு - அவை
நாடெங்கம் ஓடிவிளை யாடிவரும் காண்
மெல்ல மெல்லப் போயவை தாம் - விழும்
விரிகடற் பொம்மையது மிகப் பெரிதாம்
எல்லையதிற் காணுவ தில்லை - அலை
எற்றி நுரை கக்கியொரு பாட்டிசைக்கும்
ஒல் லெனுமப் பாட்டினிலே - அம்மை
ஓம் எனும் பெயரென்றும் ஒலித்திடும் காண்'

இப்பாடலில் வரும் கடலின் காட்சி, குயில் பாட்டில் வரும் புதுவைக் கடலை நினைவூட்டுகிறது.

'.... முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி
வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை'

எனக் குயில் பாட்டுக் கூறுவதை ஒப்பிட்டுப் பார்க்க முடியும்.

ஒன்றுறப் பழகுதற்கே - அறி
வுடைய மெய்த் தோழரும் அவள் கொடுத்தாள்'

என்ற விவரிப்பில் அரவிந்தர், வ.வே.சு. அய்யர் முதலியவர்கள் வந்து போகின்றனர்.

கன்னன் பாட்டில் அடையாளம் தெரிந்த மனிதர்கள் தவிரப் பரிசுத்தமான காதல், குழந்தைப் பாசம், ஆண் பெண் சமத்துவம், குரு - சீட நெருக்கம் எனப் பல உறவு நிலைகளைக் காணலாம்.

' ஒட்டும் இரண்டுளத்தின் தட்டி லறிந்தேன்'

என்று நயம்பட உரைக்கும் காதல் அழகும்,

' உன் கண்ணில் நீர் வழிந்தால் - என் நெஞ்சில்
உதிரம் கொட்டுதடி'

என்று தவிக்கும் பிள்ளைப் பாசமும் 'வட்டங்கள் இட்டுக் குளம் அகலாத மணிப்பெருந் தெப்ப'மாக மனத்தில் வலம் வருகின்றன.

## காட்சிச் சித்திரங்கள்

புதுக் கவிதைக்கு வித்து என்று பல திறனாய்வாளர்களால் கருதப்படும் 'வசன கவிதை' காட்சி, சக்தி, காற்று, கடல் என்ற பிரிவுகளைக் கொண்டது.

ந. பிச்சமூர்த்தியும், வல்லிக்கண்ணன் முதலிய புதுக்கவிதை முன்னோடிகள் தங்கள் முயற்சிகளுக்குப் பாரதியாரின் வசன கவிதைகள் காரணமென்று தெரிவித்துள்ளனர்.

இவற்றின் சொல் முறையும், தொனியும் உரைநடையிலிருந்து மாறுபட்டவை. இன்பம் என்ற பகுதியில் ஓர் எடுத்துக்காட்டு:

' குழந்தை இன்பம், இளமை இனிது
முதுமை நன்று
உயிர் நன்று. சாதல் இனிது'

குதூகலத்தோடு தொடங்கித் திடுக்கீட்டோடு முடியும் வரிகளில் சிறுசிறு சொற்களில் ஒரு புதுமை ஒளி வீசுகிறது.

இணையாதவைகளை இணைத்துக்காட்டி ஒருமைப்பாட்டுக்கு வழிகோலும் சொற்கோலங்கள் உண்டு.

' ஞாயிறு, வீட்டுச்சுவர், ஈ, மலையருவி
குழல், கோமேதகம் - இவ்வனைத்தும் ஒன்றே.
இன்பம், துன்பம், பாட்டு
வண்ணான், குருவி
மின்னல், பருத்தி - இஃதெல்லாம் ஒன்று'

ஒரு தத்துவச் சாயலும், தமிழுக்குப் புதிதான நடைப்பாங்கும், கவித்துவச் செறிவும் ஆங்காங்கே இழையோடுகின்றன. 'ஞாயிறு' பல சுருதிகளை மீட்டுகிறது.

' ஞாயிறு மிகச்சிறந்த தேவன், அவன் கைபட்ட
இடமெல்லாம் உயிருண்டாகும்.
அவனையே மலர் விரும்புகின்றது
இலைகள் தன்னுடைய அழகிலே யோக்மெய்தி
யிருக்கின்றன.'

இலை யோகம் புரிகிறதாம். இந்தப் புது நேர்த்தி வசன கவிதைகள் எங்கும் சுடர் வீசுகிறது.

எளிமையாக வார்க்கப்பட்டிருந்தாலும் சின்னஞ்சிறு வார்த்தைகளுக்குள் சமுத்திரங்கள் அலை பாய்கின்றன.

## உரைநடைச் செல்வம்

' எண்ணி எண்ணித் திட்டம் போட்டு எழுதினானோ?
எண்ணாமல் எங்கிருந்தோ கொட்டினானோ?'

என்று கம்பனை வியப்பார் நாமக்கல் கவிஞர். அமரத்துவம் வாய்ந்த கவிதைகளைத் தந்த பாரதியாரின் உரைநடைச் செல்வத்தை எண்ணும்போது இப்படித்தான் பிரமிப்பை அடைகிறோம்.

ஆயிரம் பக்கங்களுக்குமேல் திரட்டப்பட்ட பாரதியாரின் கட்டுரைகளும், கதைகளும் கிடைக்கின்றன. இவையன்றி, ரா.அ. பத்மநாபன் தேடித் தொகுத்திருக்கும் பாரதி புதையல் பெருந்திரட்டு, பெ. தூரன் அளித்திருக்கும் பாரதி தமிழ், சீனி. விசுவநாதன் தந்திருக்கும் சக்கரவர்த்தினி கட்டுரைகள், இளசை மணியன் தொகுத்திருக்கும் பாரதி தரிசனம் (2 தொகுதிகள்) பத்திரிகைக் கட்டுரைகள் ஆகியவை இன்னொரு ஆயிரம் பக்கங்கள் தேறும். அச்சில் வராத பாரதி தரிசனம் அடுத்த தொகுதிகள் கைப்பிரதியாக உள்ளதாம். இன்னும் தேடுதலில் அகப்படாத இதழ்கள் உண்டு.

பல்லாயிரக்கணக்கான பக்கங்களில் எழுதிக் குவித்த பாரதியாரின் 'எழுதுகோல் தெய்வம்'; அவர் 'எழுத்தும் தெய்வம்'.

இன்னும் ரிக் வேத ரிஷிகளின் கவிதை, பதஞ்சலி யோக சூத்திரம், பகவத் கீதை ஆகியவற்றுக்கு உரை எழுதிய சாதனையும் பாரதியாருக்கு உண்டு.

'வசன நடை கைவந்த வல்லாளர்' என்று பாரதியாரைக் கூறலாம்.

''அருமையான உள்ளக் காட்சிகளை எளிமைகொண்ட நடையிலே எழுதுவது நல்ல கவிதை''

என்று வரைவிலக்கணமும் வகுப்பார்.

''அட பரம மூடர்களா! ஆண் பிள்ளைகள் தவறினால் ஸ்திரீகள் எப்படிப் பதிவிரதையாக இருக்க முடியும்?''

என்று கண்டனக் குரலும் எழுப்புவார்.

''அடடா! இந்தப் பூமியில் மனித உயிருக்கு எத்தனை கஷ்டம், எத்தனை பயம், எத்தனை இடையூறு, எத்தனை கொலை, எத்தனை துரோகம், எத்தனை பொய், எத்தனை கொடுமை, எத்தனை அநியாயம், ஐயோ பாவம்''

என அடுக்கி அடுக்கி உணர்ச்சிகளைத் தூண்டிவிடுவார்.

கதை உலகமோ எனில் மிக விந்தையானது. ஞானரதம் ஒரு பளிங்கு மாளிகை போல் காட்சி தருவது, ஒரு மாயக்கனவில் உபசாந்தி லோகம், கந்தர்வ லோகம், சத்திய லோகம், மண்ணுலகம், தர்ம லோகம் எனப் பல உலகங்களில் சஞ்சரிக்கும் அனுபவங்களைக் 'கந்தர்வ நடை'யில் சொல்கிறது ஞானரதம்.

சின்னச் சங்கரன் கதை நகைச்சுவை ததும்பும் ஒரு தன் வரலாற்றுக் காவியம். எட்டயபுரத்தைக் கவுண்டனூராக்கி, தம்மைச் சின்னச் சங்கரனாக்கி எழுதப்பட்ட இளம் பருவ வாழ்க்கைச் சித்திரம்.

சந்திரிகையின் கதை (முற்றுப்பெறாத நாவல்), நவதந்திரக் கதைகள், வேடிக்கைக் கதைகள் எனக் கதை உலகம் விரிகிறது.

பஞ்ச தந்திரக் கதைகள்போல் எழுதப்பட்ட நவதந்திரக் கதைகளும், பஞ்சகோணக் கோட்டை போன்ற கதைகளும் உருவகக் கதைகள், காந்தாமணி, வேப்பமரம், ஆறில் ஒரு பங்கு ஆகியவை யெல்லாம் அருமையாக எழுதப்பட்ட சிறுகதைகள். சமூக சீர்திருத்தப் படைப்புக்கள்.

பாரதியாரின் வனப்புமிக்க வருணனைக்கு ஓர் எடுத்துக்காட்டு:

> ''சந்திர கலை வீசும் முகம். அதன்மீது சிறியதும் மூன்று விரல் உயரமுடையதுமாய், மலர்களால் செய்யப்பட்ட ஓர் கிரீடம். உயிரென்ற வண்டு வீழ்ந்து, சிறகிழந்து தள்ளாடும் கள்ளூற்றுக்களாகிய இரண்டு கரிய விழிகள். தின்பதற்கல்லாது, தின்னப்படுவதற்கமைந்தன போன்ற பற்கள்.'' (ஞானரதம்)

நகைச்சுவை மின்னலிடும் நடையழகுக்குச் சின்னச் சங்கரன் கதையிலிருந்து ஒரு துணுக்கு:

> ''.... தெருவிலே கண்டவர்களை எல்லாம் மூன்று காசுக்காகப் புகழ்ந்து பாடுவது, பெண்களுடைய மூக்கைப் பார்த்தால் உருளைக்கிழங்கு போலிருக்கிறது. மோவாய்க்கட்டையைப் பார்த்தால் மாதுளம் பழத்தைப் போலிருக்கிறது. கிழவியுடைய மொட்டைத் தலையைப் பார்த்தால் திருப்பாற் கடலைப் போல் இருக்கிறது என்று திரும்பத் திரும்பக் காது புளித்துப் போகிறவரையில் வர்ணிப்பது; யமகம், திரிபு, பசு மூத்ர பந்தம், நாக பந்தம், ரத பந்தம், தீப்பந்தம் முதலிய யாருக்கும் அர்த்தமாகாத நிர்ப்பந்தங்கள் கட்டி அவற்றை மூடர்களிடம் காட்டிச் சமர்த்தனென்று மனோராஜ்யம் செய்துகொள்வது - இவைதான் அந்தக் காலத்திலே கவிராயர்கள் செய்த தொழில்.''

மானிட வாழ்வின் அனைத்துப் பகுதிகளின் மீதும் அறிவு வெளிச்சம் வீசியவை பாரதியாரின் படைப்புகள். அவர் கவிதைகளைமட்டும் படித்து மகிழ்வோர், வளம் கொழிக்கும் அவருடைய உரைநடைச் செல்வத்தை அறிந்தே இழந்தவர்கள் ஆவர்.

அலை வீசும் கடலை மட்டும் பார்த்துப் பிரமித்தால் போதாது. ஆறுகளின் சங்கீதத்தையும், அருவிகளின் முழக்கத்தையும், ஓடைகளின் நகைப்பையும் அனுபவிக்க முன்வர வேண்டும்.



# 4. வாழிய பாரத மணித்திரு நாடு

காசிவாசியாக ஆனதனாலும், சென்னைப் பத்திரிகையாளராக நேர்ந்ததனாலும் பாரதியார் தேசிய உணர்ச்சி பூண்டார் என்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனால், தேச பக்தி எட்டயபுரத்தின் மாணவப் பருவத்திலேயே அவரிடம் கால் கொண்டுவிட்டது என்று தெளிவுபடுத்துகிறார் சிதம்பர ரகுநாதன். (பாரதி - காலமும் கருத்தும்)

பாரதியாரின் தந்தையார் சின்னசாமி அய்யர் முற்போக்காகச் சிந்தித்து அக்காலத்தில் ஒரு பருத்தி அரவைச் சாலையை நிறுவினார். மதுரையில் ஹார்வி மில் தொடங்கிய ஆங்கிலேயர் தங்களுக்கு எதிர்ப்பாக யாரும் தொழில் நடத்தலாகாது என்று கருதி அய்யரின் முயற்சியை அழித்தனர். இதனைப் பாரதியார் பிற்காலத்தில் 'கனவு' என்ற நூலில்,

' ஓங்கி நின்ற பெருஞ்செல்வம் யாவையும்
ஊணர் செய்த சதியில் இழந்தனன்'

என்று குறிப்பிட்டுள்ளார். இதனைச் சுட்டிக்காட்டும் ரகுநாதன் சரியாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

> ''ஆம். தேசிய கவிஞனாகப் பாரதி மறுமலர்ச்சி பெறுவதற்கு முன்பே, இளமையில் அவனது உள்ளத்தில் பதிந்த ஆங்கிலேயர் சதி பற்றிய எண்ணமே அதற்கு வித்தூன்றி விடுகிறது.'' (பாரதி காலமும் கருத்தும், ப.49)

இது நிகழ்ந்தது காசி செல்வதற்கு முன்பே - 1895-ம் ஆண்டில் என்பது அறிஞர் கணிப்பு.

ஆங்கிலேயர்மீது ஏற்பட்ட வெறுப்பு தேசபக்தி நெருப்பாகச் சுவாலை வீச உரிய காலத்தை எடுத்துக்கொண்டது.

1906 கல்கத்தா காங்கிரஸ் செல்லும் முன்பே 1905-ல் வங்கப் பிர்வினையை எதிர்த்துப் புனைந்த 'வங்கமே வாழிய' (பாரதியாரின் முதல் தேசியக் கவிதை) வெளிவந்துவிட்டது. அதன் பின்னர்க் குருமணி நிவேதிதாவைச் சந்தித்தபோது ஒரு முழுமையான தேசியக் கவிஞராகப் பாரதியார் உருவாகிவிட்டார்.

உண்மையில் அவரே தமிழகம் தந்த முதல் தேசிய மகாகவி.

பாரதியாருக்குமுன் தமிழகத்தில் தேசியக் கவிதை உருவாகவில்லையா என்பது ஒரு பொருத்தமான கேள்வி. 1877-ல் இராமசாமி ராஜா என்பார் பிரதாப சந்திரவிலாசம் என்றொரு நாடகம் எழுதினார். அந்நாடகத்தில் சுதேசமித்திரன் என்ற பாத்திரம் தேசபக்தி குறித்துப் பேசுகிறது. இதனைத் தேசிய எழுச்சியாகக் கற்பிப்பதற்கில்லை.

மனோன்மணீயம் நாட்டுணர்வு குறித்துச் சில இடங்களில் பேசுகிறது.

> ' நாட்டபி மானமுள் மூட்டிய சினத்தீ
> அன்றோ வானோர்க்கு என்றுமே உவப்பு'

என்றாற் போல் சீவகன் வீரவுரை நிகழ்த்துகின்றான். ஆயினும் அன்னிய ஆதிக்கத்தை எதிர்த்த குரலாக அதனை அடையாளம் காண்பதற்கில்லை.

சே.ப. நரசிம்மலு நாயுடு எழுதிய ஆரிய தேசியக் கும்மியின் கருப்பொருளை ஆங்கிலேய எதிர்ப்பாகக் கணிக்க முடியாது.

எனவே தமிழகம் தந்த முதல் தேசியக்கவி பாரதியாரே ஆவார்.

பாரதியாரின் தேசியக் கவிதை பல கண்கள் கொண்ட ஊற்றாக வெளிப்பட்டது. நாடு குறித்த பழமையின் பெருமிதம், அதன் எல்லையற்ற வளம், அன்னியச் சுரண்டல், மக்களை ஆட்டிப் படைக்கும் அச்சம், அடிமை மோகம், சுதந்தரப் பெருமை, தேசியத் தலைவர்களின் மாட்சி, தாயின் மணிக்கொடி, புதுயுக மலர்ச்சி, தமிழும் தமிழ்நாடும் எனப் பன்முகங்களிலுமாகப் பொங்கிப் பெருகியது பாரதியாரின் தேசியக் கவிதை.

> ' பாருக்குள்ளே நல்ல நாடு – எங்கள்
> பாரத நாடு
> ஞானத்திலே பர மோனத்திலே – உயர்
> மானத்திலே அன்ன தானத்திலே
> கானத்திலே அமுதாக நிறைந்த
> கவிதையிலே உயர் நாடு'

என்று அதன் பெருமையைக் கூறினார். இதிகாசங்களின் தாயகம் என்று ஞாபகப்படுத்தினார். முன்னை இலங்கை அரக்கரை முடித்த வில்லும், இந்திர சித்தனை இரண்டு துண்டாக்கிய வில்லும் பாரத ராணியின் வில். காண்டிபம் ஏந்தியதும் அவள் தோள்கள், கவச குண்டலம் தந்தது அவள் கரம்.

'ஒன்று பரம்பொருள் நாமதன் மக்கள்
உலகு இன்பக் கேணி என்றே
நன்று பல்வேதம் வரைந்த கை பாரத
நாயகி தன் திருக்கை'

எனப் பாரத மாதா திருவுருவைப் புராண இதிகாசப் பிழிவாக முன்வைத்தார்.

இந்த நாட்டில் மாரத வீரரும், மாமுனிவோரும், நாரத கானமும், நல்லன யாவையும் உண்டு. இதன் இயற்கை வளம் எல்லையற்றது.

'இனிய பொழில்கள் நெடிய வயல்கள்
எண்ணரும் பெரு நாடு
கனியும் கிழங்கும் தானியங்களும்
கணக் கின்றித் தரும் நாடு – நித்தநித்தம்
கணக் கின்றித் தரும் நாடு'

எனத் தலை நிமிர்ந்த செம்மாப்போடு கூறுவார்.

பாஞ்சாலி சபதம் காவியத்தில் பாரத நாட்டு வளம் பாடும் போது உயிரும் உணர்வும் சிலிர்த்துப்போகிறது.

'அன்னங்கள் பொற்கமலத் தடத்தின் ஊர
அளி முரல, கிளி மழலை அரற்ற, கேட்போர்
கன்னங்கள் அமுதூறக் குயில்கள் பாடும்
கா வினத்து நறுமலரின் கமழைத் தென்றல்
பொன்னங்க மணிமடவார் மாடமீது
புலவி செயும் போதினிலே போந்து வீச
வன்னங் கொள் வரைத் தோளார் மகிழ, மாதர்
மையல் விழி தோற்றுவிக்கும் வண்மைநாடு'

என்று காவிய நயம் கொஞ்ச நலம் பாராட்டுவார்.

பசித்துக் கிடந்த ஏழ்மைச் சமுதாயத்தின் முன்னால் 'ஞாலமெல்லாம் பசியின்றிக் காத்தல் வல்ல' நன்செய்யும், புன் செய்யும் வளம் கொழிக்கிறது என்று சுட்டிக்காட்டுவார். இங்கு

வறுமை குவிந்ததற்குக் காரணம் வேறு என்று சொல்வது அவருடைய நோக்கம்.

வ.உ.சியும் வின்ச் துரையும் பேசவதாகக் கற்பித்த பாடலில் வீரம் பொங்கி வழியச் சிதம்பரனார் வினவுவார்:

' பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளைகொண்டு
போகவோ - நாங்கள் - சாகவோ
அழுதுகொண் டிருப்போமோ ஆண் பிள்ளைகள்
அல்லமோ - உயிர் - வெல்லமோ?'

கொள்ளை நடக்கிறது அன்னியனால் என்பதை உணர்த்தியதோடு, அதனால் அழிந்துவிடாது இந்தியா என்றும் நம்பிக்கை ஊட்டினார்:

வற்றாத வளம் இந்நாட்டினுடையது. அமுத கலசம் போலவும், ஆழ்கடல் போலவும் அள்ள அள்ளக் குறையாத செல்வம் உடையது இந்நாடு.

' தேவர் உண்ணும் நன் மருந்து
சேர்ந்த கும்பம் என்னவும்
மேவு வார் கடற்கண் உற்ற
வெள்ள நீரை ஒப்பவும்
பாவ நெஞ்சினோர் நிதம்
பறித்தல் செய்வ ராயினும்
ஓவிலாத செல்வம் இன்னும்
ஓங்கும் அன்னை'

என்று முழங்குவார்.

பாரத நாட்டைத் தாயாக உருவகம் செய்து, அதற்கான காரணங்களையும் சொல்லி, இந்த நாட்டை 'வந்தே மாதரம்' என்று வணங்குவது கடமை என்று உணர்த்தும் முறையிலும் பாடல்கள் தீட்டியுள்ளார். அவற்றுள் மிகச் சிறந்த கவிதை 'வந்தே மாதரம்' என்ற தலைப்பில் அமைந்தது.

இந்த நாடு வெறும் மண்ணும் கல்லும் மரமும் அல்ல. என் தாயும் தந்தையும் பிறந்த பூமி. அவர்கள் தாயும் தந்தையும் வாழ்ந்த பூமி. அவர்கள் 'வெந்ததைத் தின்று விதி வந்தால் சாகிற' வெற்று மாந்தர் இல்லை. சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்த்தவர்கள் என்று அடுக்கடுக்காகச் சொல்லி எளிய மனிதர் நெஞ்சிலும் உணர்ச்சியை மீட்டுகிறார்.

' எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே - அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே - அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே - இதை
வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனோ?'

அன்னையர் பிறந்து வளர்ந்து கன்னியராகி இல்லறம் நடத்தித் தங்க மதலைகள் ஈன்று புறந்தந்து.... இந்த மண்ணிலேயே மடிந்திருக்கிறார்கள். இது மண் அன்று - அவர் உடலின் பூந்துகள்! வாழ்க தாய் நாடு இதனை எப்படி வாழ்த்தாமல் இருக்க முடியும் என்று கருத்துள்ள வினாவை விதைப்பார்.

அன்று 'வந்தே மாதரம்' மக்களைத் தட்டி எழுப்பும் மந்திரமாக இருந்தது. பங்கிம் சந்திரரின் 'ஆனந்த மடம்' நாவலில் வரும் 'வந்தே மாதர' கீதம் தேச பக்தர்களின் உயிர் முழக்கமாக மாறியது. வங்க மூலத்திலிருந்து இரண்டு முறை அப்பாடலை மொழிபெயர்த்தார் பாரதியார்.

'வந்தே மாதரம்' என்று முழங்கியவர்களை அன்னிய அரசு சிறையில் தள்ளியது, நாடு கடத்தியது, தாக்கிக் கொன்றது. அந்தச் சூழலில் எழுந்த பாடல்தான் 'வந்தே மாதரம் என்போம் - எங்கள் மாநிலத் தாயை வணங்குதும் என்போம்'. நீ செய்வதைச் செய்து கொள் என்பது அதன் பொருள்.

பாரத் தாய் உருவகத்தை மேலும் மேலும் வலிமைப்படுத்திக் கொண்டே யிருந்தது பாரதியார் கவிதை.

' பேயவள் காண் எங்கள் அன்னை
பெரும் பித்துடையாள் எங்கள் அன்னை'

' அறுபது கோடி தடக்கைக ளாலும்
அறங்கள் நடத்துவள் தாய் - தனைச்
செறுவது நாடி வருபவரைத் துகள்
செய்து கிடத்துவள் தாய்'

என்று ஆவேசத்தையும், தீவிர உணர்ச்சியையும் தூண்டினார், மக்கள் தான் தேசம் என்ற உணர்வை மையப்படுத்தினார்.

பாரதம் என்ற பெயரை உச்சரித்தாலே போதும், பயம் போகும் வறுமை ஒழியும், துயர் தோற்றோடும்.

' பாரத தேசமென்று பெயர் சொல்லுவார் - மிடிப்
பயம் கொல்லுவார் - துயர்ப் பகை வெல்லுவார்'

இந்த மன உறுதியைக் கட்டிக் காக்கவே எழுத்துக்களை ஆயுதமாக்கினார் பாரதியார்.

இந்திய நாட்டின் பிற மாநிலங்களிலும் தேசியக் கவிகள் தோன்றினர். அருமையான பாடல்கள் இசைத்தனர். (விரிவு - பார்க்க சிற்பியின் கவிதை நேரங்கள், ப.75) அவர்கள் பெருமளவு கவனம் செலுத்தாத தேசிய ஒருமைப்பாட்டைப் 'பாரத தேசம்' பாடலில் முன்னிறுத்திய பாரதியார் எழுதுவார்:

' கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்
சிங்க மராட்டியர் தம் கவிதை கொண்டு
சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்'

இதே பாடலில் பொருளாதாரத் திட்டங்களையும் பாரதியார் பொதிந்துவைத்துள்ள திறம் பிறரிடம் காணற்கரியது.

' பட்டினில் ஆடையும் பஞ்சில் உடையும்
பண்ணி மலைகளென வீதி குவிப்போம்'

' ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள் வைப்போம் கல்விச் சாலைகள் வைப்போம்'

' நடையும் பறப்புமுணர் வண்டிகள் செய்வோம்
ஞாலம் நடுங்க வரும் கப்பல்கள் செய்வோம்'

உடைகள் நெய்வதிலிருந்து படைக்கலன் செய்வதுவரை- கலை வளர்ப்பதிலிருந்து காடு வளர்ப்பது வரை சுதந்தர நாட்டுக்கு ஒரு திட்டக் குழுவாகவே செயல்படுகிறது மகாகவியின் பாடல். சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்பதும், கங்கையுடன் பிறநதி இணைப்பதும் பாரதியாரின் கவிதைப் பார்வைகளாய் விளைந்தன.

' வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளில் பயிர்செய்கு வோம்'

என்பது கனவல்ல - இன்று மெய்ப்படப் போகும் பேருண்மை.

தேசியத் தலைவர்களைப் பாரதியார் மறந்தாரில்லை. சிதம்பரனார், திலகர், தாதாபாய் நவுரோஜி, லஜபதி ராய், மகாத்மா காந்தி முதலிய தலைவர்களை அழியாச் சித்திரங்களாய்க் காட்சிக்கு வைத்தார்.

தொடக்கத்தில் திலகரின் சீடராக அரசியல் தொடங்கிய கவிஞர் அவரை அன்பு மலர்களால் அர்ச்சித்திருக்கிறார் 'வாழ்க திலகன் நாமம்' என்ற கவிதையில்,

'துன்பம் என்னும் கடலைக் கடக்கும்
தோணி அவன் பெயர்
சோர்வென்னும் பேயை ஓட்டும்
சூழ்ச்சி அவன் பெயர்
அன்பெனும் தேன் ஊறித் ததும்பும்
புதுமலர் அவன் பெயர்'

என்று மனம் சிலிர்க்க மொழிகின்றார்.



லோகமான்ய
பாலகங்காதர திலகர்

தென்னாப்பிரிக்கப் போராட்டப் பொழுதில் காந்தியடிகளுக்கு நிதி திரட்டி அனுப்பியவர் பாரதியார். ஆயினும், அரசியலில் திலகரிடமிருந்து காந்தியம் நோக்கிப் பாரதியார் திரும்பக் காலம் பிடித்தது. தம் வாழ்நாளின் இறுதி நெருங்குகையில் சத்தியாக்கிரகப் போரின் ஆற்றலை அடையாளம் கண்டுகொள்கிறார். இந்திய மொழிகளிலேயே தலை சிறந்த காந்தியப் பனுவல் என்று கருதத்தக்க 'வாழ்க நீ எம்மான்' பஞ்சகத்தில் 'மகாத்மா' என மனம் குளிரப் பாடுகிறார்.

'பாரத மாதா நவரத்ன மாலை' என்ற பாடலில் ஒரு தீர்க்க தரிசனத்தையே பாரதியார் முன்வைக்கிறார்.

'காந்தி சொல் கேட்டார் காண்பார்
விடுதலை கணத்தினுள்ளே'

என்பது அந்த வாக்கு. இங்கு இறவாத சொற்களின் உறவாளர் தாம் என்பதைப் பாரதியார் நிலைநாட்டி விடுகிறார்.

அதே தீர்க்க தரிசனம்தான் விடுதலைக்கு நெடுநாட்கள் முன்னதாகவே 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே, ஆனந்த சுதந்தரம்

அடைந்துவிட்டோம் என்று' பாடும் அருள்வாக்கை அவருக்கு வழங்கியது.

இந்திய நாட்டின் வரலாற்று வேர்களிலிருந்து சுதந்திர உணர்வுக்கு ஊட்டம் பெறுகிற பணியையும் பாரதியார் ஆற்றினார். சீக்கிய குருமார்களில் ஒருவரான குரு கோவிந்த சிங் சீடர்களைத் தேர்ந்தெடுத்த கதையை இறுகிய தமிழில் உணர்வு பெருகப் பெருக எடுத்துரைத்தார். அதே காலத்தில் ஔரங்கசீப்பை எதிர்த்த சிவாஜியின் போர்க்குரலை 'சிவாஜி தன் சைன்யங்களுக்குக் கூறியது' என்ற தலைப்பில் முறுக்கேறிய மொழியில் வடித்துத் தந்தார். சிவாஜி வாயில் 'வந்தே மாதரம்' ஒலித்தது.

' பாரத நாடு பழம் பெரு நாடு
நீரதன் புதல்வர் இந்நினைவகற் றாதீர்'
' தாய்த் திருநாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பான் வாழ்வும்ஓர் வாழ்வு கொல்'

என்ற இடி முழக்கம் சிவாஜியின் குரலாய் ஒலித்திடச் செய்தார்.

சோதனைகள் நேரும்போது மனத்தை வைரமாக்கும் கவிதைகளைக் கொட்டினார்.

' பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதியெனும்
பெற்றியை அறிந்தாரேல் - மானம்
துறந்தறம் மறந்தும்பின் உயிர்கொண்டு வாழ்வது
சுக மென்று மதிப்பாரோ?'

சில சமயங்களில் அன்பிற்குரிய தலைவர்கள் வெஞ்சிறைப்பட்டு வேதனைகளில் உழல்வதைக் காணும்போது பாரதியாரின் கவிதை குருதியும் கண்ணீரும் கொட்டியது.

' தண்ணீர் விட்டோ வளர்த்தோம்
சர்வேசா இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம்
கருகத் திருவுளமோ?'

எனத் துயர நரம்புகளை வருடினார்.

' என்று தணியும் எங்கள் சுதந்தர தாகம்
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்'

என்று விம்மினார் - வெடித்தழுதார்.

பிறநாட்டுச் சுதந்தரப் போர்களை அறிவாளிகளுக்கு நினைவூட்டினார். பெல்ஜியம் பட்ட துயரையும், மாஜினியின்

விடுதலைப் பிரகடனத்தையும் முன்வைத்தார். புதிய ருஷ்யாவை அடையாளம் காட்டினார்.

சுதந்தரம் அல்லது விடுதலை என்பது எதைக் குறிக்கும் என்பதைத் திட்டவட்டமாகச் சொன்னார். சாதிய சமத்துவமும், தொழில்புரிவதில் சமத்துவமும் சுதந்தரத்தின் அடித்தளங்கள் என்று விளக்கினார்.

' பறையருக்கும் இங்கு தீயர்
புலையருக்கும் விடுதலை
பரவரோடு குறவருக்கும்
மறவருக்கும் விடுதலை'

சுதந்தரத் திருநாட்டில் 'எல்லாரும் சமம் என்பது உறுதியாச்சு' எனத் தெளிவுபடுத்தினார்.

' விழலுக்கு நீர்பாய்ச்சி மாயமாட்டோம் - வெறும்
வீணருக்கு உழைத்துடலம் ஓயமாட்டோம்'

என்பது பாரதியாரின் விடுதலைப் பிரகடனம்.

பாரதியாரின் தேசியத்தை இரட்டைத் தேசியம் (dual nationalism) என்று குறிப்பது பொருந்தும். பாரதமும், தமிழகமும் என்ற இருநிலைகளையும் ஒருங்கிணைத்த தேசியம் அது. வானமளந்தது அனைத்தும் அளந்த வண்மொழியும், சொன்ன மாத்திரத்தில் காதில் தேன் வந்து பாயும் தமிழ்நாடும் உயிருக்குள் செருகி வைத்த பாசப் பிணைப்புகள். 'மெல்லத் தமிழ் இனிச் சாகும்' என்று பேசியவனை வாய் கிழித்துப் பேதை என்று இகழும் தமிழ்த் தேசியம்.

'தம்பி நான் ஏது செய்வேனடா!
தமிழை விட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும் போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனைவிட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்குச் சம்மதமில்லை. தமிழச்சியைக் காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாய் இருப்பதைக் கண்டால் என் மனம் புண்படுகிறது'

என்று பரலி சு. நெல்லையப்பருக்குக் கடிதம் எழுதிக் கவலை கொள்ளும் உயிர்த் தேசியம் பாரதியாருடையது.

அதனால் இரண்டு தேசியங்களையும் ஒன்றாக்கி வளர்க்கும் உயர்ந்த தேசியப் பார்வையை,

' வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித்திரு நாடு'

என்ற வரிகளில் பதித்துவைத்தார்.

இரண்டு யுகங்களின் மையத்தில் நின்று புதுமைகளை வரவேற்றுப் பழமைகளை வழியனுப்பினார். அதைத்தான் 'போகின்ற பாரதமும் வருகின்ற பாரதமும்' என்று கவிதையாகப் புனைந்தார்.

' ஜாதி நூறு சொல்லுவாய் போ போ போ'

' வேறு வேறு பாஷைகள் கற்பாய்நீ
வீட்டு வார்த்தை கற்கிலாய் போ போ போ'

' நீதி நூறு சொல்லுவாய் கா சொன்று
நீட்டினால் வணங்குவாய் போ போ போ'

இவ்வாறு நீச பாரதத்தை அடித்துத் துரத்தி மகா பாரதத்துக்கு வரவேற்பு மடல் வாசித்தார் பாரதியார்.

' ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா
உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா'

' களை இழந்த நாட்டிலே முன்போலே
களை சிறக்க வந்தனை வா வா வா'

என இருகை நீட்டி வரவேற்றார்.

பாரதியாரின் தேசிய உணர்வு சுதந்தரத் திருநாட்டுக்கு ஒரு புதிய மணிக்கொடியைப் படைத்துத் தந்தது.

மகாகவி உருவாக்கிக் கொடுத்த கொடி அவர் படைத்துக் கொண்டது என்பதை அறிய நம் தேசியக் கொடி குறித்த சில வரலாறுகள் உதவும்.

1905-ல் நிவேதிதா அம்மையார் ஒரு தேசியக் கொடி வேண்டுமென்று கருதினார். சிவப்பு நிறமான கொடியில் நடுவில் இந்திரன் வச்சிராயுதத்தை மஞ்சளில் அமைத்து இருபுறமும் 'வந்தே மாதரம்' என்ற சொல்லைப் பொறித்தார். 1906-ம் ஆண்டு கல்கத்தா காங்கிரசில் இது காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது. பாரதியார் இதனைப் பார்த்திருக்க வேண்டும்.

அதே ஆண்டில் ஆகஸ்ட் 7-ம் நாள் கல்கத்தா பார்சி பேகன் சதுக்கத்தில் ஒரு கொடி பறக்கவிடப்பட்டது. மேலிருந்து கீழ் சிவப்பு, மஞ்சள், பச்சை நிறங்கள் கொண்டதாகவும், சிவப்புப்

பட்டையில் எட்டு வெள்ளைத் தாமரைகள் பொறிக்கப் பட்டதாகவும், மஞ்சள் மையத்தில் வந்தே மாதரம் எழுதப் பட்டதாகவும், பச்சைப் பகுதியில் சூரியன், பிறை நட்சத்திரம் உடையதாகவும் இது அமைக்கப்பட்டிருந்தது.

தேசியக் கொடியின் தாய் என அழைக்கப்பட்ட மேடம் காமா (*1861-1935*) ஜெர்மனியில் ஸ்டுட்கர் நகரில் நடந்த அனைத்துலக சோஷலிஸ்ட் காங்கிரஸ் மாநாட்டில் தாமே ஒரு கொடியை உருவாக்கி எடுத்துச் சென்றார். *1907* ஆகஸ்டில் ஏற்றப்பட்ட இக்கொடியில் முன்னைய கொடி போலவே சிவப்பு, மஞ்சள், பச்சைப் பட்டைகள் அமைந்தன. ஆனால், சிவப்புப் பகுதியில் எட்டு நட்சத்திரங்களும், மஞ்சள் பகுதியில் வந்தே மாதரமும் பச்சைப் பகுதியில் ஒரு மூலையில் சூரியனும், மற்றொரு மூலையில் பிறையும் அமைந்திருந்தன.

*1921*-ல் தான் காந்தியடிகள் வேண்டுகோளை ஏற்று ஓர் ஆந்திர இளைஞர் ஒரு புதிய கொடியை உருவாக்கினார். *1923* நாகபுரி சத்தியாக்கிரகத்தில் நன்கு அறிமுகமாக இக்கொடியில் வெள்ளை மேலேயும், பச்சை நடுவிலும், சிவப்பு கீழேயும் இருந்தனவாம். பச்சை மையத்தில் இராட்டை பொறிக்கப்பட்டிருந்தது *1931*-ல் ஆரஞ்சு, வெள்ளை, பச்சை என வரிசை மாற்றப்பட்டு, வெள்ளை மையத்தில் இராட்டை அமைக்கப்பட்டது.

*1921*-லேயே அமரராகிவிட்ட பாரதியார் இன்றைய தேசியக் கொடியை அறிய வாய்ப்பில்லை. *1908*-ல் எழுதப்பட்ட மாதாவின் துவஜம் என்ற பாடலில் நிவேதிதா தேவி வடிவமைத்துத் தந்த கொடியில் சில மாறுதல்களைச் செய்து புதிதாய்த் தம் கவிதையில் பறக்கவிட்டார்.

கொடியின் நிறம் சிவப்பு, நடுவில் வந்தே மாதர மந்திரமும் இருபுறமும் இந்திரன் வச்சிராயுதமும், பிறைச் சின்னமும் அமைக்கப்பட்ட கொடி பாரதியாருடைய சொந்த தேசியக் கொடி.[1]

' ஓங்கி வளர்ந்ததோர் கம்பம் – அதன்
உச்சியில் வந்தே மாதரம் என்றே
பாங்கின் எழுதித் திகழும் – செய்ய
பட்டொளி வீசிப் பறந்தது பாரீர்

1. ரகுநாதன், தாயின் மணிக்கொடி, பாரதி - சில பார்வைகள், மீனாட்சி புத்தக நிலையம், 1982, எஸ். இராமகிருஷ்ணன், Bharati - Patriot Poet Prophet, NCBH, 1982

இந்திரன் வச்சிரம் ஓர்பால் - அதில்
எங்கள் துருக்கர் இளம்பிறை ஓர்பால்
மந்திரம் நடுவுறத் தோன்றும் - அதன்
மாண்பை வகுத்திட வல்லவன் யானோ? '

வச்சிரமும், பிறையும் இந்து முசுலிம் ஒற்றுமைக்கு அடையாளமாகத் திகழவைத்தார் பாரதியார்.

இந்தக் கொடிப்பாட்டின் மற்றொரு சிறப்பு, தேசியக் கொடியின் கீழ்த் திரண்டு நின்ற அணிவகுப்பு.

' கம்பத்தின் கீழ் நிற்றல் காணீர் - எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்
நம்பற்குரியர் அவ்வீரர் - தங்கள்
நல்லுயிர் ஈந்தும் கொடியினைக் காப்பர்'

கவிஞனுக்குத் தான் எத்தனை நம்பிக்கை வீரர்கள்மீது! திருப்பூர்க் குமரன் பாரதியாருக்குச் சரியான களத்தில், நேரத்தில் இரத்த சாட்சி ஆகிவிட்டானே!

அமெரிக்க உள்நாட்டு யுத்தத்தின் போது, (ஆபிரகாம் லிங்கன் ஒருமைப்பாடு காக்க நடத்திய போர்) சொந்த நாட்டுப் படையினர் தேசியக் கொடியைச் சுட முயன்றனர். ஓடிவந்த கிழவி ஒருத்தி குறுக்கிட்டாள்:

' Shoot if you must this old Greyhead
But spare your country's flag she said'

என்று ஒரு கவிதை கூறும். ('இந்தக் கிழத்தைச் சுடுங்கள் உங்கள் தேசக் கொடியை விடுங்கள்').

அணி வகுத்த வீரர்கள் பல மாநிலத்தவர். செந்தமிழ்நாட்டுப் பொருநர், சேர வீரர், தெலுங்கர், துளுவர், கன்னடர், ஒட்டியர், மராட்டர், ரஜபுத்ரர், பஞ்சாபியர், வங்காளிகள் அனைவரும் ஒன்று திரண்டு நிற்கும் ஒருமைப்பாட்டு ஓவியம் அற்புதம்!

' சேர்ந்ததைக் காப்பது காணீர் - அவர்
சிந்தையின் வீரம் நிரந்தரம் வாழ்க! '

என்று மணிக்கொடி கண்ட மகாகவி வாழ்த்துகிறார். இது கொடிப் பாட்டு அல்ல. இந்திய மக்கள் கோடானு கோடிகள் பாட்டு.

பாரதியார் என்றால் தேசியத் தேரின் அச்சாணி என்று கண்டோம். இல்லை, அந்தத் தேரின் கவிதைச் சாரதியே அவர்

என்று மெய்ப்பிக்கும் மற்றொரு படைப்பையும் அவர் தந்து சென்றிருக்கிறார். அதுதான் 'பாஞ்சாலி சபதம்'.

மகாபாரத இதிகாசத்திலிருந்து ஓர் இழையைமட்டும் எடுத்துக்கொண்டு, ஒரு பொன்னாடையையே நெசவு செய்த நேர்த்தி 'பாஞ்சாலி சபதம்'. பெருங்காவியத்தில் ஒரு பகுதியைக் 'கண்ட காவியம்' என்பர். தமிழிலேயே 'நள வெண்பா'ப் போல எடுத்துக்காட்டுகள் உண்டு. ஆனால், பாரதியார் மகாபாரதத்தில் சூது போர்ச் சருக்கத்தைமட்டும் எடுத்துக்கொண்டு இரண்டு பாகங்கள், ஐந்து சருக்கங்கள் 413 பாடல் அடிகளால் வனையப்பட்ட பொன்னொளிர் மாளிகை பாஞ்சாலி சபதம்.

பாரதத் தாயே பணயம் வைக்கப்பட்ட பாஞ்சாலியாகவும், செயலற்ற சமுதாயம் பாண்டவராகவும், நிதானத் தலைமை பீஷ்ம துரோணராகவும், அன்னிய ஆதிக்கம் துரியோதனாதியராகவும் கச்சிதமாக வார்க்கப்பட்டுள்ளனர். ஒரு மகத்தான குறியீட்டுக் காவியத்தால் மகாகவிகளின் முத்திரையைப் பதிக்கிறார் பாரதியார்.

' அத்தின புர முண்டாம் - இந்த
அவனியிலே அதற்கிணை இலையாம்'

என்று தொடங்கும் போதே பாரத தேசச் சிறப்பு அறிமுகமாகிவிடுகிறது.

' மெய்த்தவர் பல ருண்டாம் - வெறும்
வேடங்கள் பூண்டவர் பலரும் உண்டாம்'

என வருணிக்கும் வரிகளில் போலிகள் தோலுரிக்கப்படுகிறார்கள்.

நாட்டை ஒரு சூதாடு களத்தில் இழந்த கொடுமை பேசப்படுகிற காட்சிகளில் நெருப்புப் பொறி சிதறுகிறது.

' ஆயிரங்க ளான - நீதி
அவை உணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந்தான் - *சீச்சீ*
சிறியர் செய்கை செய்தான்'

என்ற பாடலில் '*சீச்சீ*' என்ற வசைச் சொல்லில் இழிப்பும், பழிப்பும், அங்கதமும், அவமானமும், ஆத்திரமும் வந்து குவிந்துவிடுகின்றன.

பாஞ்சாலியைப் பணயம் வைத்த செய்தி கவிதையில் வரும்போது பதறிப் பதறி உவமைகள் வந்து விழுந்து நொந்து மயங்குகின்றன. வேள்விப் பொருளை நாய்க்கு "இட்டது போல,

பொன்மாளிகையைப் பேய்க்குக் கொடுத்தது போல், செருப்புத் தோலுக்காகக் குழந்தையைக் கொன்றது போல்... கண்ணீரோடு கலங்கி வரும் உவமைகள்.

துகிலுரியத் துச்சாதனன் முற்படும்போது,

'ஆடை குலைவுற்று நிற்கிறாள் - அவள்
ஆ என்றழுது துடிக்கிறாள் - வெறும்
மாடு நிகர்த்த துச்சாதனன் - அவள்
மைக்குழல் பற்றி இழுக்கிறான்'

என்று மெய்நடுங்கும் சொற்களைப் பெய்கிறார் கவிஞர்.

தன்னை மறந்து கண்ணனிடம் அவள் சரணமுற்ற போது ஆடைகள் வளர்ந்தன. இதோ இந்தப் பொய்யர்கள் படப்போகிற துயரம் போல, அதோ அந்தப் புண்ணியவாளர் பெறப் போகும் புகழ் போல வளர்ந்தன. அப்போது 'ஜய ஜய பாரத சக்தி' என்று அனைவரும் பரவசம் கொண்டனர்.

பாரதியாரின் வேறு சில கவிதைகளில் காணப்படுவது போலக் கண்ணன் சுதந்தர எழுச்சியின் குறியீடு ஆகிறான். அப்போது பாஞ்சாலி துரியோதனனையும், துச்சாதனனையும் களத்தில் தன் கணவர் கொல்லும்போது அந்த இரத்தத்தைப் பூசிக் குழல் முடிப்பேன். அதுவரை கூந்தல் முடியேன் என்று சபதம் செய்கிறாள். இது பாரத மாதா அன்னிய ஆதிக்கத்துக்கு எதிராக எடுத்த சபதம்.

சபதம் முடிந்ததும் பூமி அதிர்ந்தது, புயல் எழுந்தது.

தேசியப் போராட்டக் களத்தில் பாரதியார் அறைந்த போர் முரசம் பாஞ்சாலி சபதம்.



தேசியம் பற்றிய விரிவுக்குப் பெ.சு. மணியின் 'பாரதியின் தேசியம்' (பாரதி என்றொரு மானுடன் - பதிப்பு சிற்பி) கட்டுரை பார்க்க, ப. 21

# 5. நானும் ஒரு சித்தன்

குறுகிய வாழ்நாள் என்னும் களத்தில் நின்றவாறே கணம்தோறும் தம்மைப் புதிய புதிய பரிசோதனைகளுக்கு ஆட்படுத்திக் கொண்டவர் பாரதியார்.

> "அவன் ஒருவனே வெல்லற்கரியவன்! ஏனெனில், அவன் ஒருவன்தான் போர்க்களம் முழுதும் எடுத்தணிந்து தயாராகப் புறப்பட்டவன். தத்துவம், வரலாறு, கலை, இலக்கியம், சங்கீதம், விஞ்ஞானம், பன்மொழியறிவு, அரசியல், மக்கள் பற்று, இயக்கத் தலைமை முதலான அத்தனை போர்க் கலங்களும் அவன் அணிந்திருந்தான். அன்பு எனும் மகாசக்தி வாய்ந்த கவசம் வேறு இருந்தது."

என்பது பாரதியாருக்குள் கரைந்து கலந்த ஆர்.கே. கண்ணனின் வரையறுப்பு (புதுநெறி காட்டிய பாரதி, 1965).

துல்லியமான தெளிவு இருந்ததால் குழப்பமோ, உள் முரண்பாடோ அவரிடம் இருந்ததில்லை.

ஒரு தத்துவக் கவிஞராகப் பாரதியாரை ஆராயும்போதும் இந்த உண்மையை உணர முடிகிறது.

ஆழ்ந்த தத்துவ நோக்கு இல்லாத ஒருவருக்கு மகாகவிகளின் வரிசையில் இடம் இல்லை. பாரதியாரை உன்னத இடத்துக்கு இட்டுச் செல்வதே அவருடைய தத்துவப் பார்வைதான்.

சித்தர் நெறி, அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சக்தி வழிபாடு, யோகம் என்னும் தத்துவ நெறிகள் பலவற்றின் சாயல்களையும் பாரதியாரிடம் நாம் காணக்கூடுமாயினும், அவற்றை முழுமையாக ஏற்றுக்கொள்ளாது, தமக்குச் சரியென்று பட்டவற்றை எடுத்துக்கொண்டு, பொருந்தாதது என்று கருதியவற்றை

ஒதுக்கிவிடுவது சுயசிந்தனை கொண்ட கவிஞரின் இயல்பு. முதிர்ச்சி நிலையில் முன்னர் ஏற்றவைகளைக்கூடப் பின்னர் உதிர்த்துவிடுவது அவர் நெறி.

வள்ளற்பெருமான் கூடப் பல தெய்வ வழிபாட்டில் தொடங்கி ஒளி வழிபாட்டை நோக்கிப் பயணித்தபோது பழைய நெறிகளை முற்றிலும் விலக்கிவிடுவதைக் காண்கிறோம்.

இதற்கு விமர்சன அணுகுமுறை என்று பெயர் சூட்டுகிறார் 'இந்தியச் சிந்தனை மரபு' என்ற அரிய நூலின் ஆசிரியர் கலாநிதி நா. சுப்பிரமணியம்.

> "மரபுசார் சிந்தனைகளைப் புரிந்து கொண்டு, சமகால சமுதாயச் சூழலுடன் அவற்றைப் பொருத்தி நோக்கி விமர்சனம் செய்து, தக்கவற்றைமட்டும் பேணிக் கொள்ளும் வகையிலான அணுகுமுறை இது. இந்த அணுகுமுறையின் முக்கிய அம்சம் மரபு என்பதற்காக ஒன்றைப் பேணாமல் பண்பாட்டு நோக்கில் அதனைப் பேணுதல் ஆகும். இந்நோக்கில் இயல்பாகவே விமர்சனப் பண்பு அமைந்துவிடுகிறது."

இந்த விமர்சன அணுகுமுறை காரணமாகவே 'தமிழருக்கு' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில் பின்வருமாறு தெளிவுதர மொழிகிறார்.

> "தமிழா, எழுதிப் படிப்பதெல்லாம் மெய்யுமில்லை. எதிர் நின்று கேட்பதெல்லாம் பொய்யுமில்லை. 'முந்திய சாஸ்திரம் தான் மெய், பிந்திய சாஸ்திரம் பொய்' என்று தீர்மானம் செய்து கொள்ளாதே. காலத்துக்கும் உண்மைக்கும் எதிரிடையாக ஒரு கணக்கு ஏற்பட்டிருக்கிறதா? 'தகப்பன் வெட்டிய கிணறு என்று சொல்லிய மூடர்கள் உப்பு நீரைக் குடிக்கிறார்கள்' என்று பஞ்சதந்திரம் நகைக்கிறது."

இந்தக் கூற்றில் திறனாய்ந்து தெளியும் நோக்குப் புலனாகிறது. சூதாடுதல் பழைய வழக்கம் என்று தருமன் அதற்கு இணங்கும் போது மீண்டும் பாரதியார் பழமை என்பதே மாற்றவொண்ணாத மரபு என்பதைக் கண்டிக்கின்றார்.

> ' முன்பிருந்த தோர் காரணத்தாலே
> மூடரே, பொய்யை மெய் யெனலாமோ?
> முன்பெனச் சொலும் காலமதற்கு
> மூடரே ஓர் வரையறை உண்டோ?'

என்று கேட்ட சிந்தனைக் குரல் பாரதியினுடையது.

பாரதியாரை அவருடைய சக்திப் பாடல்களைக் காரணம் காட்டி ஒரு சாக்தர் என்று நிலைநாட்ட முயல்வோர் உண்டு. பிற சமயக் கடவுளரையும் 'ஒன்று தெய்வம்' என்ற நோக்கோடு இணைத்துப் பார்த்தவர் பாரதியார். 'பூமியிலே கண்டம் ஐந்து, மதங்கள் கோடி.' என்று தொடங்கி,

' யாமறிந்த மதங்கள் பல உளவாம் அன்றே
யாவினுக்கும் உட்புதைந்த கருத்திங்கு ஒன்றே'

என்று கண்டவர் அவர்.

'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்ற உண்மைக்குத் தம்மை ஒப்படைத்துக் கொண்டவர் கவிஞர். அதனால் விநாயகர் நான்மணி மாலையிலும், புதிய ஆத்திசூடி கடவுள் வாழ்த்திலும் இசுலாம், பார்சி, கிறித்தவக் கடவுளரையும் ஒரே பரம்பொருளாகப் பார்க்கும் தரிசினம் அவருக்கு வாய்த்திருந்தது. இளம்பிறை அணிந்த சிவனும், பாற்கடல் இறையும், மகமது நபிக்கு மறையருள் புரிந்த அல்லாவும், ஏசுவின் தந்தையும் பல்வேறு சமயம்சார் கடவுளர். அவர்களை வழிபடும் மக்கள் உணர்ந்திருக்கலாம், உணராதும் இருக்கலாம். எனினும் அவர்கள்,

' பரவிடும் பரம்பொருள் ஒன்றே'

என்று பாரதியார் கூறுவார்.

' பாருக்குள்ளே தெய்வம் ஒன்று'

' ஒன்று பரம்பொருள் நாமதன் மக்கள்'

என ஐயத்துக்கு இடமின்றி உரைத்தவர் அவர்.

இந்தக் கருத்து நிலையிலிருந்து அவருடைய சக்திப் பாடல்களைக் காண்பது பொருந்தும். எல்லாமாகிய பேராற்றல் சக்தியாகத் துலங்குவதாக அவர் பாவித்தார். அதனை அன்னையாக எண்ணுவதில் அவர் ஈடுபாடு கொண்டார்.

' இறைவி இறையவன் இரண்டும் ஒன்றாகித்
தாயாய்த் தந்தையாய்ச் சக்தியாய்ச் சிவனுமாய்
உள்ளொளி யாகி உலகெலாம் திகழும்
பரம்பொருளேயோ, பரம்பொரு ளேயோ'

என விநாயகர் நான்மணி மாலையில் அவர் பேசியதுண்டு. 'ஆணாய்ப் பெண்ணாய் அலியாய் உள்ளது யாவுமாய் விளங்கும் இயற்கைத் தெய்வமே' என்றும் அவர் விளித்து மகிழ்ந்தார்.

இந்தப் பாவனைக்கு மூன்று காரணங்களை மொழியலாம். முதலாவது - சுதந்தரப் போரில் நாட்டை அன்னையெனக் காண நேர்ந்தது, இரண்டாவது - தாய் என்ற உறவின் மீது அவருக்குப் பற்று இயற்கையாய் அமைந்தது, மூன்றாவது - எளிய மக்கள் மாரியாய், காளியாய் வழிபடும் தெய்வங்களோடு தம் நெருக்கத்தைப் புலப்படுத்த விழைந்தது.

எனவே, கண்ணனைப் பல நிலைகளில் குலவும் போதும் அவர் சொல்லுவார்:

' நாவு துணிகு வதில்லை - உண்மை
நாமத்தை வெளிப்பட உரைப்பதற்கே
யாவருந் தெரிந்திடவே - எங்கள்
ஈசனென்றும் கண்ணனென்றும் சொல்லுவ துண்டு
மூவகைப் பேர் புனைந்தே - அவன்
முகமறி யாதவர் சண்டைகள் செய்வார்.'

(கண்ணன் - என் தந்தை)

மேலும் 'கண்ணம்மா - என் குழந்தை' என்ற பாடலில், 'பராசக்தியைக் குழந்தையாகக் கண்டு சொல்லியது' என்ற துணைத் தலைப்பிடுவதும் கவனிக்கத்தக்கது.

சக்திப் பாடல்களிலும் இந்தப் பொதுநோக்கை அவர் கைவிடவில்லை. உலகளந்த நாயகியைப் பரவும் 'நெஞ்சொடு சொல்வது' என்ற பாடலில் அருமையான உணர்வுகளைப் பகிர்ந்த கொண்டு கூறுவார்:

' சக்தியென்று புகழ்ந்திடுவோம் முருகன் என்போம்
சங்கரனென் றுரைத்திடுவோம் கண்ணன் என்போம்'

நமக்குக் குழப்பம் நேரலாகாது என்று 'சக்தி விளக்கம்' என்று ஒரு கவிதை தீட்டியுள்ளார்.

' நாரணன் என்று பழவேதம் - சொல்லும்
நாயகன் சக்தி திருப்பாதம்'

என நாராயணனைச் சக்தியாய்க் காண்பவர், பாடலின் முடிவில் தெளிவுபடுத்துவார்:

' மூர்த்திகள் மூன்று பொருள் ஒன்று - அந்த
மூலப் பொருள் ஒளியின் குன்று
நேர்த்தி திகழும் அந்த ஒளியை - எந்த
நேரமும் போற்று சக்தி என்று'

சக்தி என்ற தெய்வ ஆற்றலாக உயர்ந்த பண்புகளையும், இயற்கை ஆற்றலையும் இணைப்பார்.

' வாழ்வு பெருக்கும் மதியே சக்தி
மாநிலம் காக்கும் வலியே சக்தி'

' முன்பு நிற்கின்ற தொழிலே சக்தி
முத்தி நிலையின் முடிவே சக்தி'

' பாம்பை அடிக்கும் படையே சக்தி
பாட்டினில் வந்த களியே சக்தி'

இத்துடன் நில்லாது 'வேகம், கவர்ச்சி (speed, gravitation) முதலிய பல்வினை மேவிடும் சக்தி' என்றும் பேசுவார். இதன் விரிவாக்கமாக 'மகா சக்தி வாழ்த்து' என்ற கவிதை அமைந்திருக்கிறது.

' விண்டுரைக்க அறிய அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை
அண்டகோடிகள் வானில் அமைத்தனை
அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை'

இயற்கையின் எல்லையற்ற இயக்கத்தைச் சக்தியாகவும், காளியாகவும் கண்டதால் 'யாதுமாகி நின்றாய் காளி' என வியந்தார்.

' பாயும் ஆயிரம் சக்திகள் ஆகியே
பாரிலுள்ள தொழில்கள் இயற்றுவை'

என்று அறிவியலாக்கி மகிழ்வார்.

சக்திப் பாடல்களின் சிகரம் 'ஊழிக்கூத்து'. 'அன்னை அன்னை! ஆடும் கூத்தை நாடச் செய்தாய் என்னை' என்று பரவசம் கொண்டு அலறும் கவிஞர் உலகங்களைப் படைத்த மூல சக்தி எப்படித் தொழிற்பட்டிருக்கும் எனக் கவிதானுபவத்தில் திளைக்கிறார். ஒரு மகப்பேறு தாயைப் புரட்டி எடுக்குமே, அப்படிப்பட்ட அனுபவம்!

' வெடி படு மண்டத் திடிபல தாளம் போட - வெறும்
வெளியில் இரத்தக் களியொடு பூதம் பாட - பாட்டின்
அடிபடும் பொருளுன் அடிபடும் ஒலியிற்கூட - களித்
தாடும் காளி, சாமுண்டி, கங்காளி
அன்னை, அன்னை
ஆடும் கூத்தை நாடச் செய்தாய் என்னை'

இந்தப் பேராற்றலின் பயங்கர நடனம் ஓய்கிறது. அங்கே நிர்மூலமான உலகு புத்தொளியுடன் புதிதாய்ப் பிறக்கிறது. அமைதியும் ஆனந்தமும் ஆகிறாள் சக்தி.

' காலத்தொடு நிர் மூலம்படு மூவுலகம் - அங்கே
கடவுள் மோனத் தொளியே தனியாய் இலகும் - சிவன்
கோலம் கண்டுன் கனல்செய் சினமும் விலகும் - கையைக்
கொஞ்சித் தொடுவாய் ஆனந்தக் கூத்திடுவாய்'

எனச் சக்தியின் அமைதி ஓவியம் வரைவார் பாரதியார்.

விடுதலைப் போராட்டம் என்ற பிரளயத்தைப் 'பாஞ்சாலி சபத'த்தில் 'ஜெய ஜெய பாரத சக்தி' என்றும், சோவியத் புரட்சியை 'மாகாளி பராசக்தி ருசிய நாட்டினில் கடைக் கண் வைத்தாள்' என்றும் கூறியதன் நுட்பம் இங்கே புலனாகக் காணலாம்.

ஆகவே 'சக்தி' என்ற ஒரு கோலம், ஒரு நாமம், ஒரு வேடம் பூணுகிறது பரம்பொருள். 'ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி அலையும் அறிவிலிகாள்' என்று அழைத்து வேடம் கோடி, நாமம் கோடி ஓர் உண்மைக்கு உண்டு என்று புலப்படுத்துவார்.

' போந்த நிலைகள் பலவும் பராசக்தி
பூணும் நிலையாமே - உப
சாந்த நிலைவே தாந்த நிலை என்று
சான்றவர் கண்டனரே'

என நமக்குப் பாடம் கற்பிக்கவும் செய்வார்.

நமக்குத் தெளிவுபடுத்துவதற்காகவே 'தெளிவு' என்றொரு கவிதையும் படைத்துள்ளார்.

' எல்லா மாகிக் கலந்து நிறைந்தபின்
ஏழைமை உண்டோடா - மனமே'

என்று வினவுவார். 'மனமே' என்ற கவிதையில்,

' தவறா துணர்விர் புவியீர் மாலும்
சிவனும் வானோர் எவரும் ஒன்றே
ஒன்றே பலவாய் நின்றோர் சக்தி
என்றும் திகழும் குன்றா ஒளியே'

என்று கண்ணனில் தொடங்கி சக்தியில் முடிப்பார்.

எனவே, இறையாற்றலின் ஒரு வடிவாகச் சக்தி அல்லது காளியைப் பாரதியார் பாடினாரே தவிர, சாக்தம் அவர் தத்துவ நெறி ஆகாது. தாந்திரிகம் குறித்து அறிந்தோர் அவரைச் சாக்தர் எனக் கூற இசையமாட்டார்கள். 'சக்திதாசன்', 'காளிதாசன்.' என்ற புனை பெயர்களும் அவருடைய பக்தி நெறியின் கோலங்களேயாம்.

'சாக்தம்' என்ற கட்டுரையில் முன்பு சிறந்து விளங்கிய சக்தி உபாசனை இப்போது மது, மாமிச ரகசிய பூசை ஆகிவிட்டது என்றும், சாக்தன் என்றால் ரகசியமாகக் குடிப்பவன் என்று பொருளாகிவிட்டது என்றும் பாரதியார் குறிப்பிடுகிறார். எனவே, சாக்தன் என்று அவரைக் குறிப்பிடுவது இகழ்வதாகும்.

சித்தர் தத்துவங்களிலும், யோக நெறிகளிலும் பாரதியாருக்கு ஈடுபாடு இருந்தது. சித்தர்களோடு அவருக்கு நெருக்கம் இருந்ததைப் 'பாரதி அறுபத்தாறு' நூலில் அவரே தெரிவித்திருக்கிறார்.

' எனக்கு முன்னே சித்தர் பலர் இருந்தாரப்பா
யானு மொரு சித்தன் வந்தேன் இந்த நாட்டில்'

என்று பெருமிதமாகப் பாரதியார் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தக் கோணத்தில் ஆராய்ந்த அறிஞர் அ.ச.ஞா., சித்தர்களோடு அவருக்கு இருந்த தொடர்புகளைக் கூறி, 'பாரதிச்சித்தன்' என்ற பெயரையும் சூட்டுகிறார்.

' சின்னசாமி பாரதியைச் சித்தசாமி பாரதியாக
ஆக்கியவர் குள்ளச்சாமி ஆகிய சித்தரே[1]'

என்றும் குறிப்பிடுகிறார்.

சித்தர்கள் என்ற சொல்லின் பொருளைப் பலர் பலவாறு குறித்துள்ளனர். அஷ்டமா சித்திகள் வல்லவர் சித்தர் என்றும், சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர் என்றும், தமிழகம் கண்ட சிந்தனைக் கலகக்காரர்கள் என்றும், உலகாயதர் என்றும் பல கருத்துக்கள் கூறப்படுகின்றன. சித்தத்தைத் தம் வசப்படுத்தியவர் என்றும், சித்து - அறிவு என்று பொருள்படுதலால் அறிவர் (முக்காலமும் அறிந்தோர்) என்றும் கூறவார் உண்டு.[2]

யோகப் பயிற்சியால் பல பேராற்றல்கள் வல்லவராக இருந்த இவர்கள் மெய்ம்மை காண முந்தியவர்கள் என்பர். மிகச் சிறந்த ஒரு விளக்கத்தை 'இந்தியச் சிந்தனை மரபு' நூலாசிரியர் நா. சுப்பிரமணியம் கூறுகின்றார் (ப. 124).

"…. உண்மையில் அவர்கள் சுயசிந்தனைக்கு முதன்மை கொடுத்தவர்கள் - சித்தம் ஒப்புக்கொள்ளும் உண்மையை மட்டுமே தரிசித்தவர்கள்."

என்பது அவர் தரும் வரைவிலக்கணம். இந்த இலக்கணம் நூற்றுக்கு நூறு பாரதியாருக்குப் பொருந்துகிறது.

---

1. அ.ச.ஞா, - பாரதிச்சித்தன், பாரதி என்றொரு மானுடன் (பதிப்பாசிரியர் சிற்பி)
2. சோ.ந. கந்தசாமி, - இந்தியத் தத்துவக் களஞ்சியம் III, - மணிவாசகர் வெளியீடு

'கனவு' என்ற தம் சுயசரிதையில் பாரதியாரின் முக்கியமான ஒரு வாக்குமூலத்தைக் காணலாம்.

'.... .... .... தன்னுடை
அறிவினுககுப் புலப்படல் இன்றியே
தேயமீது எவரோ சொலும் சொல்லினைச்
செம்மையென்று மனத்திடைக் கொள்வதாம்
தீய பக்தி இயற்கையும் வாய்ந்திலேன்'

தம் பகுத்தறிவுப் பக்குவத்தைப் பாரதியார் இவ்வாறு குறிப்பிடுகின்றார். இதனால் கலாநிதி நா. சுப்பிரமணியம் கூறும் சித்தர் குறித்த பண்பு பாரதியாருக்கு முற்றிலும் பொருந்துகிறது.

முன்னர்க் குறித்த விமர்சன அணுகுமுறை என்பதுவும் இங்கே சித்தர் இயல்பாகப் பொருந்துவதைக் காணலாம். அந்த வகையில் பாரதியாரும் ஒரு சித்தரே ஆவார்.

எதிர்பாராவிதமாகச் சித்தர்களோடு பாரதியாருக்குத் தொடர்பு உண்டாகிறது. புதுவையில் குள்ளச்சாமி, கோவிந்தசாமி, யாழ்ப்பாணத்துச் சாமி ஆகியோரோடு பழகும் வாய்ப்பு ஏற்படுகிறது. கோவிந்தசாமி மறைந்த பாரதியாரின் தந்தையையும், தாயையும் தன் வடிவில் காட்டும் சித்தை நிகழ்த்துகின்றார். யாழ்ப்பாணத்துச் சாமி பாரதியாருக்கு ஞானத் தோணியாகிறார். எனினும், பாரதியாரை முற்றிலும் கவர்ந்து ஈர்த்துக்கொண்டவர் குள்ளச்சாமி.

குள்ளச்சாமி பூமி விநாயகன் எனும்படி பருத்த தோற்றம் கொண்டவர். கந்தை உடுத்துக் கொண்டு தெருவில் நாய்களோடு சுற்றித் திரிந்தவர். ஒருநாள் அவரை இறுகப் பிடித்துக்கொண்டு பாரதியார் உபதேசம் புரியும்படி கேட்கிறார். பக்கத்தில் இடிந்து கிடந்த சுவரைக் காட்டி, மேலே ஒளிரும் சூரியனைக் காட்டி, கிணற்றில் விழும் அதன் பிம்பம் காட்டிப் 'புரிகிறதா?' என்று குள்ளச்சாமி கேட்டார். 'புரிந்தது' என்றார் பாரதியார். அந்த அனுபவத்தை 'வேதாந்த மரத்தில் ஒரு வேரைக் கண்டேன்' என்று பாரதியார் குறிப்பிடுகின்றார். அறிந்த பொருளை நமக்குச் சொல்லுகிறார் பாரதியார்.

'வாசியை நீ கும்பகத்தால் வலியக்கட்டி
மண்போலே சுவர் போலே வாழ்தல் வேண்டும்
தேசுடைய பரிதி உருக் கிணற்றி னுள்ளே
தெரிவது போல் உனக்குள்ளே சிவனைக் காண்பாய்'

என்பது குள்ளச்சாமி காட்டிய சைகைப் பொருள்.

பிராணாயாமத்தில் புறக்காற்றை உள்ளே இழுப்பது பூரகம். அக்காற்றை உள்ளே நிறுத்துதல் கும்பகம். பின்னர் வெளியே அனுப்புவது இரேசகம். வாசி என்னும் காற்றை யோக நெறிப்படி கும்பகம் செய்தால் உடல் சுவர் போல் திண்மையுறும், அவ்வகைப் பயிற்சியால் வானச்சுடர் போன்ற இறைவன் உனக்குள் உறைவான் என்பது குள்ளச்சாமி தந்த உபதேசம்.

இன்னொரு நாள் பழங்குப்பைகளை மூட்டைகளைச் சுமந்து வந்த குள்ளச்சாமியை, 'இப்படிச் செய்யலாமா?' என்று கேட்ட 'நான் புறத்தே சுமக்கிறேன். குப்பைகளை நீ அகத்தே சுமக்கிறாய்' என்று சொன்னார் குள்ளச்சாமி. எல்லா வகையிலும் குள்ளச்சாமிக்குத் தம்மைச் சீடராக்கிக்கொண்டார் பாரதியார்.

''இவர் கலியுக ஜடபரதர், மகாஞானி, சர்வ ஜீவ தயாபரன், ராஜயோகத்தால் மூச்சைக் கட்டி ஆளுகிற மகான்.''

இந்தக் குள்ளச்சாமியும் பாரதியார் காணும்படி சில அற்புதங்களைச் செய்ததாகத் தெரிகிறது. 'சும்மா' என்ற பாரதியார் கதையால் இதனை அறியலாம்.

> ''..... நானும் வேணு முதலியும் அவரை உற்றுப் பார்த்தோம். குள்ளச்சாமி நெடிய சாமி ஆகிவிட்டார்.
>
> நாலே முக்கால் அடிபோல் தோன்றிய குள்ளச்சாமி ஏழே முக்கால் அடி உயரம் வளர்ந்துவிட்டார்.
>
> ஒரு கண்ணைப் பார்த்தால் சூரியனைப் போல் இருந்தது. மற்றொரு கண்ணைப் பார்த்தால் சந்திரனைப் போல் இருந்தது. முகத்தின் வலப்புறம் பார்த்தால் சிவன் போல் இருந்தது. இடப்புறம் பார்த்தால் பார்வதியைப் போலவே இருந்தது. குனிந்தால் பிள்ளையார் போல் இருந்தது. நிமிர்ந்து பார்க்கும் போது விஷ்ணுவின் முகத்தைப் போலே இருந்தது.''

பாரதியாரை முழுவதும் வசமாக்கியிருந்த குள்ளச்சாமியைக் குறித்து வ.உ.சி. எழுதியுள்ளார். சென்னையில் தம் வீட்டுக்கு வந்த குள்ளச்சாமியும், பாரதியாரும் லேகியம் சாப்பிட்டு மயங்கியதைக் கண்டு வருந்தினார் வ.உ.சி.

> ''சாமியார் சரீர கனத்திலும், லேகியம் தின்றதிலும் தவிர, மற்றப் பேச்சு முதலியவற்றில் மக்காகவே இருந்தார். அறிவில் மேதாவியாகிய நம் பாரதியாருக்கு இம் மக்கிடத்தில் எப்படிப் பற்றுண்டாயிற்றென்று அதிசயித்தேன்.'' (வ.உ.சி. கண்ட

பாரதி - வ.உ.சியும் பாரதியும் - தொகுப்பு ஆ.இரா. வெங்கடாசலபதி, 1994, ப. 37)

வ.உ.சியின் கணிப்பு இவ்வாறிருந்த போதிலும் சித்தரிடம் பேரன்பு பூண்டவராகவே பாரதியார் விளங்கியிருக்கிறார்.

யோக சித்திகள்மூலம் வல்லமைகள் பெறும் ஆசையும், மரணமற்ற வாழ்வில் ஆர்வமும் பாரதியாருக்குச் சித்தர் உறவை வலுப்படுத்தின போலும்! 'யோக சித்தி' என்ற கவிதையில் காளிதேவியிடம் அவர் கேட்ட வரங்கள் அவர் உள்ளக் கிடக்கையைப் புலப்படுத்துகின்றன. உடல் வலிவும், பொலிவும் பெறவும், கவலையற்ற வாழ்வு பெறவும், நிதி நிறையவும், பாடல் கோடி புனையவும் வரம் கேட்கிறார். தொடர்ந்து ஒரு சித்தனைப் போல் செயல்பட விரும்புகிறார்:

' கல்லை வயிர மணி ஆக்கல் - செம்பைக்
கட்டித் தங்கமெனச் செய்தல் - வெறும்
புல்லை நெல்லெனப் புரிதல் - பன்றிப்
போத்தைச் சிங்க ஏறாக்கல் - மண்ணை
வெல்லத் தினிப்பு வரச் செய்தல்'

ஆகிய சக்திகள் பெற்று நாட்டை வளப்படுத்த வேண்டும் என்ற ஆசையைப் புலப்படுத்துகிறார். 'வையத் தலைமை'யும் தர வேண்டுமாம். 'வையத் தலைமை கொள்' எனப் புதிய ஆத்திசூடியில் சொல்லிய ஆணை தம் மூலமே விளைவாக வேண்டும் என்று கருதினார் போலும்.

யோக சித்தியின் மூலம் சாதனை நிகழ்த்தும் வேட்கையின் ஒரு கூறு, நரைத்துத் திரைத்துக் கூற்றுக்கு இரையாகும்,

' வேடிக்கை மனிதரைப் போலே - நானும்
வீழ்வன் என்று நினைத்தாயோ'

என்ற வினாவில் பொதிந்து கிடக்கிறது. அதுதான் அமரத்துவம், அல்லது மரணத்தை வெல்லும ஆற்றல்.

' விசையுறு பந்தினைப் போல் - உள்ளம்
வேண்டிய படி செலும் உடல் கேட்டேன்
நசையறு மனம் கேட்டேன் - நித்தம்
நவமெனச் சுடர்தரும் உயிர் கேட்டேன்' (கேட்பன)

இந்த ஆதங்கத்தில் தான் 'மகா சக்திக்கு விண்ணப்பம்' என்ற கவிதையில்,

' யோகத் திருத்தி விடு - அல்லால் என்றன்
ஊனைச் சிதைத்து விடு'

என்று மன்றாடினார்.

'ஆத்ம ஜயம்' என்ற கவிதை ஒரு படி மேலே செல்கிறது. நிகரற்ற வெற்றிகளை நோக்கிக் கையை உயர்த்துகிறது.

' கண்ணில் தெரியும் பொருளினைக் - கைகள்
கவர்ந்திட மாட்டாவோ? - அட
மண்ணில் தெரியுது வானம் - அதுநம்
வசப்படல் ஆகாதோ?'

ஊனை மறந்து வானை வசப்படுத்தத் துடித்த கவிமனம் சித்தர் சிந்தனைகளிலும், யோக நெறிகளிலும் ஈடுபட்டது எனலாம். ஆயினும் தம் இலக்கு யோகமா, தவமா என்ற ஊசலாட்டமும் நம் கவிஞருக்கு இருந்தது. 'அழகுத் தெய்வம்' இதை விளக்கும் அருமையான கவிதை. ஒரு சிற்பம் போல் செதுக்கப்பட்டுள்ள இக்கவிதை மனத்தை மயிலிறகால் வருடும் சுகமான அனுபவம்.

' மங்கியதொர் நிலவினிலே
கனவிலிது கண்டேன்
வயது பதினாறிருக்கும்
இளவயது மங்கை'

என்று தொடங்குகிறது கவிதை. அவள் 'தூங்காதே, எழுந்து என்னைப் பார்' என்கிறாள். எழுந்து பார்த்தால் அழகு தேவதை! அவளிடம் சில வினாக்கள்...

' யோகம் தான் சிறந்தது வோ
தவம் பெரிதோ என் றேன்
யோகமே தவம், தவமே யோகம்
என உரைத்தாள்
ஏகமோ பொருள் அன்றி
இரண்டாமோ என்றேன்
இரண்டுமாம் ஒன்றுமாம்
யாவுமாம் என்றாள்'

தத்துவத் தேடலில் இந்தச் சித்தன் ஈடுபட ஈடுபட ஓர் உண்மை தெளிவாகிறது. அது பண்டை வேதத்தின் மாண்பு குறித்த பாரதியாரின் ஈர்ப்பு.

''மரணமில்லாத இந்த இந்து நாகரிகமாகிய கற்பக விருட்சத்துக்கு ஆதியிலே விதை ஊன்றியவர்கள் வேத ரிஷிகள்...

ரிஷிகள் உள்ளத்தைத் தெளிவு செய்துகொண்டோர். ஆதலால் அடிவரை எளிதாகப் பாய்ந்து அங்கிருந்து மந்திரம் கொண்டு வந்தனர்.''

என 'வேத ரிஷிகளின் கவிதை' நூலிலே எழுதினார்.

உண்மையான வேதம் சம்ஹிதைகள் அல்லது மந்திரங்கள் தான் என்றும், அவை தனியான சம்ஸ்கிருத பாஷையில் மிகப் பழைய நடையில் உள்ளன என்றும், அவற்றுக்குப் பின் வந்த சம்ஸ்கிருதத்திலிருந்து (உபநிடத மொழியிலிருந்து) வேத மொழி முற்றிலும் வேறு என்றும் பகவத் கீதை முன்னுரையில் பாரதியார் குறிப்பிட்டுள்ளார்.

அதனால் மூத்த வேதமும், அதன் பண்பாடும் தனித்தன்மை உடையன என்று கருதினார். அந்தப் பழம் பெரும் வேத மரபு உபநிடதக் காலத்திலிருந்தே உருமாறத் தொடங்கிவிட்டது என வல்லுநர்களும் தெரிவித்துள்ளனர். அதனால் தான் கண்ணன் பாட்டில் பொத்தாம் பொதுவில் வேதம் என்ற பெயரால் வழங்கும் பல செய்திகளை மறுத்துப் பாரதியார் எழுதியுள்ளார்.

' வேதங்கள் கோத்து வைத்தான் - அந்த
வேதங்கள் மனிதர் தம் மொழியில் இல்லை
வேதங்கள் என்று புவியோர் - சொல்லும்
வெறுங்கதைத் திரளில் அவ் வேதமில்லை
வேதங்கள் என்ற வற்றுள்ளே - அவன்
வேதங்கள் சிற்சில கலந்ததுண்டு'

என்று அவர் வேதங்களின் தூய்மை பற்றிப் பேச நேர்ந்ததற்குப் 'பண்டை வேதம்' குறித்த அவர் சிந்தனைகளே காரணம்.

உயர்நெறி வகுப்பன எல்லாம் வேதம் என்று அவர் கருதினார். 'குழலினிது யாழினிது' என்ற திருக்குறளை மேற்கோள் காட்டும் போது வேதம் என்று அவர் பாராட்டியது உண்டு.

வேதங்களுக்கு விளக்கம் கூறவந்த உபநிடத காலத்தையொட்டி வியாசர் வரைந்த பிரம்மசூத்திரத்துக்கு எழுந்த பாஷ்யங்கள் அல்லது விளக்கவுரைகளைச் சங்கரர், இராமாநுஜர், மத்வர் ஆகியோர் வரைந்தனர். அவற்றுள் சங்கர தத்துவமான அத்வைதம் பிரம்மம் ஒன்றே உண்மை, உலகம் ஒரு பிரமை, மாயை என்று பேசிற்று. அதே சமயம் உயிரும் பிரம்மமும் ஒன்று என்றும் கூறிற்று 'தத்துவமசி' - அது நீயாகிறாய் அதாவது இறைவனே ஜீவாத்மா என்ற கருத்தில் பாரதியார் ஈடுபட்டார்.

' சாமிநீ சாமிநீ கடவுள் நீயே
தத்வ மசி தத்வமசி நீயே அஃதாம்'

என்று திடமாகச் சொல்லும் அவர் கருத்தை வைத்து அவரை அத்வைதி என்று சொல்லுகிற ஆய்வாளர்களும் உண்டு.

' முன்னோர்கள் எவ்வுயிரும் தெய்வம் என்றார்
முடிவாக அவ்வுரையை நான் மேற்கொண்டேன்'

என்று பாரதி அறுபத்தாறில் அவரே இதனை ஒப்புக் கொண்டுள்ளார். ஆனால், விமர்சன அணுகுமுறை அவர் இயல்பு. ஆதலால் இரண்டு அடிப்படைக் கேள்விகள் அவரிடம் பிறந்தன. அவற்றை எண்ணிப் பார்ப்போம்.

'சாமி நீ' என்ற கோட்பாடு வேதத்திலும் உண்டு எனப் பாரதியார் பாராட்டுகிறார்.

''கவனி! அண்ட பகிரண்டங்கள் எல்லாவற்றையும் உள்ளே இருந்து ஆட்டுவிக்கும் பரஞ்சுடரே நம்மைச் சூழும் அனந்த கோடி ஜீவராசிகளாக நின்று சலிக்கிறது. இதுதான் வேதத்தின் கடைசியான கருத்து. 'தன்னிடத்தில் உலகத்தையும், உலகத்தினிடம் தன்னையும் எவன் காண்கிறானோ அவனே கண்ணுடையவன்' என்பது முன்னோர் கொள்கை.''

பாரதியார் எடுத்துரைத்துள்ள இந்தத் தத்துவம் வேதத்திலும் ஏற்கப்பட்டுள்ளது.

' எல்லா உயிர்களையும் ஆத்மாவிலும்
ஆத்மாவை எல்லா உயிர்களிலும்
தரிசிக்கும் சமத்துவ நோக்கு அமையவேண்டும்'

என்று ஈசாவாஸ்ய உபநிடதம் அப்படியே சொல்லியிருக்கிறது. எனவே இக்கருத்தை - அத்வைத தத்துவத்தின் ஒரு பகுதியை உவகையுடன் ஏற்கிறார் பாரதியார்.

' காக்கை குருவி எங்கள் ஜாதி – நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்
நோக்கும் திசையெலாம் நாமன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம்'

என்று ஆன்ம ஒருமைப்பாட்டில் குதூகலித்தார். 'நான்' என்ற கவிதை முழுமையாக இக்கோட்பாட்டைக் கொண்டாடியது.

' வானில் பறக்கின்ற புள்ளெலாம் நான்
மண்ணில் திரியும் விலங்கெலாம் நான்
கான்நிழல் வளரும் மரமெலாம் நான்
காற்றும் புனலும் கடலுமே நான்'

ஏன் அண்டங்கள் யாவையும் ஆக்கி, அவை பிழையிலாமல் சுழற்றுவோனும் நானே என்று பெருமிதம் கொண்டார்.

சமகால வாழ்வின் வேதங்கள், பிளவுகள் அத்தனைக்கும் இது தீர்வாக உணர்ந்தார். விட்மன் என்ற அமெரிக்கக் கவியைக் குறித்து ரிச்சர்டு ஏ.எம். பக் குறிப்பது போல, 'a poet of Cosmic consciousness' என்று பாரதியாரையும் குறிப்பிட வேண்டும் என்பார் எஸ். இராமகிருஷ்ணன். (Bharati - Patriot, Poet, Prophet)

அத்வைத தத்துவத்தில் அவருக்கு எழுந்த முதல் கேள்வி பரமாத்மா - ஜீவாத்மா ஒன்று என்பது சரி. உலகம் மாயை அல்லது பிரமை என்பது சரியா? தெள்ளத் தெளிவாகச் சரியல்ல என்ற விமர்சன முடிவுக்கு வந்தார் பாரதியார்.

"சுத்த அறிவே சிவம். வாஸ்தவம் தான். ஆனால் இந்த உலகம் என்ன? இதுவும் சிவமே... தெய்வம் உண்டென்பதை எப்படி அறிந்தோம்? உலகமிருப்பதாலே அறிந்தோம்... ஸ்தூலத்தை அறிந்தாலொழியச் சூட்சுமத்தை நன்கு தெரிந்துகொள்ள முடியாது. இகலோக ஞானத்தை, இகழ்ச்சியாகப் பேசும் ஆத்ம சாஸ்திரம் பொய். உண்மையான ஆத்ம சாஸ்திரம் இகலோக ஞானத்தை வளர்க்கும்.[3]"

மண்ணுலக வாழ்க்கையைப் பொய், மாயை என்று சொல்வதை வாழ்வை உயிராக நேசித்த பாரதியார் ஒப்புக் கொள்ளவில்லை.

இதை அற்புதமாக விளக்கும் கவிதை 'பொய்யோ, மெய்யோ'

' நிற்பதுவே நடப்பதுவே பறப்பதுவே
நீங்க ளெல்லாம்
சொற்பனம் தானோ? வெறும் தோற்ற
மயக்கங்களோ?
கற்பதுவே, கேட்பதுவே கருதுவதே
நீங்க ளெல்லாம்
அற்ப மாயைகளோ? உம்முள் ஆழ்ந்த
பொருளில்லையோ?'

3. மேற்கோள். வெ. கிருஷ்ணமூர்த்தி. பாரதியின் தத்துவ தரிசனம். 2000. ப.17

என்றும் வெடிக்கும் வினாக்களை அடுக்கிவைக்கிறது கவிதை. முடிவில், 'காண்பதுவே உறுதி கண்டோம் - காண்பதல்லால் உறுதி இல்லை, காண்பது சத்தியமாம் - இந்தக் காட்சி நித்தியமாம்' என்று சத்தியம் செய்கிறது கவிதை. அத்வைதத்தின் ஒரு பக்கக் கோபுரம் சரிந்து விழுகிறது. சங்கர வேதாந்த மூலைக்கல் கலைந்து விழுகிறது.

இக்கவிதைக்குப் பாரதியார் எழுதியுள்ள முன்னுரை ஆணித்தரமானது.

> "..... நமக்குத் தந்தையும் தாயும வைத்துவிட்டுப் போன வீடும் வயலும் பொய்யா? தங்கச் சிலை போல் நிற்கிறாள் மனைவி. நமது மகிழ்ச்சியின் போதெல்லாம் உடல் பூரித்தாள். நமது குழந்தைகளை வளர்த்தாள். அவள் பொய்யா? குழந்தைகளும் பொய்தானா? பெற்றவரிடம் கேட்கிறேன். குழந்தைகள் பொய்யா? நமது வீட்டில் வைத்துக் கும்பிடும் குல தெய்வம் பொய்யா?"

அத்வைதம் குறித்துப் பாரதியார் இவ்வினாக்களை எழுப்பி மாயை என்ற முகமூடியைப் பறித்துக் கிழித்தெறிந்தார்.

இரண்டாவதாக அவருக்கு எழுந்த ஐயம் கவிதையிலேயே கேள்வியாக வருகிறது. ஜீவனும், பிரம்மமும் ஒன்று என்றால் உயிருக்கு மரணம் ஏது?

' அத்வைத நிலை கண்டால் மரணம் உண்டோ?'

'இல்லை. இருக்க முடியாது' என்பதுதானே பதிலாக இருக்க முடியும். ஆனால், பாரதியார் மனம் வெதும்பிச் சொல்கிறார்,

' முன்னோர்கள் உரைத்த பல சித்த ரெல்லாம்
முடிந்திட்டார் மடிந்திட்டார் மண்ணாய் விட்டார்'

ஏன்? அத்வைதம் சொன்ன சங்கரன் மாண்டான். அதற்கடுத்த இராமாநுசனும் போனான். புத்தன், ஏசு, இராமன் எல்லாரும் மடிந்து போய்விட்டார். ஆனால்,

' பார் மீது நான் சாகா திருப்பேன் கண்டீர் '

என்று திடமாகச் சொல்கிறார் பாரதியார். ஏனெனில், அதுவே அவர் கவிதைகளில் காணும் மரணமிலாப் பெருவாழ்வின் தத்துவம் ஆகிறது.

தூய பண்டை வேதத்தில் உலகம் நித்தியம் என்ற கருத்தே இருந்தது என்பர்.

> ''உலகம் உண்மையல்ல என்ற குறிப்பு வேதங்களில் ஓர் இடத்திலாவது வெளிப்படையாகக் காணவில்லை''

என்று 'இந்தியத் தத்துவ ஞானம்' நூலாசிரியர் கி. லட்சுமணன் உறுதியாய்க் கூறுகின்றார் (ப.29).

> ''யதார்த்த உலகைப் பூரணமாக விட்டுச் செல்லும் தைரியம் வேதரிஷிகளுக்கு இல்லை''

என்று ராகுல் சாங்கிருத்தியாயன் எடுத்துரைக்கின்றார்[4].

இந்த வேத மரபு பாரதியாருக்கு மிகவும் ஏற்புடையதாக இருந்தது.

அடுத்தபடியாக வேத மரபு துறவற நெறியன்று, இல்லற வாழ்வைப் போற்றுவது என்ற உண்மையும் பாரதியாரைக் கவர்ந்திருந்தது.

> ''வேத காலத்தில் இந்தத் துறவு வழி இந்துக்களுக்குள்ளே கிடையாது. வேத காலத்தில் சந்யாசம் நமக்குள்ளே இருந்திருப்பதாகச் சுவாமி விவேகானந்தர் சொல்லியிருக்கிறார். வசிஷ்டர், வாமதேவர் முதலிய அத்தனை பேரும் மணம் புரிந்துகொண்டு மனைவி மக்களுடனேயே இன்புற்று வாழ்ந்தனர். புலன்களை அடக்கி வாழும் பொருட்டாக, அக்காலத்து ரிஷிகள் பிரம்மசாரிகளாக இருந்து நெடுங்காலம் பலவகைக் கொடிய தவங்கள் செய்தது உண்டு. ஆனால் குறிப்பிட்ட காலம்வரை தவங்கள் செய்து முடித்துப் பின்பு இல்வாழ்க்கையுட் புகுதலே மகரிஷிகளுக்குள் வழக்கமாக நடைபெற்று வந்தது'' (பகவத்கீதை முன்னுரை)

இவ்வாறு வேத காலம் இல்லறத்தின் மாட்சிமைமிக்க காலம் என்று நிறுவி, விவேகானந்தர் அதிகமாக உபநிடதம் அறிந்தவர் தான் என்று நாசூக்காக மறுக்கிறார் பாரதியார்.

வாழ்வு மறுப்பை ஏற்காத வேத மரபைப் போற்றி அந்த வாழ்வின் மகத்துவத்தில் பரவசம் கொண்டார்.

> ' வியனுல கனைத்தும் அமுதென நுகரும்
> வேத வாழ்வினைக் கைப் பிடித்தோம்'

என்று அவர் எழுதியது அதனால்தான். ஆண் - பெண் சமத்துவம் பேசும் புதுமைப்பெண் 'வேதம் பொன்னுருக் கன்னிகை' ஆகி வந்ததாகப் பேசினார்.

---

4. கலாநிதி நா. சுப்பிரமணியம், இந்தியச் சிந்தனை மரபு, ப.5-ல் மேற்கோள்

' புதுமைப் பெண்ணின் சொற்களும் செய்கைகளும்
பொய்மை கொண்ட கலிக்குப் புதிதன்றிச்
சது மறைப்படி மாந்தர் இருந்த நாள்
தன்னிலே பொதுவான வழக்கமாம்'

என்று பெண்மையின் சுதந்தரப் பொற்காலமாக வேத காலத்தைப் புகழ்ந்தார்.

- உயிர் - பரமாத்மா ஒன்று என்ற கோட்பாடு அமரத்துவத்துக்குப் பாதை ஆனது.
- தெய்வம் நீ என்று அனைத்துயிர்த் தோழமை கற்றுத் தந்தது - வேதம் - அத்வைத தத்துவத்தால்.
- இவ்வுலக வாழ்க்கை சத்தியம் என்று உணர்த்தியது வேதம் - மாயைக் கோட்பாட்டை மறுத்து.
- துறவு அல்ல, இல்லறமே வாழ்வியல் என்று வேத ரிஷிகள் உணர்த்தினர்.

இந்த அடித்தளங்களால் இவ்வுலக வாழ்விலேயே அமரத்துவம் பெறலாம் - மரணத்தை வெல்லலாம் என்ற சிந்தனை பாரதியாருக்கு உண்டாயிற்று.

' செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திடலாம் என எண்ணி இருப்பார்
பித்த மனிதர் அவர் சொலும் சாத்திரம்
பேயுரை யாம் என்று ஊதேடா சங்கம்
இத்தரை மீதினிலே இந்த நாளினிலே
இப்பொழு தேமுக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையில் களிப்பவர்
தூயவராம் என்றிங்கு ஊதேடா சங்கம்'

இந்த நம்பிக்கையை நோக்கி - மண்ணகத்தில் வானகத்தைக் கண்டு, மரணத்தைத் தூ என்று தள்ளி அமரராகும் நம்பிக்கையை நோக்கிப் பயணம் செய்வதுதான் பாரதிச் சித்தனின் தத்துவ யாத்திரை.

அரவிந்தரும் 'சாவித்ரி' காப்பியத்தில் இந்த எல்லையை மனிதன் அடைதல் கூடும் என் நம்பிக்கையை முன் வைத்தார்.

' There shall come as a high crown
of all, the end of Death ' - Savitri, p.701

அதனால் அரவிந்த யோகியின் தாக்கமும் பாரதியாருக்கு அமரத்துவக் கோட்பாட்டைத் தந்திருக்கலாம் என்பர்.

ஆனால் இச்சான்றோர் நடமாடிய புதுவை மண்ணுக்கு அருகில் வடலூரில் 19-ம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளற்பெருமான் அன்றே கூறிச் சென்றார்:

'வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்
வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர்'

எனவே, பாரதியாருக்கும் அரவிந்தருக்கும் வள்ளலார் சிந்தனை வளமூட்டி இருக்கவும் கூடும்.

Thoughts என்ற குறிப்புகளில் பாரதியார் எழுதி இருக்கிறார்.

'I am God, I am God, I am God
I am immortal. The hours may pass,
the days may roll, the seasons change,
and the years die away, but I change not,
I know myself immortal, because I am God[5]'



5. Bharati, Agni and other poems and Translations & Essays and other prose fragments, 1980, Bharati Prachuralayam.

# 6. ... என்றொரு மானுடன்

பாரதியார் வாழ்ந்த காலத்தில் அவரை அறிந்தவர்கள் பலர் எழுத்தாளர்களும் கூட. ஆனாலும் அவரைக் குறித்து, அவர் நடை உடை பாவனைகளைக் குறித்து, படைப்புகள் உருவான சூழல் குறித்துப் பெரிய அளவில் பதிவுகள் இல்லாமல் போனது வருத்தத்துக்குரியது.

வ.ரா., யதுகிரி அம்மாள், நாகசாமி ஆகியோரின் சில குறிப்புகளும், செல்லம்மாள் பாரதி, தங்கம்மாள் பாரதி எழுதிய மிகக் குறைந்த செய்திகளும் மட்டுமே கிடைக்கின்றன. வ.உ.சி., மண்டயம் சீனிவாசாச்சாரி ஆகியோரின் கட்டுரைகளும், நாவலர் பாரதியாரின் முன்னுரையும், பாரதியாரின் தம்பி சி. விசுவநாதையரின் ஒன்றிரண்டு கட்டுரைகளும் ஓரளவு பாரதியாரை அறிமுகம் செய்துள்ளன. பாவேந்தர் நினைவுகள் பயனுள்ளவை.

ஆனால், இந்தக் குறிப்புகளிலேயே ஏராளமான முரண்பாடுகள் காணப்படுகின்றன.

பாரதியார் என்ற மனிதரை முழுமையாகக் காட்ட இச்செய்திகள் போதுமானவையாக இல்லை.

வ.ரா.வின் 'மகாகவி பாரதியார்' உணர்ச்சிவசப்பட்ட ஒரு வரலாறு. அதனால் மிகையான கூற்றுக்களும் உள்ளன. ஆனாலும் பாரதியாரை நேரில் பார்ப்பது போல் சித்திரம் தீட்ட அவரால் முடிந்தது. பாரதியாரின் தோற்றம் எப்படி இருக்கும்? நாலைந்து புகைப்படங்களே உள்ளன. உண்மையான படப்பிடிப்பை வ.ரா. எழுத்தில் பார்க்கலாம்.

> "பாரதியார் சுந்தர ரூபன். மாநிறம். ஐந்தரை அடிக்கும் கொஞ்சம் அதிகமான உயரம். அவருடைய மூக்கு மிகவும்

அழகான மூக்கு. முகத்துக்கு அளந்து அமைக்கப்பட்டதைப் போலிருக்கும்... பாரதியாரின் மூக்கு கடைசல் பிடித்தது போலிருக்கும். நீண்ட நாசி. அந்த நீளத்தில் அவலட்சணம் துளிக்கூட இருக்காது.

பாரதியாரின் கண்கள் செவ்வரி படர்ந்த செந்தாமரைக் கண்கள். இமைகளின் நடுவே, அக்கினிப் பந்துகள் ஜ்வலிப்பது போலப் பிரகாசத்துடன் விளங்கும். அந்தக் கண்களை எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் தெவிட்டாது.

பாரதியாருக்கு மீசை உண்டு. அது பார்க்க ரொம்ப நேர்த்தியாக இருக்கும். கண்ணைக் குத்தும் 'கெய்சர்' மீசை அல்ல. கத்தரிக்கோல் பட்ட தருக்கு மீசையல்ல, தானாக வளர்ந்து பக்குவப்பட்டு அழகும் அட்டகாசமும் செய்யும் மீசை.''



வ. ரா.

பாரதியார் ஒரு மகாகவி. வாழ்வு வேறு வாக்கு வேறு என்பது அவரிடம் இருந்ததில்லை. சீர்திருத்தம் அவரிடமிருந்தே தொடங்கியது. கனகலிங்கம் என்ற தாழ்த்தப்பட்ட சிறுவனுக்குக் காயத்ரி மந்திரம் உபதேசித்துப் பூணூல் போட்டுவிட்டார். அந்தக் காட்சியை நேரில் கண்டவர் வ.ரா.

''எல்லோரும் போனபின், பாரதியார் தாம் போட்டுக் கொண்டிருந்த பூணூலை எடுத்துவிட்டார். 'என்ன ஓய்!' என்று என்னைப் பார்த்துச் சிரித்தார்.... 'நாடறிந்த பார்ப்பானுக்குப் பூணூல் எதற்கு? உமக்கும் எனக்கும் வேண்டாம். புதுப் பார்ப்பான் கனகலிங்கத்துக்குப் பூணூல் தேவை. எப்பொழுது நான் அவனுக்குப் பிரம்மோபதேசம் செய்தேனோ அப்பொழுது எனக்குப் பூணூல் இருக்க வேண்டும். அது முடிந்துவிட்டது. இனிமேல் எனக்கு என்னத்துக்குப் பூணூல்?''

இவ்வாறு பிறருக்குச் சொல்வதைத் தாமே ஏற்று நடக்கும் சீர்திருத்தவாதியாகப் பாரதியார் திகழ்ந்தார். பாரதிதாசன் தமக்கு ஒரு

குருநாதராக இவரை வரித்துக் கொண்டதற்குக் காரணமும் இதுதான். 'தராசு' என்ற பத்திரிகைக் குறிப்பில் பாரதிதாசனை 'எழுக நீ புலவன்' என்று பாரதியார் வாழ்த்திய செய்தியை அவரே பதிவு செய்திருக்கிறார். 'எங்கெங்குக் காணினும் சக்தியடா' என்ற பாடலைப் பாடக் கேட்டு இப்படி ஒரு அருமையான ஆசியை நல்கினார் பாரதியார். அப்போது பாரதிதாசனுக்கு அவர் கொடுத்த அறிவுரை எழுதும் ஒவ்வொரு படைப்பாளிக்கும் தேவையான ஒன்று.


பாரதிதாசன்

''நெசவிலே நாட்டு நெசவு மேல். விலைக்கு நெய்வதைக் காட்டிலும் புகழுக்கு நெய்வதே மேல். பணம் நல்லது. ஆனால் பணத்தைக் காட்டிலும் தொழிலருமை மேல். காசிப் பட்டுப் போலப் பட்டு நெய்ய வேண்டும். அல்லது உறுதியான, உழவனுக்கு வேண்டிய கச்சை வேஷ்டி போலே நெய்ய வேண்டும். 'மல்' நெசவு கூடாது. மஸ்லின் நீடித்து நிற்காது. பாட்டிலே வலிமை, தெளிவு, மேன்மை, ஆழம் இத்தனையும் இருக்க வேண்டும். இதற்கு மேலே நல்ல வர்ணம் சேர்ந்தால் குற்றம் இல்லை. சேராமலிருந்தால் விசேஷம்'' (தராசு)

இந்த அறிவுரையும், பாரதியார் வாழ் நெறியும் பாரதிதாசனை முழுவதுமாய் ஆட்கொண்டன. பாரதியாரின் நம்பிக்கை வீண் போகவில்லை. 'ஒரு தீபத்தில் கொளுத்திய' தீப்பந்தமாகச் சுடர் வீசினார் பாரதிதாசன்.

பாரதியார் தமக்குக் கவிதையில் காட்டிய புதுநெறியை ஏற்று, அவரைப் 'புதுநெறி காட்டிய புலவன்' என்றே புகழ்ந்திருக்கிறார்.

' பாடலிற் பழமுறை பழநடை என்பதோர்
காடு முழுதும் கண்டபின் கடைசியாய்ச்
சுப்பிர மணிய பாரதி தோன்றியென்
பாட்டுக்குப் புதுமுறை புதுநடை காட்டினார்'

என்பது பாரதிதாசனின் வாக்குமூலம்.

கனக சுப்பு ரத்தினம் தம்மைப் 'பாரதிதாசன்' என்று அழைத்துக் கொண்டதைப் பின்னர் அவர் சார்ந்த திராவிட இயக்க நண்பர்கள் விரும்பவில்லை. அவரிடமே அவர்கள் மறுப்புத் தெரிவித்தது உண்டு. சிலரிடம் கோபமாக, 'ஆமாண்டா. நான் பாரதிக்கு அடிமை தான்டா' என்று அவர் சொன்னது உண்டு.

ஒரு சமயம் பரிதிமாற் கலைஞரின் பேரர் வி.ஜி. சீனிவாசன் இதே கேள்வியைக் கேட்டார். அதற்குப் பாரதிதாசன் சொன்னார்:

> ''இது குறும்புத்தனமான வினா. அய்யருக்கு நீங்கள் அடிமையா என்று கேட்பது போலத்தான். நான் என்றென்றும் உளமாரப் போற்றி வழிபடுகிற தெய்வம் இந்த அய்யர். அன்பும் பண்பும் தமிழுணர்வும் சேர்ந்த பொன்னுருவம் அவர். பாரதியாருக்கு நான் தாசனாக இருப்பதில் உங்களுக்கென்ன ஆட்சேபணை? இந்த வினாவினை யார் தொடுத்தாலும் எனக்குக் கோபம் வரும்[1]''

பாரதிதாசனைப் போலப் பாரதியாரைக் கவிதையில் சித்திரித்தவர் யாரும் இல்லை. இருபதுக்கும் மேற்பட்ட கவிதைகளாலும், பல அரிய கட்டுரைகளாலும் பாரதியார் நினைவுகளை நமக்குத் தந்தவர் பாரதிதாசன்.

> ' நீடு துயில் நீக்கப் பாடி வந்த நிலா
> காடு கமழும் கற்பூரச் சொற்கோ'

என்ற வைர வரிகளை யார்தான் மறக்க முடியும்? தமக்குப் பேரன் பிறந்த போது பாரதி என்று பெயர் வைத்தார். தம் இறுதி நாட்களில் பாரதியாரைக் குறித்துத் திரைப்படம் எடுக்கவும் ஆசைப்பட்டவர் பாரதிதாசன்.

பாரதியாரிடம் கவிதை பிறக்கும் அனுபவம் குறித்து வ.ரா. அழகாக எழுதி இருக்கிறார்.

> ''மரத்தை வெறித்துப் பார்ப்பார். குளத்தை உற்றுப் பார்ப்பார். ஆகாயத்தை முட்டுகிறாற்போல் மார்பை வெளியே தள்ளி, தலையை எவ்வளவு தூரம் உயர்த்த முடியுமோ, அவ்வளவு தூரம் நிமிர்த்தி உயர்த்திப் பார்ப்பார். ஸஸ்ஸ - ஸஸ்ஸ - ஸஸ்ஸ - என்று மூச்சுவிடாமல் உரக்கக் கத்துவார். வலது காலால் தாளம் போடுவார். இடது காலால் பூமியை உதைப்பார்....

1. சு.சு. இளங்கோ, பாரதிதாசன் பார்வையில் பாரதி, அன்னம் 1982, ப.39

குழந்தையைப் பெற்றெடுக்கும் பிரசவ வேதனைதான். உற்சாகமும் சோர்வும் ஒன்றையொன்று பின்னிக் கொண்டு வெளிவருவதைப் பார்க்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். மனித உலகத்தோடு பாரதியாருக்கு அப்பொழுது உறவே கிடையாது என்று சொல்லிவிடலாம். புதுப்பாட்டு வருகிற வேகத்தில் அது அவருடைய கூட்டையே முறித்துவிடுமோ என்று தோன்றும்''

இந்த அனுபவம் ஒவ்வொரு கவிதையும் பாரதியாரின் ஊனையும், உயிரையும் உரித்துக்கொண்டு பிறந்திருக்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டு.

மண்டயம் சீனிவாசாச்சாரியாரின் புதல்வி யதுகிரி 'பாரதி நினைவு'களில் கூறும் செய்தியும் முக்கியமானது. ஒரு சமயம் பதினைந்து நாள் மௌன விரதம் காத்தாராம் பாரதியார்.

> ''அன்று அவர் பதினைந்து நாள் மௌன விரதம் ஆரம்பித்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பின்னர் மாடியிலிருந்து எங்களை அழைத்தார்...
>
> .... நான் அவரை உற்றுப் பார்த்தேன். வெறும் எலும்புக்கூடு! சிவப்பான கண்கள்! துர்ப்பலமான உடம்பு! பார்க்கச் சகிக்கவில்லை.
>
> .... என் மனத்தில் இருப்பதை அறிந்துகொண்டவர் போல 'நான் புதிய வழியில் யோக சாதனம் செய்கிறேன். அதனால் உடம்பு இளைத்திருக்கிறது' என்று அறிவித்தார்.
>
> பாஞ்சாலி சபதம் துகிலுரியும் சருக்கத்தை அன்று முடித்திருந்தார்.''

தீவிரமான எழுத்துக்காக அவர் மௌன விரதம், யோகப் பயிற்சி, வேறு உற்சாமூட்டும் பழக்கங்கள் ஆகியவற்றையும் மேற்கொண்டிருக்கிறார். ஒரு சமயம் நாற்பது நாள் விரதம் இருந்து கவிதைகள் செய்தார். அதுதான் 'பாரதி அறுபத்தாறு' என்ற பெயரில் இப்போது உலவுகிறது என்றும் யதுகிரி குறிப்பிட்டிருக்கிறார்கள். தம்மை உருக்கி உருக்கிக் கவிதைகளைச் சிற்பமாக்கினார் பாரதியார் என்பதை உணர்ந்துகொள்கிறோம்.

மூட நம்பிக்கைகளைப் பாரதியார் கடுமையாக எதிர்த்தார். ஒரு சமயம் கார்த்திகை விளக்கு ஏற்ற வேண்டிய விழாக் காலத்தில் எண்ணெய் இல்லாமல் சிரமப்படுகிறார் செல்லம்மாள். 'மெழுகுவர்த்தியை ஏற்று செல்லம்மா' என்கிறார் பாரதியார்.

உடனே செல்லம்மாள், 'எல்லாரும் எண்ணெய் விட்டு அகல் ஏற்றினால் நாம் மெழுகுவர்த்தி ஏற்றுவது! எல்லாம் கோணல்! மீன் கொழுப்பு, தீட்டு! லட்சுமி வருவாளா?' என்று பதைப்புறுகிறார். வேலைக்காரி எண்ணெய் வாங்கி வருவதையும் தடுத்த பாரதியார், 'எலெக்ட்ரிக் விளக்குக்கே லட்சுமி வருவாள்' என்கிறார்.

எப்படி இருக்கும் செல்லம்மாவுக்கு? புலம்புகிறார், சண்டை பிடிக்கிறார். பாரதியார் குழந்தைகளை அழைத்து விளக்கம் சொல்லத் தொடங்கினார்:

> ''முன்பு தெருவில் விளக்குகள் சிரமமாக இருக்கவில்லை. இந்த மழைக் காலங்களில் இருட்டு அதிகம். எல்லார் வீடுகளிலும் வரிசையாக விளக்கு ஏற்றினால் முக்கால்வாசி ஊரே வெளிச்சமாகி மேகம், இருட்டு இரண்டும் சேர்த்துச் செய்யும் கும்மிருட்டை நீக்கும். இதற்கு முன்னோர்கள் உபாயம் செய்தார்கள். இப்போது அடிக்கொரு மின்சார விளக்குகள் இருக்கும் போது இந்த மின்மினி விளக்கு எதற்கு?''

இப்படி அறிவு சார்ந்த விளக்கங்கள் கூறுவார். திருவிழாக்களுக்கு உண்மையான காரணங்களை எடுத்துரைப்பார்.

தமிழில் மட்டுமல்ல ஆங்கிலத்திலும் ஆச்சரியப்படத்தக்க புலமை பாரதியாருக்கு இருந்தது. தம் சொந்தக் கவிதைகள் சிலவற்றையும், ஆண்டாள், நம்மாழ்வார் கவிதைகளையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்.

'பொலிக பொலிக' என்ற நம்மாழ்வார் பாசுரத்தில் 'கலியும் கெடும் கண்டு கொண்மின்' என்ற கூற்றைத் தம் மொழிபெயர்ப்பில் 'The Iron age shall change' என்று அற்புதமாகத் தந்திருக்கிறார். இந்தப் பாசுரத்துக்கு 'Hymn of the Golden Age' என்று தலைப்பிட்டிருக்கிறார். இந்தப் பாசுரமே 'கிருத யுகம்' என்ற பாரதியாரின் புதிய கோட்பாட்டுக்கு வழி வகுத்திருக்கிறது எனலாம்.

' வீழ்க கலியின் கொடுமை எலாம்
கிருத யுகம் தான் மேவுகவே'

என்று பாரதியாரை முழக்கமிட வைத்தது நம்மாழ்வார் பாசுரமே.

சாட்டையின் சொடுக்கு வீச்சுப் போல் ஆங்கிலத்தைக் கையாள வல்லவர் பாரதியார். நம் நாட்டு மொழிகளை 'Vernacular' என்ற சொல்லால் இழித்துச் சொல்வது ஆங்கில மரபு. பேராசிரியர் கெட்டே (Gedde) என்பவர் இந்திய மொழிகளை வேல்ஸ்

மாநிலத்தின் காலிக் மொழியோடு ஒப்பிட்டதைக் கண்டு சினந்து New India இதழில் பாரதியார் கடுமையாக எழுதினார். அத்துடன் Vernacular என்ற சொல்லை வைத்தே தாக்கினார்.

"The English-educated minority in this country can be pardoned for being frightfully ignorant of the higher phases of our national literatures; but they will do well to drop that annoying attitude of patronage and condescension when writing and talking about our languages. The Tamil language, for instance, has a living philosophical and poetical literature that is far grander, to my mind than that of the 'vernacular' of England."

பாரதியாரின் ஆங்கில எழுத்துக்களைத் தொகுத்து மறுபதிப்பு வெளியிடுவது அவசியம்.

கதைகளிலும் கட்டுரைகளிலும் மட்டுமல்லாது வாழ்விலும் - வறுமை எற்றிய வாழ்விலும் - நகைச்சுவை கமழ வாழ்ந்தவர் பாரதியார். கதா காலட்சேபம் நிகழ்த்திக்கொண்டிருந்த ஒரு புராணச் சொற்பொழிவாளர் தம் முடிப்புரையின் போது, 'ஜானகி காந்த ஸ்மரணே கோவிந்தா' என்று சொல்வதும், அனைவரும் 'கோவிந்தா கோவிந்தா' என்று கூவுவதும் அவரை யோசிக்க வைத்தன. ஒருநாள் கோவிந்தன் என்ற ஒருவனைக் கூப்பிட்டு அவர் ஒரு யோசனை சொன்னார்.

வழக்கம் போல அனைவரும் 'கோவிந்தா, கோவிந்தா' என்று முழங்கியதும், உண்மையான கோவிந்தன் ஓடிப்போய்க் கூட்டத்தில் நின்று, 'நான் ஒரு பாவமும் அறியேன், என்னை ஏன் கூப்பிட்டீர்கள்?' என்று கேட்டான். கூட்டம் கொல்லென்று நகைத்தது.

பாரதியார் என்று நினைத்த உடனே எத்தனை எத்தனையோ நினைவுகளும், கனவுகளும் வந்துகொண்டே யிருக்கின்றன. ஒன்றைச் சொல்லி நிறைவு செய்வோம்.

பாரதியாரின் 'கண்ணன் பாட்டு'க்கு முன்னுரை எழுதிய தீரர் வ.வே.சு. அய்யர், அவர் கடற்கரையில் அமர்ந்து பாடும் அழகை வருணித்திருக்கிறார்.

''கடற்கரையில் சாந்தி மயமான சாயங்கால வேளையில், உலகனைத்தையும் மோக வயப்படுத்தி நீலக் கடலையும் பாற் கடலாக்கும் நிலவொளியில் புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களைக் கற்பனா கர்வத்தோடும், சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியன் தன்னுடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட

ஒவ்வொருவரும் இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்.''

நமக்கு இந்த அரும் பேறு வாய்க்கவில்லை. ஆயினும், விரிந்த வானில், வெளியில், அலை கடலின் ஆனந்தப் பேரொலியில், நம் நெஞ்சில் அந்தக் கேளாத கானம் முடிவில்லாமல் ஒலித்துக் கொண்டே யிருக்கிறது.



பாரதியார் மணிமண்டபம், எட்டயபுரம்



சான்றோர்களைப் பற்றி எழுதிய அறிஞர்கள்

**1**

திருஞான சம்பந்தர் *(மரபின் மைந்தன் முத்தையா)*
திருநாவுக்கரசர் *(பேராசிரியர் இராம.இருசுப்பிள்ளை)*
சுந்தரர் *(புலவர்மணியன்)*

**2**

மாணிக்கவாசகர் *(முனைவர் தெ.ஞானசுந்தரம்)*
காரைக்கால் அம்மையார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
சேக்கிழார் *(முனைவர் செல்வக்கணபதி)*

**3**

ஆண்டாள் *(முனைவர் நிர்மலா மோகன்)*
குலசேகர ஆழ்வார் *(முனைவர் கா.அரங்கசாமி)*
திருமங்கையாழ்வார் *(முனைவர் அமுதன்)*

**4**

பெரியாழ்வார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
நம்மாழ்வார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*
வேதாந்ததேசிகர் *(முனைவர் பிரேமா நந்தகுமார்)*

**5**

ஸ்ரீமத்வர் *(டாக்டர் சுதா சேஷையன்)*
ஸ்ரீராமானுசர் *(முனைவர் ம.பெ. சீனிவாசன்)*
வள்ளலார் *(முனைவர் ம.ரா.போ.குருசாமி)*

**6**

திருமூலர் *(முனைவர் அ.அறிவொளி)*
மெய்கண்டார் *(முனைவர் ந.இரா.சென்னியப்பன்)*
தாயுமானவர் *(முனைவர் இ.சுந்தரமூர்த்தி)*

**7**

வீரமாமுனிவர் *(முனைவர் ம.செ.இரபிசிங்)*
குணங்குடி மஸ்தான் *(முனைவர் தக்கலை பஷீர்)*
மகாகவி பாரதியார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*

**8**

சாந்தலிங்க சுவாமிகள் *(தவத்திரு.சாந்தலிங்க இராமசாமி அடிகளார்)*
கந்தசாமி சுவாமிகள் *(புலவர் ப.வெ.நாகராசன்)*
சுவாமி சித்பவானந்தர் *(வழக்கறிஞர் மு.மாரியப்பன்)*

**9**

சிவப்பிரகாசர் *(முனைவர் ம.மனோன்மணி)*
சிவஞான முனிவர் *(முனைவர் வே.செல்லாத்தாள்)*
வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் *(முனைவர் நெல்லை ந.சொக்கலிங்கம்)*

**10**

ஆதிசங்கரர் *(எஸ்.வைத்தியநாத கிருஷ்ணன்)*
அருணகிரியார் *(முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்)*
குமரகுருபரர் *(முனைவர் இரா.மோகன்)*